

# திருமுறைகளில் இறைமாண்பு

## சிற்றிலக்கிய நோக்கில்

அ. மாதவி

# திருமுறைகளில் இறைமாண்பு

(சிற்றிலக்கிய நோக்கில்)

அ. மாதவி, எம்.ஏ., எம்ஃபில்,
தமிழ் விரிவுரையாளர்
திரு. ஆ. கோ. அரசு கலைக்கல்லூரி
திண்டிவனம்

சுமதி பதிப்பகம்
19, வேதபுரீநத்தம் சாலை
பாகூர் - 607 402
புதுச்சேரி

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | அ. மாதவி |
| நூல் தலைப்பு | : | திருமுறைகளில் இறைமாண்பு (சிற்றிலக்கிய நோக்கில்) |
| பாடு பொருள் | : | பக்தி இலக்கியங்களும் சிற்றிலக்கியங்களும் |
| முதற் பதிப்பு | : | நவம்பர், 1996 |
| எழுத்து | : | 10 புள்ளி |
| பக்கம் | : | 166 பக்கங்கள் |
| படிகள் | : | 750 |
| அச்சகம் | : | சபாநாயகம் அச்சகம், சிதம்பரம். |

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் நிதி உதவியுடன் இந்நூல் வெளியிடப்படுகின்றது.

விலை: உருபாய் **30-00** மட்டும்

படையல்

தில்லையில் திருநடம் புரியும்
திருச்சிற்றம்பல வாணனுக்கு...

# நூலினுள்...

# அணிந்துரை

'செந்தமிழ்ச்செல்வர்', 'தமிழாகரர்'
'நல்லாசிரியர்' முனைவர் ச. சாம்பசிவனார்
ஆசிரியர், 'தமிழ் மாருதம்', - மதுரை-1

தமிழகத்திலும், உலகின் பல்வேறு நாடுகளிலும் வாழும் தமிழர்தம் கைகளில் தவழும் தரமான தமிழ்த்திங்கள் இதழ் 'தமிழ் மாருதம்.' கடந்த ஆறு ஆண்டுகளாகத் தண்டமிழ் மணம் பரப்பிவரும் இவ்விதழ், தொடக்ககால முதற்கொண்டே பல்வேறு பரிசுப் போட்டிகள் நடத்தி வருகின்றது. அவ்வகையில் 1993 - ஆம் ஆண்டில், ''திருமுறைகளில் சிற்றிலக்கியக் கூறுகள்'' என்னுந் தலைப்பில் பரிசுப்போட்டி ஒன்று நிகழ்ந்தது. இதிற் பங்குபெற்றோரில், குறிப்பிடத்தக்க பெருமைக்குரியவர், புதுவைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையின் ஆய்வாளர் செல்வி. அ. மாதவி அவர்களாவர்! போட்டிக்கென எழுதப் பெற்ற கட்டுரை, இப்போது நூல்வடிவம் பெற்றுத் தமிழ் மணமும், சைவ மணமும் ஒருங்கே பெற்றுத் திகழ்வது, மகிழ்ச்சிக்குரியது!

தமிழ் இலக்கிய உலகில் பேரிடம் வகிப்பது 'பத்தி இலக்கியம்.' புதிய புதிய இலக்கிய வகைமையின் உருவாக, நிலைக்களனாக அமைந்த சிறப்பு, இப் பத்தி இலக்கியத் திற்கு உண்டு!

சைவத் திருமுறைகள் - பன்னிரண்டு. இவற்றை நன்கு ஆய்ந்து, எந்தெந்த நூலில், எவ்வெவ் வகையான சிற்றிலக்கியக் கூறுகள் அமைந்துள்ளன என்பதை, மேலோட்டமாகக் கூறாமல், ஆழ்ந்தகன்ற தம் நுண் ணறிவால், தக்க சான்றுகள் காட்டி விளக்குகின்றார் இந்நூலாசிரியர்.

"சைவத்திருமுறை - தொகையால் பன்னிரண்டு; இயற்றிய அருளாளர் எண்ணிக்கை - 27; நூல்களின் எண்ணிக்கை - 40; பாடல்கள் எண்ணிக்கை ஏறத்தாழ- 18,000. இத்துணையும 'திருமுறை' என்ற பொதுச் சொல்லால் குறித்தனர் சமயச் சான்றோர்!" என்று கூறுமிவர், "சிற்றிலக்கியம் தொண்ணூற்றாறு என்பர்; ஆனாலும் புதிது புதிதாகக் கிளைத்துப் பல்கிப் பெருகி வருவது!" என்றும் கூறுவது ஆய்வாளர்கள் சிந்திக்கத் தகுவது!

சிற்றிலக்கியங்கள், பொருள் நிலையால் - சிலேடை- களால் - கீர்த்தனைகளால் - ஆத்திசூடி போன்ற எழுத்து வகையால் - 'பஞ்சகம்' போன்ற எண் வகையால் - 'ஊசல்' போன்ற நாட்டுப்புறவியல் வகையால் - 'அந்தாதி' போன்ற யாப்பு வகையால் இவ்வாறு பல்வகைகளாகப் பாடுபடுத்தப்படும்.

நூலாசிரியர், பல்வேறு சுவையான செய்திகளைத் தருகின்றார். அவற்றுட் சில இவண் சுட்டத்தகும்:

1. மணிவாசகரின் திருக்கோவையாரில் இடம்பெற்ற 'அலங்காரம்' என்ற சொல், பின்னாளில் சிற்றிலக்கியம் உண்டாக ஏதுவானது. (எ.டு. கந்தரலங்காரம்);

2. "கோடி காவு சேர்மினே!" எனச் சம்பந்தர் பாடும் பதிகம், ஆற்றுப்படைச் சாயலுடன் அமைந்துள்ளது;

3. மணிவாசகர், "அந்தமிலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய்!" என்று அருளுவது, 'ஆனந்தக் களிப்பு' உருவாக ஏதுவாயிற்று;

4. திருவாசத்தில் பரவலாகப் பேசப்படும் 'இரங்கல்' "அழுங்கல், அழிதல், முறையீடு, ஆற்றாமை" எனப் பல வடிவங்கள் பெற்றது;

5. ஒன்பதாம் திருமுறை சார்ந்த 'திருவிசைப்பா', தனித்ததோர் இலக்கிய வடிவத்தைத் தருவதாக அமைந்து உள்ளது.

6. திருமுறைகளில் அடியார்க்குச் செய்யும் 'உப தேசமு'ம்; உலகிற்கும் நெஞ்சுக்கும் செய்யும் 'உபதேசமு'ம் சிற்றிலக்கிய வகையே;

7. அப்பர் தேவாரத்தில், "தலைவன் உலாவருவதைக் காண்பதற்கு நாள்தோறும், தன் சங்கு வளையல்கள் நெகிழவும், உடைசரியவும் இவள் வீதியினருகே அணைந்து நிற்பாள்" எனச் செவிலி கூற்றாக வரும் பகுதி பிற்கால 'உலா' இலக்கியத்திற்கு அடிகோலியது.

8. சம்பந்தரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு, நம்பியாண்டார் நம்பி பாடிய 'ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்', சிற்றிலக்கிய வகையினது;

9. சம்பந்தரின் திருநீற்றுப்பதிகமும், கோளறு பதிகமும், ஒருவகையில் 'கவசம்' தோன்றுதற்கு வித்திட்டதாகக் கருதலாம். (எ.டு. கந்தர் சட்டிகவசம்)

10. கட்டளைக் கலித்துறையில் பாடப்பெறும் 'கோவை' என்னும் சிற்றிலக்கியத்திற்கு மணிவாசகரின் 'திருச்சிற்றம்பலக்கோவையார்' சான்று;

11. பதினோராம் திருமுறையில் இடம்பெறும் 'திருமுகப்பாசுரம்', 'சீட்டுக்கவி' என்னும் சிற்றிலக்கிய வகையினதே;

12. பத்து உறுப்புக்களை விளக்குவதாகிய 'தசாங்கம்', மணிவாசகரின் திருவாசகத்தில் 'திருத்தசாங்கமா'க இலங்குகிறது;

— இவ்வாறு ஆய்ந்து கூறும் இவர் "திருமுறைகளில் சிற்றிலக்கிய வகைகளாக அமைந்தவை; சிற்றிலக்கியப் பொருண்மை மட்டும் கொண்டு, பின்பு இலக்கியங்களாக

அமைந்தவை; புதியனவாகத் தோன்றி வளர்ந்தவை; திருமுறைகளில் சிறிய கூறுகளாக இருந்து, பின்னர் இலக்கியங்களாக அமைந்தவை!'' என்றெல்லாம் விரிவாக எடுத்துரைக்கின்றார்.

''யாமாமாநீ... மாமாயா!'' என்னும் சம்பந்தர் பாடலை எடுத்துக்காட்டி, 'மாலை மாற்று' என்ற சிற்றிலக்கிய வகை என்றும், ''உற்றுமை சேர்ந்து எனுமவர் பாடலைத் 'திருவியமகம்' என்ற சிற்றிலக்கிய வகை என்றும் காட்டுவது கற்று வல்லார்க்குக் கழிபேருவகை தருவதாம்!

''எழுகூற்றிருக்கை, ஏகபாதம் முதலான சித்திரகவிகள் இத்திருமுறைகளில்தான் முதன்முதலாக இடம் பெற்றுப் பின்னர் வளர்ச்சி பெற்றன'' என நூலாசிரியர் கூறுவது, ஆய்வாளர்கட்கு நல்விருந்து!

எண்களை அடிப்படையாகக் கொண்டு 'ஒருபா ஒருபஃது' முதலாயின, திருமுறைகளில் இடம்பெற்ற பாங்கு; அம்மானை, உந்தியார், ஊசல், கோத்தும்பி, சாழல், சுண்ணம், தெள்ளேணம், திருத்தோணோக்கம், பூவல்லி முதலாயின, நாட்டுப்புறப் பாட்டடிப்படையில் எழுந்த திறம் ஆகியவற்றைச் சான்றுகளுடன் நிறுவுகின்றார் ஆசிரியர். 'மாலை' என்ற சிற்றிலக்கியத்தில், ''அங்கமாலை, ஆலந்த மாலை, இரட்டை மணிமாலை, உலா மாலை, ஏகாதச மாலை, நவரத்தின மாலை, நான்மணி மாலை'' எனப் பல்வேறு உட்பிரிவுகள் உள்ளன என்பதைத் திருமுறைகள் வாயிலாக விளக்குவது கற்பார்க்குக் கற்கண்டு!

'யாப்பு' அடிப்படையில் ''அகவல், அந்தாதி, கலிவெண்பா, குறுந்தொகை, திருத்தாண்டகம், திருநேரிசை, திருமுக்கால், விருத்தம், வெண்பா, மேல்வைப்பு'' முதலான பல்வகை யாப்பு வடிவங்களையும் எடுத்து விளக்குகின்றார் இவர்!

“திருமுறைகளில் காணப்படும் மொத்த இலக்கியக் கூறுகள் எண்ணிக்கை 79” என்னுமிவர், “பொருள் நிலையால் – 34; சித்திரகவிகளால் – 9; எண் பெயரால் – 9; நாட்டுப்புறவடிவால் – 9; ‘மாலை’யால் – 7; யாப்பால் – 11” என வகைப்படுத்திக் கூறுவதன் வாயிலாக, ஆசிரியரின் நுண்மாண் நுழைபுலம் அறியத்தகும்.

இவ்வகையில், சிற்றிலக்கியங்களின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் சைவத் திருமுறைகள் அருந்தொண்டாற்றியுள்ளன என்றும்: புதிய யாப்பு வடிவில் பண்ணோடு பாடிப் புதுமை செய்த பெருமை சிவனடியார்கட்கு உரியது என்றும்; சம்பந்தரும் மணிவாசகரும் இவற்றிற்காகச் செய்த பணி அளவிடற்கரிது என்றும்; பெண்களையும் உளப்படுத்தி இலக்கியம் படைத்த பெருமை மணிவாசகருக்குரியது என்றும்; ‘தாண்டகம்’ என்ற யாப்பு வடிவை அறிமுகப் படுத்தித் ‘தாண்டகவேந்தர்’ என்ற சிறப்புப் பெற்றவர் நாவரசர் என்றும்; சிவனடியார்களை வரிசைப்படுத்தி உரைப்பதில் முன்னோடியாக விளங்கியவர் சுந்தரர் என்றும்; இவற்றால் தமிழின் பெருமையினையும் நம்பெருமான் சிவபெருமானின் அருமையினையும் அறிய முடிகிறது என்றும் – இவ்வாறு அரிய கருத்துக்களை நுவலும் தமிழ்க் கருவூலமாக விளங்கும் நூல் இது எனலாம்.

கடும் உழைப்பு, திருமுறைகளில் ஈடுபாடு, இலக்கணப் புலமை இவையாவும் ஒருங்கே பெற்ற ஒருவரால்தான் இத்தகைய சிறந்த நூலை உருவாக்க முடியும்! அத்தகைய சிறப்பு செல்வி. அ. மாதவி அவர்கட்கு உரியது என மனமுவந்து பாராட்டுகின்றோம். இவர், இன்னும் பல நல்ல பயனுள்ள தமிழ் நூல்களை எழுத வேண்டும் என்பது எம் விருப்பம்.

இந்நூலினைத் தமிழ் ஆர்வலர்கள் குறிப்பாகச் சைவ மெய்யன்பர்கள் படித்துப் பயன்பெற வேண்டும்!

தமிழ் வாழ்க!

தி. வ. ஆண்டு 2027 — அன்பன்,

மதுரை – 1. — ச. சாம்பசிவனார்.

# மதிப்புரை

சிலம்பு நா. செல்வராசு
புதுச்சேரி

## பக்திஇலக்கியமும் சிற்றிலக்கியமும்

பக்தி இலக்கியங்கள் குறித்தும் சிற்றிலக்கியங்கள் குறித்தும் புதிய ஆய்வுச் சிந்தனை போக்குகள் தமிழக ஆய்வுப்பரப்பில் புகுந்த நிலையில் இந்நூல் வெளிவருவது குறிக்கத்தகும் வரவாகும் பக்திஇலக்கியங்கள் தோன்றிய சமகாலத்தில் அவை இலக்கியங்களாக ஏற்றுக்கொள்ளப் பெற்றனவா எனவும் தமிழிலக்கிய வரலாற்றில் இவற்றை ஏற்றுப் பக்தி இலக்கியக்காலம் என்று கூறுவது போன்ற ஓர் இலக்கியப் பிரக்ஞை இவை தோன்றிய காலத்தில் காணப்பட்டதா எனவும் வினாக்கள் எழுப்பப் பெற்று (கா. சிவத்தம்பி. - 1995) விவாதங்கள் நடந்து வரும் சூழலில் பக்திஇலக்கியப் பாடல்கள் ஏனைய இலக்கியங்கள் போன்று எழுதப்பெறாமல் இசை வடிவில் பாடப்பெற்றன. பின்னர் அவை நீண்டகால நீட்சிமைக்குப் பின்னர் எழுத்துரு பெற்றுத் தொகுக்கப்பெற்றன என்ற வாதம் முன் வைக்கப் பெற்றுள்ளது.

பக்தி இலக்கியங்கள் எழுந்த காலத்தில் அவை நாட்டார் வழக்காற்றியலோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தன (க. கைலாசபதி-1996) என்ற கருத்து மேற்கூற்றை அரண் செய்ய உதவும். ஆகவே பக்தி யிலக்கியங்கள் கோயிற் பாடல்களாக வழிபடுபாடல்களாக நாட்டாரியல் தன்மையில் தோற்றம் கொண்டு பின்னர்ச் செவ்வியல் நிலையை எய்தினவாதல் வேண்டும்.

எனவேதான் இப்பாடல்களில் சிற்றிலக்கியக் கூறுகள் மிகுந்துள்ள நிலையைக் காணமுடிகிறது. 'சிற்றிலக்கியம்' எனும் சொற்றொடர் பொருள் வாதம் எமக்கு உடன் பாடன்று. சிற்றிலக்கிய வகைமைகள் 412 எனக் கண்டறியப் பட்டுக் கணக்கிட்ட பின்னரும் 96 சிற்றிலக்கியங்கள் எனத்

திரும்பத் திரும்பச் சொல்லுதலும் 'சிறு' என அடைமொழி தந்து அவற்றை அழைப்பதும் ஏலா நிலையின. இவற்றைத் தனித்தனி இலக்கிய அலகாக 'உலாஇலக்கியம்', 'தூது இலக்கியம்' எனப் பெயரிட்டு அழைத்தலே பொருத்த முடைத்து.

இந்நூலுள் 79 இலக்கிய வகைமைகளுக்கான கூறுகள் கண்டறியப்பட்டு விவாதிககப் பெற்றுள்ளன. நாட்டாரியல் தன்மை மிக்க பக்தி இலக்கியங்களில் இக்கூறுகள் காணப் படுதலின இவ்வகை இலககியச் சிந்தனைகள நாட்டாரியல் தன்மையோடு பல்லவர் காலத்து முகிழ்த்து இருந்தன போலும். ஆகவே சிற்றிலககியச் (இப்பெயரீட்டை உடன் படாத நிலையில்) சிந்தனைகள இம் மண்ணிலிருந்து கிளைத்துப் பின்னாளில் செவ்வியல் நிலையை எய்தி இருக்க வேண்டும் என முடிவுரைக்க முடியும.

இந்நூல் பின்வரும் காரணங்களுக்காகப் பாராட்டப் பெறுதல் வேண்டும்.

1. ஒரு நீண்ட இலக்கியப் பரப்பை நோக்கி அவற்றி லிருந்து 79 இலக்கிய வகைமைகளைக் கண்டறிந்து சுட்டியிருப்பதன் பின்னணியில் கடின உழைப்பு காணப்படுகிறது. இதற்காக நூலாசிரியர் பாராட்டத்தக்கவர் ஆகிறார்.
2. சிற்றிலக்கியங்கள் குறித்த ஆய்வுகளுக்கு ஒரு கையேடாக இந்நூல் அமைவு பெற்றதைச் சுட்டிக் கூறுதல் வேண்டும். சிற்றிலக்கிய வரலாற்று ஆய்வுக்கு இது பெரிதும் துணை புரியும்.
3. பக்தி இலக்கியமும் சிற்றிலக்கியமும் ஒன்றை யொன்று சார்ந்து நின்றும் தனித்தனியேயும் நாட்டாரியல் தன்மையோடு விளங்குதலின் இவை தொடக்கத்தில் மக்கள் இலக்கியமாக வெற்றி பெற நாட்டார் தன்மையோடு விளங்கின எனும்

கோட்பாட்டை உருவாக்கும் சமூகவியல் ஆராய்ச்சிக்குத் துணை செய்வதாக உள்ளது.

4. இருபகுதிகளாகவும் ஏழு இயல்களாகவும் செய்தி களைப் பிரித்து வகைப்படுத்தியிருப்பது செய்தித் தெளிவிற்கு வழி கோலுகின்றது.

இரண்டாவது பகுதி சற்று விரிவுபட ஆராய்ந்திருக் கலாம் புராணம் சிவபுராணம், இரண்டிற்கும் உள்ள வேற்றுமைகளை ஆராய்ந்து சிவபுராணம் எவ்வாறு தனி இலக்கிய வகையாகும் என்பது போன்ற விடயங்களில் ஆசிரியர் கூடுதல் கவனம் செலுத்தி இருந்தால் நூல் மிகுசீர்மை பெற்றிருக்கும்.

ஒட்டுமொத்தமாக நோக்கும்போது இந்நூலுள் தமிழிலக்கிய வரலாற்று இலக்கிய வகைமை வளர்ச்சியின் மூன்று செல் நெறிகளை ஊகிக்க முடிகிறது. முதலாவதாகத் தென்படுவது இலக்கிய வகைமையின் தேய்வும் உருமாற்றமும் ஆகும். ஆற்றுப்படை போலும் இலக்கியங்கள் தேய்விற்கும் நாயக - நாயகி பாவம் முதலிய இலக்கியப் பண்புகள் உருமாற்றத்திற்கும் சிரிய எடுத்துக் காட்டு களாகும்

இரண்டாம் செல்நெறியாக ஊகிக்கத் தகுவது பக்தி இலக்கியங்கள் முழு வடிவில் வழங்கிய இலக்கிய வகைமைகள் ஆகும். திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை முதலியவற்றை இச்செல்நெறியில் முகிழ்த்தனவாகக் கொள்ளலாம்.

மூன்றாம் நிலையினவாகக் கொள்ளத்தக்கன பிற் காலத்து எழுந்த இலக்கிய வகைமைகளுக்கான அடிவேர் களைப் பக்தி இலக்கியங்கள் எந்நிலையில் வழங்கி உள்ளன என்று ஆராய்ந்துரைக்கும் போக்காகும்.

இம்மூன்று செல்நெறிகளையும் ஆசிரியர் ஆழமாகச் சிந்தித்து உள்வாங்கி நூலைக்கொண்டு சென்றுள்ள திறத்தைப் பாராட்டுதல் வேண்டும். ஆய்வுலகில் மேலும் சிறக்க நூலாசிரியர்க்கு வாழ்த்துகளும் பாராட்டுதல்களும்.

# என்னுரை

தமிழ் இலக்கிய வளர்ச்சிச்குப் பக்தி இலக்கியங்களும் பெரும்பங்கு ஆற்றியுள்ளன. இவற்றின் நோக்கம் இறைவன் மீது தாம் கொண்ட அன்பைக் காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்க எடுத்துரைப்பதே. இருப்பினும் ஒரே வகையான யாப்பில் இசையில் பாஅமைப்பில் இவை அமையாமல் கற்பாரும் கேட்பாரும் போற்றிப்புகழும் நிலையில் புதிது புதிதான இலக்கிய வடிவங்களையும் வகைகளையும் கொண்டிலங்குகின்றன. அவ்வகையில் சிவனடியார்களாகிய திருமுறையாசிரியர்களின் திருமுறை களைப் பயிலுந்தோறும் அதிலுறைகின்ற இறைமையைப் போன்றே அதன் அமைப்பும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது.

திருமுறைகள் சைவத்தின் மறுமலர்ச்சியை வளர்ச்சியை வாழ்வைத் தம் அடிநாதமாகக் கொண்டிருப்பினும் இறையின் மாண்பைக் கூறுவதை நோக்கமாகக் கொண் டிருப்பினும் புதிய புதிய இலக்கிய மலர்ச்சிக்கும் வழிவகை செய்துள்ளன. இறைவன் பல்லுருவினன், பல்திறத்தினன் என்பதையுணர்ந்த இறையன்பர்களும் அவனை அவ் வண்ணமே பாடும் ஆசையில் பல சிற்றிலக்கியக் கூறு களுக்கும் வகைகளுக்கும் பாலம் அமைத்துத் தமிழில் சிற்றிலக்கியங்களின் பெருக்கத்திற்குத் தாமும் துணை போகியுள்ளனர். பக்திமணம் கமழ்வதானாலும் அவற்றின் ஊடே இசைமணமும் வடிவழகும் கண்டும் கேட்டும் இன்புறத்தக்க வகையில் அமைகின்றன.

இதுவரையில் தமிழ் இலக்கிய உலகம் திருமுறைகளில் இறையின் பெருமையையும் இசையின் மாண்பையும் ஆராய்ந்து கண்ட அளவிற்கு இலக்கிய வகைமைக்கும் வடிவத்திற்கும் அவை கொடுத்துள்ள இன்றியமையாமை காணப்படவில்லை. (திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள் - ம. சா. அறிவுடை நம்பி) சிற்சில முயற்சிகள் இதுபோன்று இப்போது தொடர்ந்து வருகின்றன.

இக்குறையை மனத்திற்கொண்டோ என்னவோ 'தமிழ்மாருதம்' என்ற திங்களிதழ், திருமுறைகள் தொடர்பான கட்டுரைப் போட்டிகளை நடத்தி அக்கட்டுரைகளை நூல்களாக வெளியிட்டு வருகின்றது. அவ்வகையில் இந்த இதழ் 1993 ஆம் ஆண்டில் 'திருமுறைகளில் சிற்றிலக்கியக் கூறுகள்' எனுந் தலைப்பில் நூறு பக்கங்களின் அளவில் கட்டுரைப் போட்டி ஒன்றை நடத்தியது. 'திருமுறைகளில் இறைமாண்பு (சிற்றிலக்கிய நோக்கில்)' எனும் இந்நூல் உருவாக இப்போட்டியே களம அமைத்துக் கொடுத்தது. ஏனெனில் அப்போட்டிக்கு எழுதிய கட்டுரையே இந்நூலாக மறுவடிவம் கொள்கின்றது. இது திருமுறைகளில் உள்ள இலக்கியப் படிமங்களைக் காணும் ஒரு சிறு முயற்சியின் விளைவாகும்.

'திருமுறைகளில் இறைமாண்பு (சிற்றிலக்கிய நோக்கில்), எனும் பெயரில் அமையும் இந்நூலில் இரண்டு பகுதிகள் அமைந்துள்ளன. முதல் பகுதி பல இயல்களைக் கொண்டதாய்த் திருமுறைகளில் படிந்துள்ள இறைமாண்பை யுரைக்கும் சிற்றிலக்கியக் கூறுகளையும் பொருண்மைகளை யும் வடிவத்தையும் பாகுபடுத்தியுரைக்கின்றது. திருமுறைகள்-சிற்றிலக்கியங்கள் இவற்றின் பொது முன்னுரை, திருமுறைகளில் உள்ள சிற்றிலக்கிய வடிவங்களின், பொருள்களின் அடிப்படையில் பொருள் நிலையால்

சித்திரகவிகளால்- எண்ணின் பெயரால்- நாட்டுபுறவியல் வடிவங்களால்- மாலை பேரன்ற தனிவகையால்-யாப்பு வடிவால் காணப்படுவனவற்றைத் தனித்தனியே பிரித்து இயல்களாகப் பகுத்துரைக்கின்றது.

இரண்டாவது பகுதி திருமுறைகளில் பயின்றுவரும் சிற்றிலக்கியப் படிமங்களுக்கான தோற்றச் சூழல்கள் சிலவற்றைச் சுருக்கம் கருதி எடுத்துரைப்பதாக அமை கின்றது. இறுதியில் இரண்டு பகுதிகளிலும் கிடைத்த முடிவுகள் தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன.

இந்நூல் இறையின் மாண்பைச் சிற்றிலக்கியங்களின் துணையோடு திருமுறைகள் எவ்வாறு இயம்புகின்றன என்பதனைத் தொட்டுக் காட்ட விழைந்ததன சிறு விளைவு. இந்நூலைத் தொடர்ந்து திருமுறைகளின் இலக்கிய வடிவங்கள் குறித்து ஆய்வுகள் தொடரப் பெறுமானால் இதுவே இந்நூல் பெறும் வெற்றியாகும். நோக்கமும் விருப்பமுங் கூட அதுவேயாகும்.

'தமிழ் மாருதம்' இதழில் 'திருமுறைகளில் சிற்றிலக்கியக் கூறுகள்' எனுந்தலைப்பில் போட்டி ஒன்றை நடத்தி என்னை எழுதத்தூண்டியதோடு இந்நூல் வெளிவரவும் இந் நூலுக்குச் சிறந்ததொரு அணிந்துரை வழங்கி உதவியவரும் தமிழ்த் தொண்டைத் தம் உயிர் மூச்சாகக் கொண்டிருப்ப வருமாகிய பேராசிரியர் முனைவர் ச. சாம்பசிவனார் அவர் களுக்கு நன்றிகள் என்றென்றும்

இந்நூலின் மீதான தன் மனந்திறந்த கருத்துகளை மதிப்புரையாக நல்கியதோடு நூலின் அட்டை செம்மையாக அமைய உதவியவருமாகிய முனைவர் சிலம்பு நா. செல்வராசு அவர்களுக்கும் நன்றிகூற கடமைப்பட்டுள்ளேன்.

போட்டியில் கலந்துகொண்டு கட்டுரை எழுதத் தூண்டியவரும் இந்நூலைத் திருமலை திருப்பதி தேவஸ்

தானத்திற்கு அனுப்பி அந்நிறுவனத்தின் உதவித் தொகையைப் பெற உதவியவரும் நூல் சிறப்புற அமைய நூல்களும் கருத்துக்களும் வழங்கி உதவியவரும் இந்நூல் சிறப்புடன் உருவாக அடிப்படையானவரும் என் தமையனாரும் ஆகிய **முனைவர் அ. அறிவுநம்பி** அவர் களுக்கு நன்றிகள்.

இந்நூலைப் படித்துக் கருத்துகள் வழங்கி நூல் செம்மையுற உதவிய பேராசிரியர் **முனைவர் தி. ப. சித்தலிங்கய்யா** அவர்களுக்கும் அச்சுப்பிழைகளைத் திருத்தி உதவிய தங்கை ம. **வசந்திக்கும்** நன்றிகள். சமயக்கருத்து களை வெளியிட நிதியுதவி அளித்துவரும் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் நிதியுதவிடனேயே இந்நூல் வெளிவருகின்றது. திருமலை வாசனின் அருளைவேண்டி, **தேவஸ்தான அலுவலர்களுக்கு** என் நன்றியையும் வணக்கத்தையும் இதன்மூலம் காணிக்கையாக்குகின்றேன். உரியநேரத்தில் அச்சிட்டு உதவிய சபாநாயகம் அச்சகத் தாருக்கும் இந்நூல் உருவாகப் பல வழிகளில் துணைநின்ற அன்பு உள்ளங்களுக்கும் நன்றிகள். அனைத்திற்கும் இந் நூல் உருவாக மேலாய் முழுமுதற் காரணனாய் நின்ற ஈசன் திருவடிகளை வணங்குகின்றேன்.

அன்புடன்

**அ. மாதவி**

# திருமுறைகளில் சிற்றிலக்கியக் கூறுகள்

## முன்னுரை

உயர்தனிச் செம்மொழியாகிய தமிழின் இலக்கியவுலகம் பரந்தது; விரிந்தது. காலந்தோறும் தமிழிலக்கியங்கள் பற்பல கோணங்களில் பெருகி வளர்ந்து வந்துள்ளன; வருகின்றன புதிய இலக்கியங்களின் பெருக்கமும், இலக்கிய வகைகளின் உருவாக்கமும் தமிழின் அகல, நீளங்களை உணர்த்தவல்லன. இலக்கிய வகைகள் ஒன்றிலிருந்து பிற கிளைத்தும், ஒன்றுடன் ஒன்று இணைந்தும் பல்வேறு புத்திலக்கியங்களை மலரச் செய்துள்ளன – செய்கின்றன.

ஓரிலக்கிய, இலக்கண ஏடு நுவலும் சொற்கள், அடிகள், பாவகை இவை போல்வனவும் இலக்கியங்களின் தோற்றங் களுக்கு மூலகாரணிகளாக அமைவதைக் காணமுடிகின்றது.

அவ்வகையில் தொல்காப்பியர் காலத்தில் வழக்கில் இல்லாத அல்லது பெரும்பான்மையாகப் பயின்று வராத இலக்கிய வகைகளைப் பின்னாளில் கண்டுணர முடிகின்றது. இவ் வகையான புதிய இலக்கிய மலர்தலுக்கு அடிப்படையாகக் காலச்சூழல், பாடுபொருள்மாற்றம், யாப்புமாற்றம் போல்வனவற்றைச் சுட்டவியலும்.

தமிழிலக்கியவுலகில் பேரிடத்தைப் பெறுபவை பக்தி இலக்கியங்கள். இடைக்கால இலக்கியங்களாக இவை இடம்பெறுகின்றன. இப்பக்திஇலக்கியங்களின் தோற்ற மானது புதிய பாடுபொருள் நிலையைத் தோற்றுவித்த தோடு அமையாது புதிதுபுதிதான இலக்கிய வகைகட்கும் வித்திட்டுள்ளது. பெரும்பான்மையான சிற்றிலக்கிய வகை களை அறிந்து கொள்வதற்குச் சான்றாதாரங்களாகப் பக்தி இலக்கியங்கள் அமைந்துள்ளன. அவ்வகையில் பக்தி இலக்கியங்களின் ஒரு கூறாக விளங்கும் சைவத்திருமுறை களில் உள்ள சிற்றிலக்கியக் கூறுகளில் அமையும் இறை மாண்பைக் காணுவதாக இவ்வெழுத்துரை அமைகின்றது.

எனவே இவ்வாய்வுக் கட்டுரையானது திருமுறைகளில் படிந்துள்ள சிற்றிலக்கியங்கள் நுவலும் இறைமாண்புகளைத் தொகுத்து இனம் காணும் போக்கில் அமைகின்றது. மேலும், சிற்றிலக்கியத்தின் தோற்றத்திற்கான பின்புலங் களைக் காணுவதும், வளர்ச்சியினை உய்த்துணர்வதும் இக்கட்டுரையின் துணைப்பாடுபொருள்களாகும். சைவ சமயத்தில் திளைத்த அடியார்கள் பாடிய பக்திப் பனுவல்கள் புதிய முறையில் - வடிவில் - யாப்பில் அமைந்துள்ளன. பல சிற்றிலக்கியங்கள் இவ்வண்ணம் தோற்றம் பெற்று இன்றளவும் வளர்ச்சி நிலையில் தமிழுக்கு வலுவூட்டு கின்றன என்பதும் அவை ஆண்டவனை அழகுற மொழி கின்றன என்பதும் எண்ணி மகிழத்தக்கன.

**சைவத் திருமுறைகள்**

பக்தி இலக்கியங்களில் குறிக்கத்தக்கவை திருமுறைகளாகும். சிவன் என்னும் நாமம் தமக்கே உரிய செம்மேனி எம்மானாகிய பரம்பொருளின் புகழ்பரவும் அருளாளர்களுடைய அமுதத்தமிழ் வாக்குகளின் தொகுப்புகளே திருமுறைகள் என்று திருப்பெயர் பெற்றுள்ளன என்றுரைப்பர்.

இத்திருமுறைகள் பன்னிரண்டு என்பது அனைவரும் அறிந்த ஒரு வரையறை. இவைமுறையே, திருஞானசம்பந்தர் அருளியவை முதல் மூன்று திருமுறைகள். திருநாவுக்கரசரின் திருமுறைகள் நான்கு, ஐந்து, ஆறாந் திருமுறைகள். ஏழாந்திருமுறை சுந்தரருடையது. எட்டாந் திருமுறை மாணிக்கவாசகரின் திருவாசகமும் ('திரு என்பது கண்மரால் விரும்பப்படும் தன்மைநோக்கம் என்று பேராசிரியர் தம் உரையில் குறிப்பிடுகிறார். வாசகம் என்ற சொல்லை இனிமைமிக்க செஞ்சொற்கள் என்ற பொருளில் கம்பர் வழங்குகிறார். "வாசகம் வல்லார் முன் நின்றுயர்வாய் திறக்கவல்லார்" என்பது கம்பராமாயணம். ஆகவே, திருவாசகம் என்பது, யாவரும் விரும்பும் பண்இனிமைமிக்க தெய்வப் புகழ் மாலை என்று கூறலும் பொருந்தும் என்கிறார். தி. பி. சித்தலிங்கய்யா தமது மெய்யுணர்வு மலர்கள் நூலில் ப. 53-ல்.) திருக்கோவையாரும். ஒன்பதாந்திருமுறை திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்ற தலைப்புகளிலமைந்த நூல்களைப் பெற்றது. அது ஒன்பதுபேர் பாடிய பாடல்களின் தொகுப்பாகும். பத்தாந்திருமுறை திருமூலரின் திருமந்திரம். பதினோராந்திருமுறை நக்கீரர் முதலாய் நம்பியாண்டார் நம்பி ஈறாய்ப் பதின்மூவர் பாடிய பாடல்களின் தொகுப்பாயமைகின்றது. பன்னிரண்டாந்திருமுறை சேக்கிழாரின் பெரிய புராணம்.

"தொகையால் பன்னிரண்டெனவும் இயற்றிய அருளாளர்களின் எண்ணிக்கையால் இருபத்தேழு எனவும் நூல்களின் எண்ணிக்கையால் நாற்பது எனவும் பாடல்களின் எண்ணிக்கையால் சற்றொப்பப் பதினெண்ணாயிரம் எனவும் பரந்துகிடந்த அருளனுபவப் பாக்களையெல்லாம் 'திருமுறை' என்ற பொதுச் சொல்லால் குறிக்கப்பெறும் வழக்கம் சைவப்பெருமக்களிடையே காணப்பெறும் மரபாகும்"[1] என்ற கூற்றின்வழி எண்ணிக்கை வழியே திருமுறைப் பெருமையை உணரமுடியும்.

மேற்சுட்டப்பெற்ற பன்னிரு திருமுறைகளில் காண லாகும் சிற்றிலக்கியக் கூறுகள், அவை காட்டும் இறை மாண்புகள், தொடர்புடைய பிறசெய்திகள் போன்ற வற்றைக் காணுதலே இவ்வாய்வின் விழுமிய நோக்கமாகும்.

**சிற்றிலக்கியங்கள்**

தமிழில் மொழியப்பெறும் 'சிற்றிலக்கியம்' என்ற சொல்லைப் 'பிரபந்தம்' என்ற வடசொல்லிற்கு நிகராகக் காட்டுவர். 'பிரபந்தம்' என்ற இவ்வடசொல்லுக்கு 'நன்கு கட்டப்பட்டது' என்று பொருள் கூறுவர். '96 பிரபந்தம்' என்னும் இவ்வடமொழிச் சொல்லே இன்னாளில் 'சிற்றிலக்கியம்' எனத் தமிழில் வழங்கப்பெறுவதாகவும் குறிப்பர். "சிற்றிலக்கியம் என்னும் சொல்லாட்சி இருபதாம் நூற்றாண்டில் புதிதாகத் தோன்றிய உரைநடை வடிவங் களான சிறுகதை, நாவல் ஆகியவற்றின் தாக்கமாகவும் இருக்கலாம். மேனாட்டு இலக்கிய வகையான 'Short Story' என்பதனை அப்படியே மொழிபெயர்த்துச் 'சிறுகதை' என்று வழங்கியமையே, நம் இலக்கிய வகைகளையும் 'சிற்றிலக்கியம்' என்றும் 'பேரிலக்கியம்' என்றும் பிரித்துக் காண்பதற்குத் தூண்டுகோலாய் இருக்கலாம்."[2] என்ற கருத்தின் வழியே சிற்றிலக்கியம் என்ற சொல்லாட்சி உருவானதைப் பெறவியலும்.

சிற்றிலக்கியம் என்பதற்குப் பலரும் பலவகையில் விளக்கம் அளித்துள்ளனர். அவற்றுள் பின்வரும் கருத்து பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது. "பிரபந்தம் தெய்வத்தின் மீதோ (அ) வள்ளல் மீதோ பாடப்பெறும் ஒரு சிற்றிலக்கியம்; அதன் பொருள் அகமாகவும் இருக்கலாம், புறமாகவும் இருக்கலாம். அதன் யாப்பு வடிவம் ஆசிரியம் தொடங்கி விருத்தம்; கலிவெண்பா வரை எந்த வகையின தாகவும் இருக்கலாம்; பாடல் எண்ணிக்கைக்கும் வரையறை இல்லை; ஆயினும் சில இலக்கியங்கள், பாடல் எண்ணிக்கையை 5, 8. 20, 40, 70, 400 என வரையறுத்துக் கூறுகின்றன"[3] எனினும் சிற்றிலக்கியம் என்பதற்கான முழு விளக்கத்தை இக்கூற்று நல்குவதாகக் கூற இயலாது.

இத்தகைய சிற்றிலக்கியங்கள் 96 வகை என்றொரு மரபு காணப்படுகின்றது. ஆனால் தற்போது 350-க்கும் மேற்பட்ட சிற்றிலக்கியங்கள் தோற்றம்பெற்றுள்ளதாக ந. வீ. செயராமன் போன்றோர் குறித்து உள்ளனர். இதன் வழியே சிற்றிலக்கியங்கள் புதிதுபுதிதாகத் தோன்றிக் கொண்டே இருக்கின்றன என்பதை உணரமுடியும். "இலக்கிய வகைகளை 'எண்ணிக் - கைவிட்டார்' 'எண்ணிக்கை' விட்டாரே ஆவர். நாளும் வளரும் ஒன்றன் வளர்ச்சியை, நாளெண்ணி வாழும் மாந்தர் அளவிட் டுரைக்க இயல்வதோ?"[4] என்ற கருத்து மேற்கூறிய கருத் திற்கு அரண்சேர்க்கின்றது.

சிற்றிலக்கியங்களின் வகைகளைப் பற்றிய எண்ணிக்கை எப்படியிருப்பினும் திருமுறைகளில் மிகப்பெருமளவில் சிற்றிலக்கிய வகைகளும் சிற்றிலக்கியக் கூறுகளும் காணக் கிடைக்கின்றன. திருமுறைகளில் காணப்பெறும் யாப்பு-வடிவம்-பொருள் போன்றவற்றிலும் நாட்டுப்புற மரபுகள் போன்றவற்றிலும் சிற்றிலக்கியக் கூறுகளின் சுவடுகளை இனங்காண முடிகின்றது.

**திருமுறைகளில் சிற்றிலக்கியக் கூறுகள்**

திருமுறைகளில் ஏராளமான சிற்றிலக்கியக் கூறுகள் காணப்பெறுகின்றன இவற்றின் தோற்றத்திற்கு, "ஆசிரியரின் ஆக்கத்திறனும் படைப்பாற்றலும், காலத் தாக்கமும், சமுதாயச்சூழலும் புதுப்புது இலக்கிய வகைகள் தோன்றக் காரணமாகி, பிரபந்த எல்லையை விரித்து, எண்ணிக்கையைப் பல்கச் செய்கின்றன. ஒவ்வொரு பெயரில் அல்லது வகையில் ஓரிரு நூல்கள் உருவாகிச் சுருக்கம் காட்ட, வேறு சிலவற்றில் நூற்பெருக்கம் அமைந்து செல்வாக்கும் பயிற்சியும் புலப்படுத்தல் அமைகின்றது"[5] என்ற கருத்தைச் சான்றாக்க முடியும்.

இச்சிற்றிலக்கியங்கள் "பல்நிலையினவாகவும் பல இயல்பினவாகவும் அமைகின்றன. அகப்பொருட்கோவை ஆற்றுப்படை என்பன போன்று (1) பொருள் நிலையால் பாகுபடுவன உள; அன்றியும் (2) சிலேடை போன்ற அணிவகையும் (3) கீர்த்தனை போன்ற இசை வகையும் (4) ஆத்திசூடி போன்ற எழுத்துவகையும் (5) பஞ்சகம் போன்ற எண் வகையும் (6) ஊசல் முதலிய நாட்டுப்புற வகையும் (7) மஞ்சரி (8) மாலை போன்ற தனிவகைகளும் (9) அந்தாதி போன்ற யாப்பு வகைகளும் காணப்படு கின்றன."[6]

ஓர் இலக்கியத்தின் பெயரை மட்டும் கொண்டு அதனைத் தனித்த இலக்கிய வகையெனக்கருத முடியுமா என்ற ஐயமும் எழுகின்றது. ஏனெனில் பெயர் வேறு படினும் வகை ஒன்றாகவே அமைகின்றது. பெயர் ஒன்றே யாயினும் வகையில் வேறுபடுவனவும் உள்ளன. இதனால் தான் தமிழண்ணல் பின்வருமாறு கூறுகின்றார்:

"இலக்கிய வரலாற்றில், வகைகள் என்பன அரிமா நோக்கு உடையன என்பர். ஒருவகை முன்னைய வகை

களிலிருந்து கிளைக்கின்றது. பின்னைய வகைகள் கிளை விட அடிப்படையாய் அமைகின்றது. ஒவ்வொரு வகையும் பல உட்பிரிவுகளை உடையது. சில வகைகள் பிள்ளைப் பேறு போலப் பல்கும் தன்மையன. சில உடன் பிறப்புப் போல் தோன்றுவன. தாயும் சேயும் போல்வன மட்டுமன்றிப் பேரனும் பேர்த்தியும் போல்வனவும் உள. சில தூரத்து உறவுடையன. முதலும் சினையுமாய்ச் சினையும் கிளையு மாய்க் கிளையும் கொம்புமாய்ப் பயிரின வகைபோல் வளரும் இலக்கிய வகைமை நினைதற்குரியது''[7]

திருமுறைகளில் காணப்படும் சிற்றிலக்கியக் கூறுகளைத் தொகுத்துக் காணுங்கால் கீழ்க்கண்ட வகைபாட்டுக் கூறுகள் கிடைக்கின்றன:

1. பொருள் நிலையால் பாகுபடுவன.
2. சித்திரகவிகளால் அமைவன.
3. எண்வகைகளால் அமைவன.
4. நாட்டுப்புறப் பாடல்களின் அடிப்படையில் தோன்றியன.
5. மாலை போன்ற தனிவகைகளால் அமைவன.
6. யாப்பு வகைகளால் அமைவன.

இவை மட்டுமன்றி வேறுவழிகளிலும் பாகுபடுத்திக் காண்பதற்கு வாய்ப்புகளுண்டு. எனினும் பெரும்பான்மை கருதியும், முதன்மைப்படுத்திக் காண்பதற்குரிய கூறுகள் கருதியும் மேற்கண்ட வண்ணம் நிலைகள் பலவற்றை வரிசைப்படுத்த வேண்டியதாகிறது. ஒவ்வொரு பகுதி யினையும் ஆழமாகப் பார்க்குங்கால் திருமுறை வரி களிடையே உறங்கிக் கிடக்கும் சிற்றிலக்கியக் கூறுகளை வெளிக்கொணரவியலும். பிறசெய்திகளையும் உடன் காணவும் வாய்ப்பு ஏற்படும். அவ்வாறாகப் பரந்துபட்ட பரப்புடையதாகத் திருமுறைகள் மணங்கூட்டுகின்றன. இறையின் மாண்பை உரைக்கின்றன.

## பகுதி - 1

### இயல் - I

# பொருள்நிலையால் பாகுபடுவன

பலவகையிலும் பொருள்தரும் இலக்கிய வகைகள் இப்பகுதியில் இடம்பெறுகின்றன. உலகப் படைப்பு, களிப்பு, இரங்கல், கோவை, கவசம், உலா, பல்லாண்டு போன்றனவும் பிறவும் தனித்த இலக்கிய வகைகளாக இருந்து வெவ்வேறு பொருள் நிலை தருவனவாக அமைகின்றன. இங்கு இவ்விலக்கிய வகைகளின் பொருள் நிலையினைக் கருதாது அனைத்தையும் ஒரே பகுதியின்கீழ் அடக்கிக் காண முயல்கிறது இப்பகுதி. பல்வகைப் பொருளும், பல்வகை வடிவும் கொண்ட இலக்கியங்களின் தொகுப்புப் பகுதியாக இப்பகுதி அமைகின்றது. பொருள் என்னும் பொதுப்பெயரின்கீழ் இவை அடக்கிக் காணப்படுகின்றன.

## 1.1. அலங்காரம்

அலங்காரம் என்ற ஓர் இலக்கியவகை திருமுறையில் இடம் பெறவில்லை என்றபோதிலும் இச்சொல்லாட்சி அமைந்துள்ளது. அலங்காரம் என்பதற்குப் பல பொருள்கள் கூறப்படுகின்றன. அலங்காரம், சிங்காரம், அழகு, ஆபரணம், விஷ்ணு கோயில்களில் நிவேதிக்கப்படும் அன்னம், குழம்பு, ரசம் முதலிய ஆகாரம், செய்யுளணி, சங்கீத உறுப்பு வகை எனப்பல பொருள்கள் அமைகின்றன.

அலங்கு + ஆரம் — அலங்காரம் எனக் கொண்டு, தேவாரம் போன்று இறைவனுக்கு அணிவிக்கும் சொல் மாலையாகப் - பாமாலையாக இதனைக் கொள்ளவியலும் என்பர்.

மாணிக்கவாசகர் திருக்கோவையாரில் முதன்முதலில், 'பாம்பலங்காரப்பரன்'[8] என்ற சொல்லாட்சியைக் கையாளு கின்றார். சொல் அளவில் இடம்பெற்ற இப்பெயர் பின்னாளில் ஓர் சிற்றிலக்கிய வகையாகத் தோற்றம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. அருணகிரிநாதரின் 'கந்தரலங்காரம்' இவ்வகையின் முதலும் சிறப்பும் உடைய இலக்கியமாக அமைகின்றது.

## 1.2. அண்டகோசம்

'அண்டகோசம்' என்பதற்கு 'உலகப்படைப்பு' என்று மற்றொரு பொருளும் கூறப்படுகின்றது. இவ்வுலகமானது ஐம்பெரும் பூதங்களால் ஆனது. நிலம் நீர் தீ வளி விசும்பு என்னும் ஐம்பெரும் பூதங்களும் கலந்த மயக்கம் உலகம் என்பது தொல்காப்பியர் கருத்து. இதன் விரிவைப் பரிபாடல் சுட்டுகின்றது. மாணிக்கவாசகர் தம் திருவாசகத்தில் இக்கருத்தை இறைமையோடு தொடர் புறுத்திக் கூறுகின்றார். போற்றித்திரு அகவலில் அமையும்

சில வரிகளும் திருவண்டப் பகுதியும் இவ்வகையில் அடங்கு கின்றன.

> "பாரிடை ஐந்தாய் பரந்தாய் போற்றி
> நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
> தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
> வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
> வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி"[9]

என்று இறைவனின் உருவத்தையே உலகப்படைப்பில் காண்கின்றார். திருவண்டப் பகுதியில்,

> "அருக்கனிற் சோதி அமைத்தோன் திருத்தகு
> மதியில் தண்மை வைத்தோன் திண்திறல்
> தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
> வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
> காலின் ஊக்கம் கண்டோன் நிழல்திகழ்
> நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
> மண்ணில் திண்மை வைத்தோன் என்றென்"[10]

என்று உலகப்படைப்பில் ஒவ்வொன்றின் தன்மையையும் கூறிப் பின்னர்,

> "முன்னோன் காண்க, முழுதோன் காண்க"[11]

என்று இறைவன் எல்லாமாகி நிற்கும் தன்மையைச் சுட்டுகின்றார். தனியிலக்கியமாக அமையாது உள்ளடக்கப் பகுதியில் ஒரு துகளாக இப்பகுதி அமைகிறது.

உலகம் தோன்றிய வகையையும் அதன் தன்மையையும் கூறும் பகுதிக்கு 'அண்டகோசம்' என்று பெயர். பின்னர் தனி இலக்கியமாக இது உருப்பெற்றதால், பிரபந்தத் திரட்டு பின்வருமாறு இலக்கணம் அமைக்கின்றது.

> "அண்ட நிலை சாற்றல் அண்டகோசம்
> வகுப்புக் கலிவெண் பாவாம்"[12]

இதன்வழியே, சில வரிகள் என்ற நிலையிலிருந்து மாறி, கலிவெண்பா என்ற யாப்பினால் படைக்கப்படும் தனிச்சிற்றிலக்கியமாக 'அண்டகோசம்' வளர்ந்துள்ளது. பரிபாடலிலேயே குறிப்புக் காணப்படினும் மாணிக்க வாசகரின் திருவாசகத்திலுள்ள போற்றித்திரு அகவலும், திருவண்டப்பகுதியும் இவ்விலக்கியத்தின் தனித்த வளர்ச்சிக்குத் தொண்டாற்றியுள்ளன என்பது இங்குக் கருதத்தக்கதாகும்.

## 1.3. ஆற்றுப்படை

வழிப்படுத்துதல் எனும் பொருள் நிலையில் பரிசில் பெற்ற ஒருவன் பரிசில் பெறவிழையும் பிறனை ஒரு தலைவனிடத்துச் செலுத்துவதாகப் பாடுவதே ஆற்றுப் படையாகும். ''தொல்காப்பியத்தில் குறிக்கப்படும இவ்வாற்றுப்படை சிறிய தனிப்பாடலாக அமைநதமையைப் புறநானூறும் பதிற்றுப்பத்தும் காட்ட, நெடும்பாடலாக வளர்ந்தமையைப் பத்துப்பாட்டின் ஐந்து ஆற்றுப் படைகளும் காட்டுகின்றன. மிகப் பண்டைக் காலத்திலேயே தோன்றிவிட்ட இலக்கிய வகையாக இருந்த போதும் இவ் வகையில் பல நூல்கள் அமையாமை சுட்டத்தக்கது. பிற் காலக்கலம்பகங்களில் சில, ஆற்றுப்படையையும் ஓர் உறுப்பாகக் கொண்டமைகின்றன''[13] என்று குறிப்பிடப் படுகின்ற கருத்தின்வழி ஆற்றுப்படை இலக்கியத்தின் அருகிய தன்மையை உணரமுடியும்.

பத்துப்பாட்டில் ஓர் ஆற்றுப்படையாக விளங்கும் திருமுருகாற்றுப்படை, பதினொராந் திருமுறையில் பதினேழாவது பிரபந்தமாக வைக்கப்பெற்றுள்ளது. திரு முருகாற்றுப்படையென்பது முருகக்கடவுளின் அருளைப் பெற்ற ஒருவர் அந்த அருளை நாடும் மற்றவர்க்கு வழி காட்டுவதாக நக்கீரர் பாடிய பாட்டு. 317 அடிகளால்

அமைந்தது. இந்த ஆற்றுப்படையின் தன்மை பற்றிப் பின்வருமாறு கூறப்படுகின்றது.

"ஆற்றிடைக்காட்சியுறழத் தோன்றிப் பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச் சென்று பயனெதிரச் சொன்னபக்கம்' எனவரும் தொல்காப்பியத் தொடருக்கு, 'இல்லறத்தைவிட்டுத் துறவறமாகிய நெறியில் நிற்றல் நன்றென்றும் கண்டகாட்சி தீதென்றும மாறுபடத் தோன்றுகையினாலே தான் இறைவன் இடத்துப் பெற்ற கந்தழியாகிய செல்வத்தை' யாண்டுந்திரிந்து, பெறாதார்க்கு இன்னவிடத்தே சென்றாற் பெறலாம்' என்று அறிவுறுத்தி, 'அவரும் ஆண்டுச் சென்று அக்கந்தழியினைப் பெறும்படி சொன்ன கூறுபாடு' எனப்பொருள் வரைந்து தெய்வத்தினிடத்து ஆற்றுப்படுத்துவதாகிய ஆற்றுப்படைக்குரிய சிறப்பு இலக்கணமாகக் கொண்டார் நச்சினார்க்கினியர்"[14] என்று கூறப்படுகின்ற கருத்தின் வழி, திருமுருகாற்றுப்படையின் இலக்கணத்தை உணரமுடியும்.

எல்லாம் வல்ல இறைவனாகிய முருகனையடையும் நெறியறிந்து சென்றுசேரும் இயல்பு சிற்றறிவினர்க்கு இல்லை. அரும்பெறல் மரபின்பெரும்பெயர் முருகனாகிய பெருமான் நம்மை நோக்கி எளிதில் வந்து அருள் சுரக்கும் தன்மை உடையவன். அவன் அவ்வாறு நம்மைநோக்கி, தானே வந்து எளிதில் அருள் சுரக்கும் வழிகளைக் கூறும் முறையில் அமைவதே திருமுருகாற்றுப்படை ஆகும்.

இத்திருமுருகாற்றுப் படையேயன்றி, 'பக்திக் காலமும் இறைவனைத் தலத்தைச் சார்த்திப் பாடும்போது, அடியவரையும், அன்பரையும், தன் நெஞ்சையும் அத்தல இறைவன்பால் ஆற்றுப்படுத்தும் பாடலடிக் கூறுகளைத் தருகின்றது. 'கோலக்காழிசேர்மினே' (233) எனவும், 'கோடிகாவுசேர்மினே' (235) எனவும், 'வீரட்டானஞ்

சேர்துமே' (263) எனவும் 'எந்தையாரூர் தொழுதுய்யலா மையல் கொண்டஞ்சேல் நெஞ்சே' (215)எனவும் வரும் சம்பந்தர் தேவாரப் பதிகங்கள் இவ் ஆற்றுப்படுத்தும் சாயலுடன் அமைகின்றன.''[15]

இவற்றிற்குப் பின் பதினான்காம் நூற்றாண்டிலேயே ஆற்றுப்படையில் மறுமலர்ச்சி காணப்படுகின்றது. இதன் பின்னர் பல ஆற்றுப்படைகள் இன்றளவும் தோன்றிக் கொண்டே இருக்கின்றன.

## 1.4. ஆனந்தக் களிப்பு

ஆனந்தக்களிப்பு என்பது பெருமகிழ்ச்சி, மகிழ்ச்சி மிகுதியால்பாடும் ஒருவகைப்பாடல் ஆகியவற்றைக் குறிக்கும் ஒருசொல்லாகும் திருமுறைகளில் இவ்வகையில் ஒருதனித்த இலக்கியவகை அமையவில்லை எனினும் 'ஆனந்தக்களிப்பு' எனும பெயர் எட்டாந்திருமுறையில் திருவாசகத்தில் அமையும் திருவம்மானைக்கு வழங்குகின்றது.

''இறைவனது அம்கருணை வார்கழலால் தம் உள்ளத்தே ஊற்றெடுத்துப் பெருகிய பேரானந்தத்தில் திளைக்கும் நிலையில் இத்திருவம்மானையை அருளிச்செய் தமையால், இதற்கு 'ஆனந்தக் களிப்பு' என முன்னோர் கருத்துரை கூறினர்''[16] என்ற கருத்தின் மூலமும் இதனை உணரமுடியும். திருவருள் அனுபவத்தில் உண்டாகும் பெரு மகிழ்ச்சியே பொருளாக அமைவதால், அதனைச்சுட்டி இவ்விலக்கியவகை 'ஆனந்தக் களிப்பு' எனப்படுகின்றது என்றும் கூடக் குறிப்பிடுவர்.

''பந்தம் பரியப் பரிமேற்கொண் டான்தந்த
அந்தமிலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய்''[17]

என்ற வரிகள் கவனிக்கத்தக்கன. முடிவில்லாத ஆனந்த மாகிய இன்பத்தைப் - பெருமகிழ்ச்சியைப் - பாடுவதாக

அமைகின்றது இப்பகுதி. பிற்காலத்தில் 'ஆனந்தக்களிப் பிற்கு' இலக்கணம் வகுக்கப்பட்டுப் பல இலக்கியங்களும் தோன்றியுள்ளன. இவ்வகையில் கடுவெளிச் சித்தரின் ஆனந்தக்களிப்பும், வள்ளலாரின் ஆனந்தக் களிப்பும் புகழும் சிறப்பும் பெற்றவை.

## 1.5. இரங்கல்

இரங்கல் என்பது அழுகை, நெய்தல் உரிப்பொருளான தலைவன் பிரிவினால் தலைவி இரங்கல், ஒலி, யாழ், நரம் போசை, மனமழிதல் போன்ற பலபொருள்களைக் கொண்ட ஒருசொல்லாக விளங்குகின்றது.

நெய்தல் திணையின் உரிப்பொருளாகிய இரங்கலை அகத்திணை நூல்கள் பரக்கக் கூறுகின்றன. அகப்பொருள் மரபாகிய இவ்விரங்கலை, 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கியும்', 'நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து உருகியும் திளைக்கும்' இறைமைக் காதல் ஏக்கத்திற்கும் பயன்படுத்திக் கொண்டனர் இறையன்பர்கள்.

இவ்வகையில் அப்பர், சம்பந்தர், சுந்தரர் பாடல்களில் சிறு கூறாக இருக்கும் இரங்கல் திருவாசகத்தில் பரவலாகக் காணப்படுகிறது. இது அழுங்கல், அழிதல், முறையீடு, ஆற்றாமை எனப் பல வடிவங்களையும் பெற்று வெளிப் பட்டுள்ளது. சம்பந்தரின் 154-ஆம் பதிகத்தில், தலைவியின் நிலைக்காக இரங்கும் தாயின் மொழியிலும், 'அழகாவெனு மாயிழையாளவளே' (159-ஆம் பதிகம்) என்பதிலும் இரங்கலைக் காணமுடிகின்றது. மேலும் காமம் மிக்க கழிபடர் கிளவியாக இயற்கைப் பொருளை விளித்துப் புலம்பியிரங்கும் வகையிலும் (321-ஆம் பதிகம்) இரங்கல் வெளிப்பட்டுள்ளது. அப்பரின் பாடலில், இறைவன் மாட்டுக்காதல் பூண்டு அலமுறும் பேதைக்காக இரங்கும் தாயுள்ளம் வெளிப்படுகின்றது. இது 132, 143, 153, 154, 159, 178 ஆகிய பதிகங்களில் பேசப்படுகின்றது.

சுந்தரர் இறைவனிடம் நட்புப்பூண்டவர் என்ற போதிலும் நாயக, நாயகி பாவம் கொண்டு அவர் பாடியுள்ள பாடல்களில் இந்த இரங்கல் இடம் பெற்றுள்ளது. தன்னிலைக்கிரங்கி அருள் வேண்டும் பதிகமாகச் சுந்தரரின் ஏழாந்திருமுறையில் 46-ஆம் பதிகம் அமைகின்றது. மாணிக்கவாசகரின் குயிற்பத்து, இறைவனை விரும்பிய ஒருத்தி, குயிலைநோக்கி 'இறைவனை என்பால் வரக் கூவுவாயாக' எனக்குறையிரந்து வேண்டுவதாகவும், செத்திலாப்பத்தானது 'ஆன்மபோதம் முற்றும் கெட நினது திருவருளிலே தோயப் பெற்றிலனே' எனக்குறை யிரந்து வேண்டுவதாகவும்,

ஆசைப்பத்தானது, உலகப்பொருள்களில் தமக்குள்ள ஆசையை அறவே நீக்கித்திருவருளில் தாம்கொண்டுள்ள ஆசையை நிறைவேற்றி அருளும் வண்ணம் தம்மை ஆட்கொண்டருளிய இறைவனை இறைஞ்சி வேண்டுவ தாகவும், வாழாப்பத்தானது, இறைவனிடம் 'நினது பற்றினையன்றி இவ்வுலகப் பொருள்களிற்சிறிதும் பற்றுடையேன் அல்லேன்; உலக வாழ்க்கையிற் சிக்குண்டு மேலும் வாழ்தற்கு விரும்புகின்றிலேன். எளியேனை நின்பால்வருக என அழைத்தருளி நின் திருவடிநிழலினை எனக்கருள்வாயாக' என அழுதரற்றி வேண்டுவதாகவும், குழைத்தபத்தானது, பண்டைக் கொடுவினைகள், தம்மை வருத்துவதை ஆற்றாது வருந்தி அத்துன்பங்களுக்குக் காரணமாகிய தம் பிழைகளை நினைந்திரங்கி வேண்டுவ தாகவும்,

திருவேசறவு என்பது இறைவனின் பெருங்கருணைத் திறத்தினை நினைந்து நினைந்து உள்ளங்குழைந்து இரங்கிப் போற்றும் வகையினதாகவும் காணப்பெறுகின்றன. இவ்வாறு பக்தி, அகம் ஆகிய இருநிலைகளிலும் இரங் கலைப் பயன்படுத்தியுள்ளனர். அகம்சாரா நிலையிலும்

'இரங்கல்' மாணிக்கவாசகரின் பாடல்களில் மட்டுமின்றிப் பட்டினத்தாரின் 'இறந்தகாலத்திரங்கலி'லும் அமைகின்றது. சமயக்குரவரின் பாடல்களில் இரங்கல் என்ற சொல்லாட்சி அமையவில்லை - யாயினும் அதன் பொருண்மையை விளக்குவனவாக அவை அமைகின்றன. பிற்காலத்தில் தான் இலக்கியத்தின் பெயரிலேயே இரங்கல் என்னும் பின்னொட்டைக் காணவியலுகின்றது.

## 1.6. இசைப்பா

ஒன்பதாந்திருமுறை, 'திருவிசைப்பா' எனஅமைந்து தனித்ததோர் இலக்கிய வடிவத்தைத் தருவதாக அமை கின்றது. தேவாரம் போன்ற பண்ணமைப்பு இதன் பதிகங் களில் இடம்பெறுகிறது. இது 'இசைப்பாமாலை' எனவும் புகழப்படுகின்றது. ''திருவிசைப்பா என்ற பெயருக்கு இசையில் அமைநத பதிகங்களையுடைய நூல் என்றும், பரம்பொருளின் புகழை (இசையை) இசைக்கின்ற பா என்றுமே பொருள் கொள்ளத் தகுந்தது''[18] என்ற கருத்து குறிக்கத்தக்கது.

இத்திருவிசைப்பாவானது, கண்டராதித்தர், கருவூர்த் தேவர், சேதிராயர், சேந்தனார், திருமாளிகைத்தேவர், திருவாலியமுதனார், புருடோத்தம நம்பி, பூந்துருத்திநம்பி காடநம்பி, வேணாட்டடிகள் ஆகிய ஒன்பதின்மர் பாடிய பாடல்களின் தொகுப்பாக அமைகின்றது. இசைப்பா என்ற இலக்கிய வகைக்கு முதலும் முடிவுமாக இந்த ஒன்றே அமைந்துள்மை கருதத்தக்கது. இதற்குப்பின் இசை யாலமைந்த இலக்கியங்கள் தோன்றியுள்ளனவேயன்றி இப்பெயரில் தோன்றவில்லை என்பதும் குறித்தற்குரியது.

''ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்குந் தேனே

**அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே**
**அம்பலம் ஆடரங் காக**
**வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்**
**தொண்டனேன் விளம்புமா விளம்பே''[19]**

இவ்வாறு ஒளிவளர் விளக்காகத் திகழ்கின்ற இறைவனை இப்பாடல் சுட்டுகின்றது.

## 1.7. உபதேசம்

உபதேசம் என்பதற்கு அகராதியில் - மதபோதனை, மந்திரபோதனை, கடவுளின் தன்மையைக் கூறுதல், நல்லறிவு கூறுதல், போதித்தல், மறையுணர்த்தல் எனப்பல பொருள்களமைகின்றன இவ்வுபதேசமானது. சுந்தரர் தேவாரத்திலும் மாணிக்கவாசகரின் திருவாசகத்திலும் 'உபதேசம்' என்ற சொல்லின்றி அதன் பொருண்மையைச் சுட்டுவதாகக் கருத்துரைக்கும் பாங்கில் அமைந்துள்ளது.

சுந்தரர் தம் தேவாரத்தில், அடியார்க்கு உபதேசம் செய்யும் பாங்கிலும் புலவர்களுக்கு உபதேசம் செய்யும் பாங்கிலும் நெஞ்சுக்கு உபதேசம் செய்யும் பாங்கிலும் பலபாடல்களை அமைத்துள்ளார். அடியார்க்கு உபதேசம் செய்வதாக 22ஆம் பதிகத்தில் 3, 5, 9 ஆகிய பாடல்கள் அமைந்துள்ளன.

**''ஆடுமின் அன்புடையீர் அடிக்காட்பட்ட தூளிகொண்டு**
**சூடுமின் தொண்டருள்ளீர் உமரோடு எமர்சூழவந்து,**
**வாடுமிவ் வாழ்க்கைதன்னை வருந்தாமல் திருந்தச்சென்று**
**பாடுமின் பத்தருள்ளீர் பழமண்ணிப் படிக்கரையே''[20]**

என்று பாடுகின்றார். நெஞ்சுக்கு உபதேசம் செய்யும் பாங்கில் 30, 50, 64 ஆம் பதிகங்கள் அமைகின்றன.

"முட்டாமே நாள்தோறும் நீர்மூழ்கி
பூப்பறித்து மூன்றுபோதும்
கட்டார்ந்த இண்டைகொண் டாடிச்சேர்த்து
அந்தணர்தம் கருப்பறியலூர்
கொட்டாட்டுப் பாட்டாகி நின்றானை
குழகனை கொகுடிக்கோயில்
எட்டான மூர்த்தியை நினைந்தபோ
தவர்நமக் கினியஆறே"[21]

*புலவர்களுக்கு உபதேசம் செய்வதாக 34-ஆம் பதிகம் அமைந்து உள்ளது.*

"தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்
சார்வினும்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை
புகலூர்பாடுமின்! புலவீர்காள்!
இம்மையே தரும்சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர்கெடலுமாம்
அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு
யாதுமையுறவு இல்லையே"[22]

*மாணிக்கவாசகரின் யாத்திரைப் பத்தும் திருப்படையெழுச்சியும் இவ்வுபதேசமாக அமைகின்றன.*

*யாத்திரைப்பத்து உலகுக்கு உபதேசிப்பதாக அமைந்துள்ளது.*

"புகவே வேண்டா, புலன்களில்நீர்
புயங்கப், பெருமான் பூங்கழல்கள்
மிகவே நினைமின் மிக்கவெல்லாம்
வேண்டா, போக விடுமின்கள்
நகவே ஞாலத் துள்புகுந்து
நாயே அனைய நமையாண்ட
தகவே உடையான் தனைச்சாரத்
தளரா திருப்பார் தாந்தாமே"[23]

இவ்வாறே திருப்படையெழுச்சியும் இருபாடல்களைக் கொண்டு மாயையை அழிக்க உபதேசிப்பதாக அமைந்துள்ளது. இங்ஙனம் இறைவனைப் பற்றிக் கூறுவதாக அமைந்த உபதேசங்களுக்குப்பின் தோன்றிய உபதேசங்களும் இறையனுபவத்தைக் கூறுவனவாகவே அமைகின்றன. சிற்றிலக்கிய வளர்ச்சியைப்பற்றிப் பேசும் ஆய்வாளர்கள் உபதேசம் என்ற பெயரிலமையும் சிற்றிலக்கியம் ஒன்றினையும் கூறுகின்றனர். அதன் பாடுபொருளும் திருமுறைகளில் இடம்பெறும் மேற்சுட்டிய பாடுபொருளும் ஒன்றாதலையும் குறிப்பர்.

## 1.8. உலா

உலா என்னும் இச்சொல்லுக்குப் பவனி, நூல்வகை, உலாவென்னேவல் போன்ற பொருள்களை அகராதி தருகின்றது. ''இளம்பருவத் தலைமகன் ஒருவனைக் குலம் குடிப்பிறப்பு மங்கல வழிமுறை இவற்றின் இன்னான் என்பது தோன்றக்கூறி, அவன் மாதரார் நெருங்கிய பெரு வீதியில் உலாவரப் பேதைமுதலிய ஏழு பருவப்பெண்களும் கண்டு தொழுததாக நேரிசைக் கலிவெண்பாவாற் கூறுவது உலா ஆகும்''[24] என்ற கூற்றின்வழி உலாவின் தன்மையைப் பெறமுடியும்.

உலா இலக்கியம் பக்தி இயக்கக் காலத்தில் தோற்றம் பெற்றது என்ற போதிலும் இதன் விதை தொல்காப்பியத்திலேயே அமைந்துள்ளது. 'ஊரொடு, தோற்றமும் உரித்தென மொழிப'[25] என்ற தொல்காப்பிய நூற்பாவினை உலாவின் தோற்றத்திற்கடிப்படையாக்கிக் கூறுவர். தலைவன் உலாக் கண்டு வளையும் கலையும் நிறையும் அழியும் மகளிர் நிலையை ஒத்து விளங்கும் பாங்கு (பதிகம் 60) அமைந்த பதிகமொன்றை ஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

அப்பர்தம் திருமுறையில், "தலைவன் உலா வருவதைக் காண்பதற்கு நாள்தோறும் தன் சங்கு வளையல்கள் நெகிழவும், உடைசரியவும் இவள் வீதியினருகே அணைந்து நிற்பாள் (5.88.6), வீதியுலாவராததைக் கண்ட இவள் திகைத்து நிற்கின்றாள்; மணம் வீசும் நீண்ட கூந்தலை முடியாதவளாய் இருக்கின்றாள். அவளுடைய இச் செயலைக் காண்பீராக (5.88 6)"[26] என்று செவிலித்தாய் கூற்றில் உலா அமைவதாகக் குறிப்பர்.

"முத்தொள்ளாயிரப் பெண்பாற் கைக்கிளைப் பாடல் உலாவரும் மன்னனைக் கண்டு மையலுற்ற பெண்டிரைக் காட்ட, சேரரின் உலாப்பிரபந்தம், அழகுக் கோலம் புனைந்து பவனிவந்த இறைவர்க்கு ஆட்பட்டபேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் ஆகியோரைக் காட்டி வளர்ச்சி அளிக்கின்றது."[27]

முத்தொள்ளாயிர உலாவில் தலைவன் பாடப்பெறவும், சேரமான் பெருமாள் நாயனாரின் உலாவில் இறைவன் பாடப்பெறுகிறான். இதுவே முதன்முதலில் தோன்றிய உலா என்பதால் 'ஆதியுலா' என்றும் வழங்கப் பெறுகின்றது. இதன் இலக்கணத்தைப் பன்னிரு பாட்டியல், நவநீதப் பாட்டியல், இலக்கண விளக்கப்பாட்டியல் போன்றவை விரிவாகத் தருகின்றன. இதன் வடிவத்தைக் கலிவெண் பாட்டென்று குறிப்பர்.

**"போற்றிஎனப் பூமாரி பெய்து புலன்கலங்க**
**நாற்றிசையும் எங்கும் நலம்பெருக - ஏற்றுக்**
**கொடியும் பதாகையும் கொற்றக் குடையும்**
**வடிவுடைய தொங்கலுஞ் சூழக் - கடிகமழும்**
**பூமான் கருங்குழலார் உள்ளம் புதிதுண்பான்**
**வாமான ஈசன் வரும்போழ்தில்"[28] -**

என இறைவன் உலா எழுந்தருளும் பாங்குக் குறிக்கப் பெறுகின்றது.

அரசர், இறைவர் என்ற நிலையிலிருந்துமாறித் தலைவன் பெயராலும் தலைவன் சார்ந்த தலப்பெயராலும் இரண்டுஞ்சேர்ந்த இணைவாலும் தற்போது உலாக்கள் பாடப்படுகின்றன. திருமுறையில் தனித்த இலக்கியமாகக் கருதப்பெறாமல் தேவை கருதி, இறைவனின் திருவீதிஉலா பாடப்பெற, உலா என்ற அக்கூறு மட்டுமே தனித்த நிலையில் இலக்கியமாகப் பின்னாளில் உருவாக்கப் பட்டமையை இலக்கிய வரலாறு இயம்புகின்றது.

## 1.9. கலம்பகம்

கலம்பகம் என்பதற்குக் - கலவை, பலவகைச் செய்யுட் களால் ஆகிய நூல், சண்டை, துழாவல் ஆகிய பொருள்கள் அமைகின்றன. பல்வேறு பாவும் பாவினமும் உறுப்பும் கலந்துவரும் தன்மையுடையது கலம்பகம் எனப்படும். பலவகை மலர்களால் தொடுத்த மாலையைக் கலம்பகம் என்று வழங்கினர். அதுவே 'கதம்பம்' என்றாயிற்று என்றுரைப்பாருமுண்டு. 'கலம்', பன்னிருமரக்கால் என்னும் முகத்தலளவைக்கருவி, 'பகம்' அதிற்பாதியாம் ஆறுமரக்கால் இப்பன்னிரண்டும் ஆறுமாகிய 18 உறுப்புகளை உடைமை யால் இது 'கலம்பகம்' என்ற பெயர் பெற்றது என்று மற்றொரு காரணமும் உரைப்பர்.

கலம்பகம் என்ற இலக்கிய வகைக்கு முதல் இலக்கியச் சான்றாக அமைவது நந்திக்கலம்பகமாகும். இதற்கடுத்ததாக அமையும் கலம்பகம் பதினொராந்திருமுறையிலுள்ள நம்பியாண்டார் நம்பியின் 'ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்' என்பதாகும். ஞானசம்பந்தராகிய ஆளுடைய பிள்ளையாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டமைந்தமையால் இந்நூல் இப்பெயர் பெற்றுள்ளது. இதன்கண் 49 பாடல்களே காணப்படுகின்றன. ஏனையவை கிடைக்கவில்லை. இதனை,

''நாற்பத்தொன்பதாம் பாடல் 'எழிலிணையடி யிசைமினே' என முடிகின்றது. இவ்விறுதி 'அலையார்ந்த' எனத் தொடங்கும் முதற்பாடலின் முதற்சொல்லோடு மண்டலித்து முடியவில்லை. அன்றியும் இப்பிரபந்தத்தின் முதற்பாடலாகிய ஒருபோகின்கண் தரவென்னும் உறுப்புக் காணப்படவில்லை. எனவே இக்கலம்பகத்தின் முதற் பாடலின் முதலுறுப்பாகிய தரவும் நாற்பத்தொன்பதாம் பாடலுக்குப் பின்னுள்ள ஏனைய பாடல்களும் ஏடுகளின் சிதைவினால் மறைந்தனவெனக் கருதவேண்டியுளது[29] என்பதன்மூலம் உணரமுடியும்.

இதன்கண், சம்பந்தர் தலங்கள் தோறும் சென்று அங்கங்கே வாழும் மக்கள் இறைவனது அருளைப் பெற்று துன்பம் நீங்கி வாழ்தற்பொருட்டுப் பதிகங்களை அருளிச் செய்து மக்களுக்கு இறைவன்பால் பக்தியை உண்டாக்கிய தன்மை இக்கலம்பகத்தின் முதற்பாடலில் கூறப்பட்டுள்ளது

''கழுமல நாதன் கவுணியர் குலபதி
தண்டமிழ் விரகன் சைவ சிகாமணி
பண்டிதர் இன்பன் பரசமய கோளரி
என்புனை தமிழ்கொண் டிரங்கிஎன் னுள்ளத்
தன்பினை அருளிய ஆண்டகை''[30]

என்று சம்பந்தர் புகழ்பாடுகின்றார் நம்பியாண்டார்.

இதன்பின்பு இலக்கிய உலகில் இறைவனைத் தலைவனாகக் கொண்ட பலவகையிலான கலம்பகங்கள் தோன்றியுள்ளன. இவ்வாறு தம்கால இலக்கிய வடிவு களைச் சிவனடியார்களின் திருமுறைகள் படம்பிடித்துக் காட்டுகின்றன. கலம்பகம் என்ற சொல்லின் பதிவும், பிற கூறுகளும் சமயக்குரவரின் இலக்கிய நோக்கை எடுத்தியம்புவன. தமக்கு முன்னரே வழக்கிலிருந்த இலக்கிய வடிவுகளைக் கையாண்டும், சிலவற்றிற்குத் தாமே

முன்னோடியாயிருக்கும் வண்ணம் புதிய வடிவுகளை மேற்கொண்டும் இருந்தமைக்குச் சிவனடியார்களின் திருப்பாசுரங்கள் சான்றேடுகளாய் நிற்கின்றன.

## 1.10. கவசம்

இரும்பு முதலியவற்றால் செய்யப்பட்ட சட்டை, காவல் செய்யும் மந்திரம், சட்டை, சீலைமண், சுரிகை, மெய்யுறை, காயத்திற்கிடும் காப்பு, மருந்துக் கவசம், கருவி முதலான வேறுபல பொருள்களையும் தருகின்ற பலபொருள் ஒரு சொல்லாக இஃது அமைந்துள்ளது. உடலுக்கு வரும் ஊறுபாட்டை விலக்கிக் காப்பதற்குக் கவசம் இடுதலைப் போல, உள்ளத்திற்குவரும் ஊறுகளை விலக்கிப் பாதுகாக்கும் வண்ணம் இறையருளை இறைச்சார்புத் தத்துவங்களை நாடிப்பாடும் நூல் கவசம் எனப் பெறுகின்றது.

புறநானூறு, 'புலிநிறக்கவசம்' (13.2) எனவும் திருவாசகம் 'நீற்றுக்கவசம்' (46.1) எனவும் இச்சொல்லாட்சியினைத் தருவதாகக் குறிப்பர். மலிதன் மாயையை வெல்ல அவனுக்குத் திருநீறு கவசமாக அமைதலை மாணிக்கவாசகர் குறித்துச் செல்கின்றார். சம்பந்தரின் திருநீற்றுப்பதிகமும், கோளறுதிருப்பதிகமும் 'கவசம்' என்ற சொல் இல்லாமலேயே அதன் பொருண்மையை விளக்கி நிற்கின்றன.

**"முத்திதருவது நீறு முனிவரணிவது நீறு**
**சத்தியமாவது நீறு தக்கோர்புகழ்வது நீறு**
**பத்தி தருவது நீறு பரவஇனியது நீறு**
**சித்தி தருவது நீறு திருஆலவாயன் திருநீறே"**[31]

இவ்வாறு நீறு எல்லாமாய் நின்று துணை செய்வதனை உணர முடியும். கோளறு திருப்பதிகமாவது தீமையைத் தடுத்து வருமுன் காக்கின்ற கவச இலக்கியங்களுக்கு முன்னோடி என்னும் வகையில் அமைந்துள்ளது.

**"வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்**
**மிகநல்ல வீணைதடவி**
**மாசறு திங்கள்கங்கை முடிமேல ணிந்தென்**
**உளமே புகுந்தஅதனால்**
**ஞாயிறு திங்கள்செவ் வாய்புதன் வியாழம்வெள்ளி**
**சனிபாம்பிரண் டும்உடனே**
**ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல**
**அடியார்அவர்க்கு மிகவே"[32]**

*இது இலக்கிய நிலையாக அமைந்துவிடாது, பக்திப் பொருண்மையுடைய சமயச் சார்புடையதாக அமைகின்ற தனை இன்றளவும் காணமுடியும். 'கந்தர் சஷ்டிக்கவசம்' இவ்வகையில் சிறப்புடையது. திருநாவுக்கரசரின் நான்காம் திருமுறையில் அமைகின்ற திருப்பதிகமொன்றில், 'கூற்றா யினவாறுவிலக்ககலீர்' என்று தொடங்கி அமைந்த பத்துப் பாடல்களும் இக்கவசப் பொருண்மையையே சுட்டி நிற்கின்றன.*

*"இறையை வணங்கும் போக்கில், இவ்வாறான இலக்கிய வகைகளின் வழியே இறையை ஏற்றுவது புறச் சமயங்களுக்கும் பரவிற்று. 'அற்புதா' என்ற பெயரில் அற்புதசாமி என்பவர் 'துன்பங்களைத் துரத்தும் கர்த்தர் கவசம்' என்ற நூலை யாத்திருப்பதும், அந்நூல் ஏற்கனவே தமிழில் வெளிவந்த கவச நூல்களின் பாதிப்பால் உருவாகி இருப்பதும் நோக்குதலுக்குரியவை"[33] என்ற கூற்றின் வழியே கவச இலக்கியத்தின் புறச்சமய ஈர்ப்பை உணரலாம்.*

## 1.11. கைக்கிளை

*கைக்கிளை என்பது ஏழிசையுள் ஒன்று, ஒருதலைக் காமம், ஒருபிரபந்தம், மருட்பா, யாழினொருநரம்பு என்ற பொருண்மைகளையுடைய ஒரு சொல்லாகும். ஒருதலைக் காமத்தினை ஐந்து விருத்தப்பாக்களால் கூறும் வகையே*

கைக்கிளை எனப்பெறுகின்றது. இதனை, "முதன்மைப் பொருளான ஒருதலைக் காமம் அடிப்படையாக, மருட்பா வகையான கைக்கிளை மருட்பாவும, ஐந்து விருத்தச் செய்யுளில் ஒருதலைக் காமத்தைப் பற்றிக் கூறும் கைக்கிளைப் பிரபந்தமும் இச்சொல்லால் குறிக்கப் படுகின்றன"[34] என்ற கருத்தின் வழியறியவியலும்.

இதற்குப்பாட்டியல் நூல்கள் இலக்கணம் வகுத்து உள்ளன. "கைக்கிளையை, ஒருதலைக்காமம் எனச் சிறப்புக் குன்றியநிலையிலும் காட்சி – ஐயம் – துணிவு – தெளிதல் போன்ற நிலைகளுடன் அன்பின் ஐந்திணைக்கு முன்னிலையாக அமையும் சிறப்புடையது எனும் நிலை யிலும் கொள்ள வாய்ப்பு அமைகின்றது."[35]

ஆண்பால் கைக்கிளைக்குரிய காட்சி, ஐயம போன்ற வற்றைச் சேக்கிழார், பெண்பாற்குரியதாகக் காட்டுவதைப் பரவையார் சுந்தரரைப் பார்க்குமிடத்தில் பொருதக் காட்டுகின்றார். கைக்கிளை என்பதை ஓர் இலக்கிய வகை யாகச் சுட்டும் நிலையில் திருமுறைகளில் இககூறு அமைய வில்லை. ஆனால் சிற்சில கூறுகள் கைக்கிளை எனும் பொருண்மையுடையனவாக அமைகின்றன.

"ஒத்த நிலையுடையோர் பால் ஏற்பட்ட கைக்கிளை, உயர்நிலையுடைய அரசத்தலைவன்பால் ஏற்படுவதை பக்தி இலக்கியம் காட்டுகின்றது. இதனால் இது மானிடக்கா தலாக அன்றிப்பக்திக்காதலாக மாற்றம் பெறுகின்றது. இறைவன் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கமாக (காமப்பகுதி கடவுளும் வரையார் – புறத், 23) உலாப் போன்ற பிரபந்தங்களிலும் காப்பியங்களிலும் இக்கூறு இடம் பெறுகின்றது… இவையும் கோவை இலக்கியங்களின் தொடக்கந்தரும் கைக்கிளைச் செய்திகளும், இதனைத் தனிப்பிரபந்தமாக முழுமைப்படுத்தும் வாய்ப்பை அளித்து இருக்கலாம்"[36] என்ற கருத்தின் வழியும் திருமுறைகளில்

கைக்கிளையின் இடத்தைப் பெறலாம். இவ்வாறு தொல்காப்பியத்தில் குறிக்கப்பட்டுச் சங்கஇலக்கியத்தில் இடம்பெற்று இருந்த கைக்கிளை, பக்தி இலக்கியத்தில் ஒரு கூறாகிப் பின்னாளில் ஒரு தனித்த இலக்கியமாகும் நிலைக்கு உயர்ந்துள்ளது.

## 1.12. கோவை

கோவை என்பதற்குக் கோக்கை, வரிசை, கோத்தவடம், ஏற்பாடு, அகப்பொருட்கோவையாகிய பிரபந்தம், ஒரு பழைய பொன்நாணயம், கொடிவகை, படர்கொடிவகை போன்ற பல பொருள்கள் கூறப்பெறும். 'ஆசாரக்கோவை' இச்சொல்லின் ஆட்சியையும் ஆசாரங்களைக் கோவைப் படுத்தியுரைக்கும் தன்மையையும் முதன்முதலில் வழங்கு கின்றது. கோவை என்பது களவு, கற்பு என இருதன்மை களும் கோவைப்படுத்தியுரைக்கப்படும் அகஇலக்கிய வகை யாகும். அவ்வகையில் பாண்டிக்கோவை, தஞ்சைவாணன் கோவை போன்றவை அமைகின்றன.

இறைவனைத் தலைவனாகக் கொண்டு நானூறு கட்டளைக் கலித்துறையால் பாடப்படும் சிறப்புடையதாக அமையும்கோவை மாணிக்கவாசகரின் திருக்கோவை யாராகும். "இந்நூல் முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான் உலகெலாம் உய்ய ஆனந்தத் திருக்கூத்தியற்றியருளும் திருவருள் நிலையமாகிய தில்லைத் திருச்சிற்றம்பலத்தைப் பரவிப் போற்றும் முறையில் அமைந்த அகத்திணைக் கோவையாதலின் திருச்சிற்றம்பலக் கோவையென்னும் பெயர்த்தாயிற்று"[37] என்றிதற்குப் பெயர்க்காரணம் குறிக்கப் பெறுகின்றது

"திருவளர் தாமரை சீர்வளர்
    காவிகள் ஈசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்
    காந்தள்கொண் டோங்கு தெய்வ

**மருவளர் மாலையோர் வல்லியின்
ஒல்கிஅன நடைவாய்ந்
துருவளர்கா மன்றன் வென்றிக்
கொடிபோன் றொளிர்கின்றதே"[38]**

என்பது திருக்கோவையார் பாடலாகும்.

இது களவொழுக்கம் என்னும் பெயர்பெற்று, வீடுபேற்றின் பயத்ததாய், அன்பினால் நிகழ்ந்த காமப் பொருள் நுதலிக் கந்தருவரொழுக்கத்தோடு ஒத்துக்காமனது வெற்றிக்கொடிபோன்று ஐந்திணையின் கண்ணும்வென்று விளங்கி நிற்கும் கடிமலர் மாலையின் வரலாறு இத்திருக் கோவையின்கண் உரைக்கப்படுவதாகக் குறிப்பர். பிற்காலத்தில் கோவை என்ற பின்னொட்டைப் பெற்ற இலக்கியங்கள் பல உருவானதை இலக்கிய வரலாறு பதிந்துள்ளது.

## 1.13. சீட்டுக்கவி

இதற்கு ஓலைப்பாசுரம் என்று பொருளுரைக்கப்படு கின்றது. கடிதச் செய்தியானது செய்யுள் வடிவில் அமைந்து கவிதைநயம் தோன்ற அமையும் ஓர் இலக்கிய வகை யாகும். தூது மிகப் பழங்காலம் முதலே உள்ள பழக்கமாக அமைதல் போன்று, ஓலைச்செய்தியும் பண்டைக்காலம் முதலே வழக்கமாக, இருந்த ஒன்று என்று குறிப்பிடுவர். கடிதங்கள் பலவற்றைக் காப்பியங்கள் சுட்டுகின்றன. அவை சீட்டுக்கவி என்ற பெயரிலமையவில்லை. இதற்குச் சான்றாகச் சிலப்பதிகாரத்தில் அமையும் மாதவியின் கடிதங்கள் - மடல்கள் இரண்டையும் குறிப்பிடமுடியும்.

சீட்டுக்கவி இலக்கியத்திற்கு முன்னோடியாக அமைவது பதினோராந்திருமுறையில் சிவபெருமானின் சீட்டுக்கவியாக அமையும் திருமுகப்பாசுரமேயாகும். திருமுகப்பாசுரம் என்பதற்கு, 'பெரியோர் சிறியோர்க்கு எழுதும் முறைக்

கடிதாசி' என்று பொருளுரைப்பர். பாட்டியல் நூல்களில் பிரபந்ததீபம் தவிர ஏனையவை இதனை ஓர் இலக்கிய வகையாகக் கூறாதபோதும் பதினொராந்திருமுறை இதனை ஓர் இலக்கிய வகையாக்கி அதற்குச் சான்று முகைரக்கின்றது.

திருவாலவாயிறைவர் பாணபத்திரர் என்னும் தன் அடியாரின் வறுமையை நீக்கக்கருதி, அரசராகிய சேரமான் பெருமாள் நாயனார்க்கு ஓலை ஒன்று எழுதிக்கொடுத்து அனுப்புவதே திருமுருகப்பாசுரம் எனப்படும் இச்சீட்டுக் கவியின் பொருளாகும். கடிதம் என்ற பொருண்மையில் திருமுறையில் இடம்பெறும இலக்கியக் குறிப்பாக இதனைக் கருதவேண்டும். நேரிசையாசிரியப்பாவாலியன்ற 12 அடிகளைக் கொண்டதாக இக்கவிதையாகிய சீட்டுக்கவி அமைகின்றது.

"செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன், தன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே"[39]

என்பன அவ்வடிகளிற் சில.

இதன்கண் யார், யாருக்கு, எதற்கு எழுதினார் என்ற முக்கூறுகளும் அமைந்துள்ளமை குறிக்கத்தக்கதாகும். இதனைப் பின்பற்றி இன்று பல சீட்டுக்கவிகள் தோற்றம் பெற்றுள்ளன. தனிப்பாடல் திரட்டுகள் பல சீட்டுக்கவி களைத் தருகின்றன. தனித்த இலக்கிய வகையாக வளர்ந் தமையால் இதற்கென்று இலக்கணங்கள் அமைக்கப்பெற்று மொழியப்பெற்றன.

## 1.14. தசாங்கம்

தசாங்கம் அரசனுக்குரிய பத்து அரசியல் உறுப்புகளை யும் பத்து வகை வாசனைத் திரவியங்களாலாகிய தூபப்

பொடியையும் குறிப்பதாக அமைகின்றது. இவற்றுள் முன்னதே இலக்கியவகையாகக் கொண்டு பாடப்படு கின்றது. அரசனுக்கு வேண்டிய பத்து உறுப்புகளையும் பத்து நேரிசை வெண்பாக்களால் பாடுவதே தசாங்கமாகும். தசாங்கப்பத்து என்றும் இதனை வழங்குவர். அரசர்க்குரிய உறுப்புகளாகத் தொல்காப்பிய மரபியல் நூற்பா பின் வருவனவற்றையுரைக்கின்றது.

**"படையும் கொடியுங் குடையும் முரசும்**
**நடைநவில் புரவியுங் களிறுந் தேரும்**
**தாரும் முடியும் நேர்வன பிறவுந்**
**தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய"**[40]

மாணிக்கவாசகரின் திருத்தசாங்கத்தில் சிவபெருமானுக் குரிய பேர், நாடு, ஊர் முதலிய பத்து அங்கங்களைப் பற்றிய புகழ்ச்சியே சிறப்புடைய பொருளாக அமைந்துள்ளது.

**"பேர்நாடு ஊர் ஆறு மலை பெயரூர்தி படைமுரசு**
**தார்கொடி யெலாம் அரற்குச் சாற்றல் தசாங்கமதாம்"**

எனத்திருப்பெருந்துறைப் புராணத்தில் இப்பதிகத்தின் பெயர்க்காரணம் விளக்கப்பெறுகின்றது.

சிவனுக்குரிய சிறப்புடை அங்கங்களாக மாணிக்க வாசகரின் திருத்தசாங்கத்தில் இடம்பெறுபவை:-

1. பேர் – ஆரூரன்
2. நாடு – தென்பாண்டி நாடு
3 ஊர் - உத்திரகோசமங்கையூர்
4. ஆறு – ஆனந்தமாகிய ஆறு
5. மலை – இன்பமும் முத்தியுமருளும் அருளாகிய மலை
6. ஊர்தி – வான்புரவி
7. படை – கழுக்கடை
8. பறை – நாதப்பறை
9. தார் – தாளியறுகு
10. கொடி – ஏறு

என்றிவை பத்துமாகும்.

இதன்பின் தத்துவராயரின் தசாங்கம் சொரூபானந்தர் துதியாகப் பத்துப்பாடல்களில் கிளியை விளித்துப் பாடுவதாக அமைந்துள்ளது. இருபதாம் நூற்றாண்டில் செங்கல்வராயரின் தசாங்கமாகத் 'திருத்தணிகேசன் தசாங்கம்' அமைந்துள்ளது.

## 1.15. திருப்புகழ்

தெய்வப்புகழ்ச்சிக்குரிய பாடலே திருப்புகழ் எனப் படுகின்றது. இறைவனைப் பாடும் நெறி சங்க காலம் முதலே காணப்படுகின்றது. எனினும் இதன் பெருக்கத்தைப் பக்தி இலக்கியங்கள் சுட்டிநிற்கின்றன. சங்கத் திரு முருகாற்றுப்படையும் பரிபாடலும் கடவுள் வாழ்த்துப் பொருண்மை தொடர்ந்ததைக் காட்டுகின்றன என்று கூறுவார் கருத்தும் இங்குக் கருதத்தக்கதாம். பன்னிரு திருமுறைகளிலும் இறைவனைப் போற்றிப் புகழ்தல் காணப் படுகின்றபோதிலும் 'புகழ்' எனும் பெயரில் அவை அமைய வில்லை. இருப்பினும் மாணிக்கவாசகரின் 'கீர்த்தித்திரு அகவல்' இவ்வகைக்குச் சான்றாயமைகின்றது. 'கீர்த்தி' எனும் சொல்லிற்குப் புகழ் எனும் பொருளும் உண்டு.

> **''ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி**
> **பாண்டி யன்றனக் குப்பரி மாவிற்**
> **றீண்டு கனகம் இசையப் பெறாஅ**
> **தாண்டா னெங்கோன் அருள்வழியிருப்பத்**
> **தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்''[41]**

இவ்வரிகளில் இறைவனின் செயல்கள் புகழப்படுகின்றன. இவ்வகையில் அருணகிரிநாதரின் 'திருப்புகழ்' புகழ்மிக்க தாகவும் போற்றப்படுவதாகவும் இன்று அமைந்துள்ளது.

## 1.16. தூது

இதன் பொருள்: ஒருவகைப் பிரபந்தம், இருவரிடையே பேச்சு நிகழ்தற்கு உதவியாக நிற்கும் ஆள், கூழாங்கல்,

செய்தி, பகை, தானாபதி, இராச தூதர் தன்மை போன்றன. கலிவெண்பாவினால் அமையும் இவ்வகையானது, தலைவனோ தலைவியோ யாராயினும் ஒருவர் உயர்திணை இருபாலினரையும் அஃறிணைப் பொருள்களையும் தூதாக விடுத்து வேட்கை நிலையுரைப்பதாகக் கூறும் இயல்பில் அமையும். தூது விடுத்தற்குரியனவற்றைப் பாட்டியல் நூல்கள் பட்டியலிட்டுரைக்கின்றன. தொல்காப்பியந் தொடங்கித் 'தூது' அமைகின்றது திருமுறைகளிலும் ஆங்காங்கே இத்தூது சிறுகூறாகக் காணப்படுகின்றது. சம்பந்தர் தேவாரத்தில் தலைவி தலைவன்பால் அஃறிணைப் பொருட்களைத் தூது அனுப்பும் தூதுத் துறை காணப் படுகின்றது (பதிகம் 60). மேலும் திருச்செங்காட்டங்குடிப் பதிகத்தில் (321) மடநாரையைத் தூதுவிடுக்கும் பாங்கும் காணப்படுகின்றது.

> **''கானருகும் வயலருகும் கழியருகும் கடலருகும்**
> **மீனிரிய வருபுனலில் இரைதேர் வண்மட நாராய்!**
> **தேனமர் தார்ச்சிறுத் தொண்டன் செங்காட்டங்குடிமேய**
> **வானமரும் சடையார்க்கு என்வருத்தம்**
> **சென்றுரையாயே''[42]**

என்று தலைவி தன்னிலை கூறித் தூதுவிடுக்கும் நிலையில் இப்பதிகத்தில் பாடல்கள் அமைந்துள்ளன

அப்பர், திருப்பழனம் பதிகத்தில் (12) குயில், நெய்தல், குருகு, தென்றல், நாரை, பூவை, மான் ஆகியவற்றைத் தூதாக விடுக்கும் தலைவியின் கூற்றுகளைப் படைத் துள்ளார்.

> **''சொல்மாலை பயில்கின்ற குயிலினங்காள்! சொல்லீரே**
> **பல்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்**
> **முன்மாலை நகுதிங்கள் முகிழ்விளங்கும் முடிச்சென்னிப்**
> **பொன்மாலை மார்பன்என் புதுநலம்உண்டு**
> **இகழ்வானோ?''[43]**

என்றமைகின்றது அப்பரின் திருப்பழனப்பதிக முதற்பாடல்.

சுந்தரரும் தம் தேவாரத்தில் இத்தூதினைப் படைத்துள்ளார் 37-ஆம் பதிகமான திருவாரூர்ப் பதிகம், தலைவி தன்நிலையைத் தலைவனுக்குணர்த்தக் குருகு, கிளி, நாரை, சக்கரவாளப்புள், கொண்டல்; வண்டு, அன்னப்பெடை, குயில் ஆகியவற்றைத் தூதாக விடுக்கின்றாள் எனும் வகையில் அமைந்துள்ளது

**''பறக்கும்எம் கிள்ளைகாள் ! பாடும்எம் பூவைகாள்!
அறக்கண் என்னத்தகும் அடிகள் ஆருரரை
மறக்க கில்லாமையும் வளைகள் நில்லாமையும்
உறக்கம் இல்லாமையும் உணர்த்த வல்லீர்களே?''**[44]

என்று கிளியை அழைத்துத் தூதுவிடுக்கும் தலைவியை இப்பாடல் வழி அறியவியலும்

மாணிக்கவாசகரின் கோத்தும்பி இவ்வாறு தூது விடுக்கும் தன்மையிலேயே அமைகின்றது. தும்பியைஅழைத்து இறைவனிடம் சென்றூ தாயோ எனும் வகையில் மாணிக்க வாசகர் அமைத்துள்ளார். இவ்வாறு தலைவி தலைவனிடம் தூதுவிடுக்கும் அகஇலக்கிய மரபைத் திருமுறைகளில் காணமுடிகின்றது. தற்போது அகப்பொருளுக்கு ஒரு குறிப்பிட்ட பொருள்தான் என்ற வரையறையின்றி அனைத்துப் பொருள்களையும் தூதாக விடுக்கும் நிலை தோற்றம் பெற்றுள்ளது. தற்போது பல்வேறு வகையான தூதுநூல்கள் தோன்றியுள்ளன,

## 1.17. தேவபாணி:-

தெய்வத்தைப் புகழ்ந்து பாடும் மரபிலமைந்த பாடல்கள் தேவபாணி எனப்படுகின்றன. பாடுந்திறன் வல்லாரைப் பாணன், பாடினி என வழங்குவர். பெருந்தேவபாணி, சிறுதேவபாணி எனும் இருநிலைகளில் அமையும் இவ்விலக்கிய வகையானது இசைப்பொருண்மை

நிலையில் தொல்காப்பியத்திலேயே அமைந்துள்ளது. கலியும் பரிபாடலும் தேவபாணிக்குரியவையாக முன்னர்க் கருதப்பட்டுள்ளன நக்கீரதேவநாயனாரின் பெருந்தேவ பாணி முதன்முதலில் இச்சொல்லாட்சியையும் இலக்கிய வடிவையும் தருகின்றது.

தெய்வத்தை முன்னிலையில் வைத்துப் பரவியபாடல் தேவபாணி எனப்படும். பாணி, பண்ணோடு கூடிய பாட்டு என்பது பொருள். "சிலம்பின் உரைப்படி, பெருந்தேவபாணி பல தேவரையும் சிறுதேவபாணி வருணப்பூதரையும் துதித்து அமையும் பாங்கு இங்கு நினைக்கத் தக்கது. பதினோராம் திருமுறையின் பெருந்தேவபாணி சிவபெருமானைப் பாடி வருகின்றது"[45] நக்கீரர் பாடியுள்ள பெருந்தேவபாணியானது ஆசிரியப்பாவால் இயன்றுள்ளது. இலக்கண நூல்களால் கலிப்பா என்று கூறப்பட இங்கு இந்நிலை மாறியுள்ளது. இலக்கண நூல்கள் கூறும் இலக்கணத்திற்கு இந்நூல் பொருந்தியமையவில்லை. 'தேவபாணி' என்ற பெயர்ப் பொருத்தமே இங்கு அமைகின்றது. வேறு பொருத்தம் எதுவும் அமைவதாகத் தெரியவில்லை. 67 அடிகளால் ஆன இந்நூலில், சிவனின் திருவுருவம், தன்மை, பராக்கிரமச் செயல்கள் போன்றவை போற்றப் பெற்றுள்ளன

**"வேதமும் நீயே வேள்வியும் நீயே**
**நீதியும் நீயே நிமலன் நீயே**
**புண்ணியம் நீயே புனிதன் நீயே"[46]**

என்றிறைவனின் புகழ் பாடப்படுகின்றது.

### 1.18. தொகை

தொகுக்கப்படுவது தொகை எனப்படும். இதனை, பாட்டின் பொருளால், இடத்தால், காலத்தால், தொழிலால் வருவனவும், பாட்டினது அளவால் எண்ணால் வருவனவும்,

செய்தவன் பெயரை நாட்டித் தொகுவனவும் செய்வித்தவன் பெயரை நாட்டித் தொகுவனவும் என வரும் இலக்கணத் தின் வழி அறியமுடியும்.

"பாட்டுப் பொருளிடங்காலம்
தொழில்பாட் டளவினெண்ணின்
நாட்டித் தொகுத்தவும் செய்தவன்
செய்வித் தவன்தம்பேர்"[47]

என்பது அவ்விலக்கணப் பகுதியாகும்.

சங்கப்பாடல்கள் எட்டுத்தொகை எனத்தொகுக்கப் பெற்றமை போலத் திருமுறைகளே ஒரு தொகுப்பாகக் காணப்படுகின்றன. சமயத் தொடர்புடைய பாடல்களின் தொகுப்பே திருமுறையாகும். இத்திருமுறைக்குள்ளும் சிலதொகை நூல்கள் அமைகின்றன. அவை 'தொகை' என்ற பெயரையும் பெற்றிலங்குகின்றன.

அவையாவன

| | | |
|---|---|---|
| திருநாவுக்கரசரின் | — | திருக்குறுந்தொகை |
| சுந்தரரின் | — | திருத்தொண்டத்தொகை |
| | | திருநாட்டுத் தொகை |
| | | ஊர்த்தொகை |

நம்பியாண்டாரின் – ஆளுடைய பிள்ளையார் திருத் தொகை.

நாவுக்கரசரின் 'திருக்குருந்தொகை' – "குறுந்தொகை" எனும் ஒரே யாப்பில் அமைந்துள்ளமையால் இவை (பாடல்கள்) அனைத்தையும் ஒருங்கே தொகுத்து அதற்குத் 'திருக்குறுந்தொகை' என்று பெயரிட்டு ஐந்தாந்திருமுறை யாக்கியுள்ளனர். அவருடைய மற்ற தொகுப்புகளைப் பற்றி இங்குக் கூறாமல் திருக்குறுந்தொகையினை மட்டும் இங்குச் சுட்டிக்காட்ட காரணம் மற்றவற்றிடம் இல்லாத

'தொகை' எனும் சொல்லை இது ஈற்றிலே பெற்றுநிற்றலே யாகும்.

சுந்தரரின் திருத்தொண்டத் தொகையானது திருத் தொண்டர்களின் பெயர்களைத் தொகுத்துக் கூறுவதாக அமைகின்றது. சுந்தரர் தேவாரத்தில் 39ஆம் பதிகமாக இஃது அமைந்துள்ளது. 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' எனத் தொடங்கி அடியார்களை வரிசைப்படுத்தியுரைக்கின்ற ஒரு பதிகமாக இப்பதிகம் விளங்குகின்றது. திருநாட்டுத் தொகைப் பதிகமும் (12), ஊர்த்தொகை பதிகமும் (47) இறைவன் கோயில் கொண்டுள்ள தலங்களைத் தொகுத்துரைப்பனவாக அமைந்துள்ளன.

ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை என்பது பதினொராந்திருமுறையில் 65 அடிகளையுடையதாய்ச் சம்பந்தரின் அற்புதச் செயல்களைக் கூறுவதாயமைகின்றது. ஆளுடைய பிள்ளையாராகிய சம்பந்தரின் வரலாறு கூறுவதாக அமைகின்றதால் இப்பெயர் பெற்றுள்ளது. சம்பந்தரின் - ஆளுடையபிள்ளையாரின் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகளைத் தொகுத்துக்கூறும் நிலையிலமை வதால் இப்பெயர் பெற்றதென்று இதற்குப் பெயர்க் காரணம் குறிப்பர். கலிவெண்பாவால் இயன்றதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**"தாழுஞ் சரணச் சதங்கைப் பருவத்தே**
**பாலையும் நெய்தலும் பாடவலான் - சோலைத்**
**திருவா வடுதுறையிற் செம்பொற் கிழியொன்**
**றருளாலே பெற்றருளும் ஐயன்"**[48]

எனச் சம்பந்தரை நம்பியாண்டார் போற்றுகின்றார். இன்றைய நிலையில் பல தொகைகள் அமைந்துள்ளமையை இலக்கிய வரலாறு உரைக்கின்றது.

## 1.19. நாமக்கோவை

நாமம் என்ற சொல் பெயரைக் குறிக்கும் பொருண்மை யுடையது. கோவை என்பது வரிசைப்படக் கோத்தல் எனும் பொருள்தருவது எனவே,பெயரையோ ஊர்ப்பெயரையோ வரிசைப்படக் கோத்தல் நாமக்கோவையாகும். நாமக் கோவை எனும் இலக்கிய வகையானது திருமுறைகளில் அமையவில்லை எனினும் அதற்கான கூறுகள் அமைந் துள்ளன. சுந்தரரின் திருத்தொண்டத் தொகை அடியார் களின் பெயர்களைத் தொகுத்தளிக்கின்றது. இதற்கு,

**"தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்**
**திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்**
**இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்**
**இளையான்தன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்**
**வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்**
**விரிபொழில்சூழ் குன்றையார் விறல்மிண்டற் கடியேன்**
**அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்**
**ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே"**[49]

என்ற ஒரு பாடலைச் சான்றாக்க முடியும். இதனையே சற்று விரிவாக்கி நம்பியாண்டாரின் திருத்தொண்டத் திருவந்தாதி வழங்குகின்றது. இவையிரண்டுமே அடியார் களின் பெயர்களைத் தொகுத்தளிக்கின்றன. சம்பந்தரின் சேத்திரக்கோவையும் (175 ஆம் பதிகம்), அப்பரின் க்ஷேத் திரச்கோவைத் திருத்தாண்டகமும் (283 ஆம் பதிகம்) சுந்தரரின் திருநாட்டுத் தொகையும் (12 ஆம் பதிகம்) இறையுறை இடங்களைக் கோவையாக்கி உரைக்கின்றன. இங்கு அவற்றின் ஊர்ப்பெயர்கள் வரிசைப் படுத்தப்படுவது குறிக்கத்தக்கதாகும். இவையே, சிவஞான சுவாமிகளின், 'திருத்தொண்டர் திருநாமக் கோவை' என்ற இலக்கிய வகைக்கு அடிப்படையாயின என்று உரைப்பர்.

## 1.20. பல்லாண்டு

பலவருடம் நீடுவாழ்க என்னும் வாழ்த்து, திருப் பல்லாண்டு ஆகிய பொருள்களைக் குறிக்கின்றது இச்சொல்.

புறநானூற்றுப் பாடல்களில் மன்னனை 'நீடுவாழ்க' என்று வாழ்த்தும் மரபு காணப்படுகிறது. இம்மரபே பின்பு இறைவனுக்கு மாறி அமைந்துள்ளது. பெரியாழ் வாரின் திருப்பல்லாண்டு இச்சொல்லின் முதலாட்சியைக் கொண்டுள்ளது. இவ்வகையிலமைந்த முதல் பக்திப் பனுவலையும் தருகின்றது. "பாட்டியல் நூல்களில், பன்னிருபாட்டியல் மட்டுமே 'யாண்டுநிலை' எனும் பெயரில் இவ்விலக்கிய வகையைப் பற்றி நினைக்கின்றது. அரசன் பல்லாண்டு வாழ வேண்டும் என்ற இதன் பொருண்மை பெரும்பாலும் நேரிசை வெண்பாவாலும் சிறுபான்மை எல்லாப் பாவாலும் பாடப்படும் என்பது சுட்டப்படுகிறது."[50]

ஒன்பதாந்திருமுறையில் ஆசிரியவிருத்தத்தால் ஆகிய பதின்மூன்று பாடல்கள் காணப்படுகின்றன. இவையே சேந்தனாரின் திருப்பல்லாண்டு பாடல்கள் ஆகும். "எங்கும் நீக்கமறக் கலந்து விளங்கும் எல்லாம்வல்ல இறைவனுக்குப் பல்லாண்டிசை கூறி வாழ்த்துவதாகலின் 'திருப்பல்லாண்டு' என்னும் சிறப்புப் பெயரைப்பெறுவதாயிற்று"[51].

"மன்னுக தில்லை வளர்கநம் பக்தர்கள்
வஞ்சகர்போ யகலப்
பொன்னின் செய்மண்ட பத்துள்ளே புகுந்து
புவனியெல் லாம்விளங்க
அன்னநடை மடவா ளுமைகோ னடியோமுக்
கருள் புரிந்து
பின்னைப்பிற வியறுக்க நெறிதந்த பித்தற்குப்
பல்லாண்டு கூறுதுமே"[52]

என ஒவ்வொரு பாடலுமே 'பல்லாண்டு கூறுதுமே' எனும் ஈறுபெற்று முடிகின்றன. இதனை அடிப்படையாகக் கொண்டு பின்னாளில் பல்லாண்டு நூல்கள் பல தோன்றி யுள்ளன.

**1 21. பள்ளியெழுச்சி**

பள்ளியெழுச்சி எனும் சொல்லிற்குப் பொருள் பலவுண்டு. அவையாவன: துயில் நீங்குகை, திருப்பள்ளி யெழுச்சி, அரசர் முதலியோரைத்துயிலெழுப்பும் பிரபந்தம் ஆகியன.

மாணிக்கவாசகரின் திருப்பள்ளியெழுச்சி என்பது இவ்வகையில் அமைந்த முதல் இலக்கியமாகவும் சொல்லாட்சியாகவும் அமைவதாகக் குறிப்பர். கடவுளைத் துயிலெழுப்பும் நிலையில் இப்பாடல்கள் 'திரு' என்னும் அடைபெற்றுத் 'திருப்பள்ளியெழுச்சி' என்றமைந்துள்ளன. அரசர்க்குரிய 'துயிலெடைநிலை'யே இறைச்சார்பு பெற்றுத் 'திருப்பள்ளியெழுச்சி'யாக எழுச்சிபெற்றுள்ளது.

"உலகத் துயிர்களையெல்லாம் தன் அடிக்கண் ஒடுக்கி மீண்டும் மலர்க்கும் இறைவன் துயில் கொள்வதாகவும் அவன் அத்துயில் நீங்கி எழுந்தருள வேண்டுவதாகவும் அவன்புகழ்பல பேசி எண்சீர் விருத்தத்தால் பாடப் பெறுவது திருப்பள்ளியெழுச்சியாகும்"[53] என்றொரு விளக்கம் கூறப்படுகிறது. இதற்கு மறுதலையாகப் பின் வரும் கருத்து அமைகிறது.

"உறங்கலும் விழித்தலும் இன்றி இமையாமுக் கண்ணினனாய், தானே முழுதுணரும் இயற்கைஉணர் வினனாய், நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் இறைவனைத் துயிலெழுப்புவதென்பது, உண்மை நிகழ்ச்சியாதலின்றி வெறும் உபசாரமேயாகும். ஆயினும் 'துஞ்சும் பொழு

தாடுஞ்சோதி' ஆகிய அம்முதல்வனை, உறங்கிவிழிக்கும் இயல்பினராகிய மாந்தர்தாம் துயில் எழுங்காலத்துத் தொழுதுகொண்டு எழுதுதல் இன்றியமையாததாலின், அவன் அருளாலே அவன்தாள் வணங்கித் துயிலெழும் வழிபாட்டு நெறிமுறையினை மாந்தர்க்கு அறிவுறுத்தும் நோக்கத்துடன் திருவாதவூரடிகளால் திருவாய்மலர்ந்த அருளப்பெற்றது 'திருப்பள்ளியெழுச்சி' என்னும் இப்பனுவலாகும்''[54] எனும் இக்கருத்து இங்கு மிகப்பொருந்தி நிற்றலை உணரமுடியும்.

> ''போற்றியென் வாழ்முத லாகிய பொருளே
> புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்
> டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
> எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
> சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
> திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
> ஏற்றுயர் கொடியுடை யாயெனை யுடையாய்
> எம்பெருமான் பள்ளி எழுந்தரு ளாயே''[55]

இவ்வாறு எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தாலியன்ற 10 பாடல்களைக் கொண்டமைந்துள்ளது, இத்திருப்பள்ளியெழுச்சி. பாடலின் ஈற்றடிகள் 'எம்பெருமான் பள்ளியெழுந்தருளாயே', 'ஆரமுதே பள்ளியெழுந்தருளாயே', 'அலைகடலே பள்ளியெழுந்தருளாயே' என்று முற்றுப் பெற்றுள்ளன.

இதனைப் பின்பற்றியே பிற திருப்பள்ளியெழுச்சிகள் இன்றளவும் தோற்றம் பெற்றுள்ளன. பாட்டுடைத் தலைவராகப் 'பாரதமாதா'வைப் பாரதியார் பாடும் போக்கையும் அறியவியலும். இவ்வாறு பன்னூல்கள் எழுந்துள்ளன.

## 1.22. பாதாதிகேசம்

பாதாதிகேசம் என்பது அடிமுதல் முடிவரை என்று பொருள் தருவதோடு அடிமுதல் முடிவரையுள்ள இறைகளின் உறுப்புகளைச் சிறப்பித்துப்பாடும் ஓர் இலக்கிய வகையையும் குறிப்பதாக அமைகின்றது. தெய்வங்களுக்குப் பாதாதிகேசமும், ஏனையவர்களுக்குக் கேசாதி பாதமும் கூறுதல் மரபு என்று நவநீதப் பாட்டியலின் குறிப்புரை (43) கூறுகின்றது.

பத்துப்பாட்டிலமையும் சிறுபாணாற்றுப்படை பாதாதி கேசம் என்ற நிலையிலில்லாமல் விறலியர் உறுப்புகளின் வருணனையைத் தருகின்றது. திருமுருகாற்றுப்படை-சூரர மகளிரின் கிண்கிணி அணிந்த சீறடி – தொடர்ந்த பல உறுப்புகளின் வருணனையைத் தருகின்றது. 'பாதகேசம்' எனுஞ்சொல் நிலையைப் பெரியாழ்வாரின் திருமொழி தருவதாகக் குறிப்பர் இதனால் பக்திக் காலமே இத்தகைய இலக்கியத் தோற்றத்திற்கு வழிவகுத்தது எனல் சாலும். பாட்டியல் நூல்கள் இதன் இலக்கணத்தை வரையறை செய்துள்ளன. திருமுறைகளில் மூன்று பதிகங்கள் 'பாதாதிகேசம்' என்று குறிக்கும் நிலையில் அமைந்துள்ளன.

அவை அப்பரின் நான்காந் திருமுறையிலமைந்த கோயில்திருப்பதிகமும் ஒன்பதாந்திருமுறையில் திருவாலிய முதனார், திருமாளிகைத் தேவர் ஆகியோர் பாடியுள்ள திருவிசைப்பாக்களில் இரண்டும் இவ்வகையில் அடங்கு கின்றன. அப்பரின் திருவங்கமாலையானது தலைமுதல் கால்வரையமைந்த உறுப்புகளின் செயல்பாடு எங்ஙனம் விளங்க வேண்டுமென்று குறிப்பிடுகின்றது. ('மாலை' எனும் பிரிவில் இது பற்றிப் பேசப்படுவதால் இப்பகுதி இங்கு விடப்படுகின்றது). அப்பரின் கோயில் திருப்பதிக மானது இறைவன் அடியில் தொடங்கி முடியில் முடியும்

10 பாடல்களைக் கொண்டு திருவிருத்தத்தில் அமைந்து உள்ளது.

**"பொருவிடை ஒன்றுடைப் புண்ணியமூர்த்தி புலியதளன்**
**உருவுடை அம்மலைமங்கை மணாளன், உலகுக்கெல்லாம்**
**திருவுடை அந்தணர் வாழ்கின்ற தில்லைச் சிற்றம்பலவன்**
**திருவடியைக் கண்டகண்கொண்டு மற்றினிக்**
**காண்பதுஎன்னே?"**[56]

என்றமைந்து இறைவனின் திருவடியைப் புகழ்கின்றது.

திருவாலியமுதனார் அருளியுள்ள ஏழாந்திருவிசைப் பாவின் முதல் பதிகமாகிய கோயில் பதிகம் இறைவன் திருவடிமுதல் திருமுடிமுடிய அமைந்த பதினொரு பாடல்களைக் கொண்டுள்ளது.

**"நீர்வயல் தில்லையம் பலத்தான்**
**செய்யபாதம் வந்தென் சிந்தை**
**யுள்ளிடங் கொண்டனவே"**[57]

எனவும்,

**"கூத்தனார் கழற்**
**சிலம்புகிங்கிணி யென்சிந்தை**
**யுள்ளிடங் கொண்டனவே"**[58]

எனவும் இவை போன்ற பிறவற்றையும் சான்றாக்கிக் கூறமுடியும்.

திருமாளிகைத் தேவர் அருளியுள்ள முதல் திருவிசைப் பாவின் 2-ஆம் பதிகமான கோயில் பதிகத்தில் தில்லை இறைவனின் திருவடிமுதல் திருமுடிமுடிய அமைந்த உறுப்புகளின் வருணனையும் அவை அவர் மனத்தில் ஏற்படுத்திய பக்தியையும் பாதிப்பையும் கூறுவதன்மூலம் மேற்குறிப்பிட்ட இலக்கிய வகைக்கு இதனைச் சான்றாக்கி யுள்ளார் எனல் பொருந்தும். சிவனின் திருஅங்கங்களை

வரிசையாக வைத்துச் சிறப்பித்துக் கூறியுள்ளமையால் இதனை 'அடிமுதல்முடி' என்ற தலைப்பின்கீழ் அடக்கினர் போலும்.

சான்றாக,

"அம்பலக் கூத்த!
மதுமதி வெள்ளத் திருவயிற் றுந்தி
வளைப்புண்டென் உள்மகிழ்ந் ததுவே"[59]

எனவும்,

"அணிமணி முறுவல் பவளவாய்ச் செய்ய
சோதியுள் ளடங்கிற்றென் னறிவே"[60]

எனவும் வரும் பாடலடிகளைச் சுட்ட முடியும். அடியவர் மனத்தில் இறையுருவம் ஏற்படுத்திய பக்திக் கிளர்ச்சியை மேற்கூறியவற்றின்மூலம் உணரமுடிகின்றது. பிற்காலத்தும் இப்போக்கு பேணப்பட்டமையை இலக்கியங்கள் சில வற்றால் பெறவியலும்.

## 1.23. பாவை

பதுமை, அழகிய உருவம், கருவிழி, பெண், குரவமலர், பாவைக் கூத்து, நோன்புவகை, திருவெம்பாவை, திருப்பாவை, இஞ்சிக்கிழங்கு, மதில் போன்ற பொருள் களைத் தரும் சொல்லே 'பாவை' எனப் பெறுஞ்சொல். இவ்விடத்தில் பெண்களால் மேற்கொள்ளப்படும் நோன்பைக் குறிப்பதாக அமைகின்றது. பாவை எனும் இச்சொல் இன்று திருப்பாவை, திருவெம்பாவைகளைச் சுட்டி நிற்கின்றது.

"நோன்பு எனும் பொருளில் பாவை எனுஞ்சொல் ஆளப்பட்ட பக்திக் காலம், பாவை இலக்கியத் தோற்றக் களமாகவும் அமைகின்றது. பாவை எனும் சொல்லால் இலக்கியமும் குறிக்கப்படும் நிலையை இக்காலம்

அளிக்கின்றது. பதுமை எனும் அடிப்படைப் பொருள், பாவையியற்றி நோன்பு நோற்ற நிலையில் நோன்புக்கும், அதைத் தொடர்ந்த இலக்கியத்திற்கும் ஆயிற்று எனலாம்.''[61]

சங்ககாலத்தில் இப்பாவையானது இறைச்சார்பின்றி வழக்கில் இருந்தமையை இலக்கியங்கள் சுட்டுகின்றன. சங்க இலக்கியத் தைநீராடல் மரபானது பிற்காலத்தில் மார்கழி நீராடலாகப் பாவைப்பாடலாக அமைந்தமையைத் திருப்பாவை, திருவெம்பாவைகள் விளக்கி நிற்கின்றன.

இவ்வகையில் மாணிக்கவாசகரின் ''திருவெம்பாவை 20 பாடல்களையுடையது. இப்பாடல்கள் யாவும் மகளிர் ஒருவரையொருவர் நோக்கி எம்பாவாய் என அழைத்துக் கூறும் முறையில் 'பாவைமார் ஆரிக்கும் பாடலாக' அமைந்திருததலால் திருவெம்பாவை என்பது இதற்குரிய பெயராயிற்று பாவை என்னும் ஐகார வீற்றுப் பெயர், 'ஐ ஆயாகும்' (தொல். விளிமரபு. 4) என்னும் விதிப்படி, 'பாவாய்' என விளியேற்றது. மகளிர் ஒருவரையொருவர் துயிலுணர்த்தி அழைத்து நீராடி இறைவனைப் போற்றும் முறையில் அமைந்த இப்பனுவலைப் 'பாவைப்பாட்டு' என வழங்குவர்''[62] என்றிவ்வாறு திருவெம்பாவை குறித்துக் கூறப்படுகிறது. ''மும்மல இருளில் உறங்காமல் விழித்துப் பக்குவம் பெற்றவர் இறைவனது அருள் வெள்ளத்தில் முழுக வருக என்று அழைக்கும் உட்கருத்தையுடையது இப்பிரபந்தம்''[63] எனும் கூற்றும் இங்குக் கருதத்தக்கதாகும்.

**''காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்**
**கோதை குழலாட வண்டின் குழாமாடச்**
**சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி**
**வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்**

**சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி**
**ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்**
**பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்**
**பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய்''[64]**

எனும் வகையில் 20 பாடல்களைக் கொண்டு கொச்சகங்களால் ஆகிய பாவைகளாக இப்பாடல்கள் அமைந்துள்ளன. 'ஆடேலோர் எம்பாவாய்' என்ற ஈறு ஒவ்வொரு பாடலின் ஈற்றிலும் இடம் பெறுகின்றது. இப்பாவைப் பாடல்கள் பிற மதத்திற்குரியாரும் - பாடும்வண்ணம் தற்போது தோற்றம் பெற்றுள்ளன. இதனை, ''ரமலான்மாத நோன்பைக் குறித்துக் கா. மு. ஷெரீப் எழுதிய 'இசுலாமியப் பாவை', காரை. இறையடியானின் 'திருவருட்பாவை' ஆகியன திருப்பாவை, திருவெம்பாவைப் பாடல்களின் தாக்கத்தால் தமிழுலகு பெற்ற பாவைப் பாடல்கள் ஆகும்,''[65] என்ற கூற்றின்வழியறியலாம். பாவைப் பாடல்கள் பெற்ற பிற மதச்செல்வாக்கினை இதன் வழி உணரமுடிகின்றது.

## 1.24. பிள்ளைத் தமிழ்

ஒரு பிரபந்தத்தைக் குறிக்கும் சொல்லாக இஃது அமைகின்றது. தொல்காப்பியரின் 'குழவி மருங்கினும் கிழவதாகும்' எனும் கூற்று இங்கு கருதத்தக்கது. குழந்தையாகப் பாவித்து ஒரு தலைவன்மீது பாடப்படும் நிலையைக் கூறுகின்றது என்பர்.

பிள்ளைத் தமிழ் என்றிலக்கியப்பெயர் அமையினும், பிள்ளைக்கவி, பின்ளைப்பாட்டு, பிள்ளைத்திருநாமம் எனும் பெயர்களே இலக்கியங்களில் அமைகின்றன. 'பிள்ளைத்தமிழ்' எனுஞ்சொல் எங்கும் அமையவில்லை. இப்பெயர் முதன்முதலில் ஒட்டக்கூத்தரின் குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழில் அமைகின்றது. திருமுறைகளில்

பிள்ளைத்தமிழின் கூறுகளாக ஒருசில குறிப்புகளே "காணப் படுகின்றன. இவையும் கொண்டு கூட்டிப்பொருள் கொள்ளும் நிலையில் அமைகின்றன.

இப்பிள்ளைத் தமிழானது, ஆண்பாற்பிள்ளைத்தமிழ், பெண்பாற்பிள்ளைத்தமிழ் எனும் இரு பிரிவுகளைக் கொண்டிலங்குகின்றது. ஆண்பாற் பிள்ளைத்தமிழுக் குரியனவாகக் காப்பு, செங்கீரை, தாலம், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் ஆகியவை அமைகின்றன. இவற்றுள் சிறுபறை, சிற்றில், சிறுதேர் பருவங்களுக்குப் பதிலாகப் பெண்பாற் பிள்ளைத் தமிழில் கழங்கு, அம்மானை, ஊசல் ஆகியவை அமை கின்றன. இவற்றுள் ஒன்று நீக்கி, 'நீராடலு'ம் இணைக்கப் பெறுதல் உண்டு. திருத்தொண்டத்தொகை, திருத் தொண்டத்திருவந்தாதி இவ்விரு நூல்களின் விரிவாகச் சேக்கிழார் தாம் பாடிய 'திருத்தொண்டர் புராணத்'துள் திருஞானசம்பந்தரின் வரலாற்றை 1256 பாடல்களால் பாடியுள்ளார். திருத்தொண்டர் புராணத்தின் மொத்த பாடல் தொகை 4286 ஆகும். சம்பந்தரைப் பற்றி மட்டும் 1256 பாடல்கள் அமைந்துள்ளமை அவரது சிறப்பை யுணர்த்தும்.

இதனுள் சம்பந்தரின் குழந்தைப் பருவம் பற்றியும் பாடியுள்ளார் சேக்கிழார். தற்காலத்தில் பிள்ளைத் தமிழுக் குரிய பருவங்களாகக் கருதப்படும், காப்பு, தாலாட்டு, செங்கீரை, சப்பாணி, வருகை, தளர்நடை, தேர் ஆகியவற்றைக் குறித்தமையும் பாடல்கள் ஏழு இதனுள் அமைகின்றன.

> **"நாமறியோம் பரசமய முலகிலெதிர் நாடாது**
> **போமகல வெனவங்கை தட்டுவதும் புனிதன்பால்**
> **காமருதா ளம்பெறுதற் கொற்றுவதுங் காட்டுவதுபோல்**
> **தாமரைச்செங் கைகளினாற் சப்பாணி கொட்டினார்"[66]**

என்றும் இதுபோலமையும் பிறவும் சான்றாக்கியுரைக்க உதவுவன

மாணிக்கவாசகரின் திருவம்மானை, ஊசல், திருவெம்பாவை போன்றவை பெண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய கூறுகளாக அமைகின்றன. அம்மானைப் பருவத்திற்குத் திருவம்மானையையும், ஊசலுக்குத் திருப்பொன்னூசலையும், நீராடலுக்குத் திருவெம்பாவையில் அமையும் பாவை நோன்பாகிய நீராடலையும் குறிப்பிட முடியும். திருமுறைகளில் இவ்வாறு சிற்சில கூறுகள் பிள்ளைத் தமிழுக்குரியவனாக அமைகின்றன.

திருமுறைகள் பல சிற்றிலக்கியங்களுக்குத் தோற்றம் வழங்கியுள்ள போதிலும் பிள்ளைத்தமிழ் இலக்கியத்திற்குத் தோற்றம் வழங்காமை என்பது 'சிவபெருமான்' பிறப்பும் இறப்பும் அற்றவன் எனுங்கருத்தாலிருக்கலாம். இதனால் அவனைக் குழந்தையாகப் பாவித்து இலக்கியம் படைத்தல் என்பது எழாமல் போயிருக்க வாய்ப்புண்டு.

## 1.25. கோபப்பிரசாதம்

சினமும் அருளும் ஆகிய இரு முரணியல்புகளைப் பற்றி மாறிமாறி அமையப் பாடப்பெற்ற நூல்வகையே கோபப்பிரசாதமாகும். இதனைக் 'காய்வருள்'– அதாவது காய்தலும் அருளலுமாகிய பண்புடையது என்றும் குறிப்பர். "வேண்டுமை வேண்டாமையிலானாகிய சிவபெருமான் தன் திருவருளாணைவழி நில்லாத தீயோரைக் கோபித்தும் தனது அருள் வழியொழுகும் நல்லோரைக் காத்தும் மன்னுயிர்களின் நலங்கருதிச் செய்தருளியதெறலும் அளியுமாகிய இருவகைச் செய்திகளையும் அடுத்தடுத்து எடுத்துரைப்பது நக்கீரதேவர் பாடிய கோபப்பிரசாதம் என்னும் பிரபந்தமாகும்"[67] என்று கோபப்பிரசாதத்திற்கு விளக்கமளிக்கப்படுகின்றது.

மேலும், குற்றங் கூறிய தம்மீது கோபித்துப் பின் அவர் தமது பாடலாகிய 'கயிலைபாதி காளத்திபாதியந் தாதி' கேட்டு மகிழ்ந்து பிரசாதம் (கருணை) செய்ததால் இப்பெயர் பெற்றது என்றும் குறிப்பிடுவர் சங்க இலக்கியத்தில் 'அளியும் தெறலும் உடையோய்' என்றொரு புலவர். பாடியமை நெறியின் நீங்கியோரிடத்துத் தெறலும் நெறியின் நின்று அன்பு செய்வோர்க்கு அளியும் செய்தல் அரச இயல்பாயிருந்து இறைஇயல்பானமையை இக் கோபப்பிரசாதத்தோடு பொருத்திக் காணலாம். இப்பாடல் 100 அடிகளாலாகிய ஆசிரியப்பாவால் இயற்றப் பட்டுள்ளது

**''மானுட னாகிய சண்டியை**
**வானவன் ஆக்கியும்**
**மாறிகடல் உலகின் மன்னுயிர் கவரும்**
**கூற்றுவன் தனக்கோர் கூற்றுவ னாகியும்''**[68]

என அருள், கோபம் ஆகிய இரு நிலைகளையும் இவ்வரி களின் மூலம் அறியமுடியும் இவ்வகையில் இதுவொன்றே இலக்கியமாகக் காணப்படுகின்றது.

## 1.26. புராணம்

புராணம் என்பதற்கு அகராதி, பழங்கதை, பழைமை, பழைய நிகழ்ச்சி ஆகியவற்றைப் பொருளாக உரைக் கின்றது. நாட்டிலும் ஏட்டிலும் வழங்கிய கதைகளைத் தொகுத்தமைத்த நூலே புராணமாயிற்று என்றுரைப்பர். இவ்வகையில் சேக்கிழாரின் பெரியபுராணம் குறிக்கத்தக்க தாகும்.

இது தமிழ்நாட்டில் நிகழ்ந்த உண்மை நிகழ்ச்சிகளாகிய வரலாறுகளைத் தொகுத்தும் வகுத்தும் இயற்றப்பெற்ற தாகும். சுந்தரரின் திருத்தொண்டத் தொகையும் நம்பி யாண்டாரின் திருத்தொண்டர் திருவந்தாதியும் அடிப்படை

யாக அமைய வழக்குஞ் செய்யுளும் நாடிச்சேக்கிழார் இதனை இயற்றியுள்ளார்.

"சேக்கிழார் இயற்றிய இத்திருத்தொண்டர் புராணம், 'உள்ளோன் தலைவனாக உள்ளது புணர்த்தல்' என்னும் முறையிலமைந்த வரலாற்றுக்காப்பியமாகும். இந்நூலிற் போற்றப்பெறும் திருத்தொண்டர் யாவரும் இந்நாட்டிற் பிறந்து வாழ்ந்தவர்களேயாவர். அவர்களைக் குறித்து இந்நூலிற் கூறப்பெறும் உலகியற் செய்திகள் யாவும் உண்மையாக நிகழ்ந்த செய்திகளே என்பது அச்செய்திகளிற் பல தமிழக வரலாற்றிற் கல்வெட்டுச் சான்றுகளோடும் தமிழிலக்கியச் சான்றுகளோடும் தொடர்புடையனவாய் நெடுங்காலமாக வழங்கிவரும் முறைமை கொண்டு நன்கு துணியப்படும்"[69] என்ற கூற்றின்வழி அறியப்படும் செய்திகள் பெரியபுராணத்தின் வழக்கினை உரைக்கின்றன.

இந்நூலினைப் பற்றி மேலும், வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த மெய்யடியார்களின் உலகியல் வாழ்வினை உள்ளவாறு விளக்கு முகமாக, உலக மக்களால் தெய்வத்துள் வைத்துப் போற்றப்பெற்ற அப்பெருமக்களது அருள் வாழ்வினை அறிவுறுத்துவது, இதன் பெருமை யாகும் என்றும் குறிப்பர். 'உலக முய்யவும் சைவநின் றோங்கவும்' எனத் திருமலைச்சிறப்பின் இறுதியில் தோற்றுவாய் செய்துகொண்டு புராணத்தைத் தொடர்ந்து பாடுகின்றார் சேக்கிழார். புராணமாக இருப்பினும் காப்பியக் கூறுகள் பொருந்திய ஒரு காப்பியமாகவே இது விளங்குகின்றது.

இது, 4286 பாடல்களையும் திருமலைச்சருக்கம் முதலாக வெள்ளானைச் சருக்கம் ஈறாகப் பதின்மூன்று சருக்கங்களையுமுடையதாக அமைகின்றது. 'பிள்ளை பாதி புராணம் பாதி' எனும் வகையில் 4286 பாடல்களில்

1256 பாடல்கள் கொண்டதாகச் சம்பந்தர் புராணம் அமைந்துள்ளது,

மாணிக்கவாசகரின் 'சிவபுராணமு'ம் இவ்வகையில் அடங்குகின்றது. எல்லாம் வல்ல முழுமுதற்பொருளாகிய சிவனின் அநாதி முறைமையான பழமைகளை விரித் துரைப்பதால் இப்பெயர் பெற்றதென்றுரைப்பர். 95 அடிகளாலான கலிவெண்பாட்டால் இயன்றுள்ளது இது.

'நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க' என்று தொடங்கி இறைவனின் பல தன்மைகளைக் கூறுவதாக இப்பகுதி அமைந்துள்ளது. தற்போது பல்வேறு வகையான புராணங்கள் தோற்றம் பெற்றுள்ளன. இதனால் புராணங் களின் எண்ணிக்கையும் அதிகரித்துள்ளது. பழமை என்ற பொருள்படப் புராணம் என்றசொல் திருமுறைகளில் பயின்று வந்துள்ளதைக் கருதமுடியும். சிவபுராணம் என்பதில் சிவனின் அருளிச் செயல்கள் நிரல்பட வைக்கப் பெறுதலையும் காணவியலுகிறது.

## 1.27. புலம்பல்

புலம்பு என்பதற்கு, அழுகையொலி, தனிமை, பிரிவு, குற்றம், வருத்தம், வெறுப்பு, கடற்கரை, துன்பம், புலம்பல், புலம்பென்னேவல் என்ற பொருள்களையும், புலம்புதல் என்பதற்கு – அழுதல், ஒலித்தல் போன்ற பொருள்களையும் அகராதி வழங்குகின்றது. 'புலம்பே தனிமை' என்பது தொல்காப்பியர் கூற்றாகும். புலம்பல் என்பது தனிமையுற்று வருந்துதல் எனும் பொருளிலேயே மாணிக்கவாசகரின் திருப்புலம்பலில் கையாளப்பட்டுள்ளது.

"உயிர்களுக்கு இறைவனையன்றித் துணையாவர் பிறரிலர் எனத் தெளிந்துணர்ந்த திருவாதவூரடிகள், தமக்குக் குருவாய் வந்தருளிய அம்முதல்வனைப் பிரிந்துறைய நேர்ந்த தமது தனிமை நிலைக்கு மிகவும்

வருந்தி, 'தான் ஈன்ற இளங்கன்றினைப் பிரிந்து கதறி யழைக்கும் தாய்ப்பசுவின் பேரன்பினையொத்த பேரன்பினை அடியேற்கு அருள்புரிவாயாக' என இறைவனை இரந்து வேண்டும் நிலையில் அருளிய பனுவலாதலின், இது திருப்புலம்பல் என்னும் பெயர்த்தாயிற்று"[70] என்று திருப்புலம்பலுக்குப் பெயர்க்காரணம் கூறப்படுகின்றது.

'திருவேசறவு'ம் இவ்வகையிலமைந்த பதிகமாகவே உள்ளது. இறைவனது பெருங்கருணைத் திறத்தை நினைந்து உருகிப் பாடியப் பதிகமாதலின் இப்பெயர் பெற்று விளங்குகின்றது. திருவேசறவு 10 பாடல்களைக் கொண்ட கொச்சகக் கலிப்பாவாலியன்றதாகவும் திருப்புலம்பல் மூன்று பாடல்களைக் கொண்டு அதே யாப்பில் அமைந்ததாகவும் அமைந்துள்ளன.

**"உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்**
**கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்**
**குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாஉன் குரைகழற்கே**
**கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே"[71]**

என்று அமையும் பாடலைப் புலம்பலுக்குச் சான்றாக்க முடியும்.

சங்க இலக்கியம் தலைவனின் பாசறைப் புலம்பலையும் மகளைப் பிரிந்த தாயின் புலம்பலையும் குறிப்பிட்டு அகச் சார்பு காட்ட மாணிக்கவாசகரின் புலம்பலானது பக்தியை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு வளர்ந்துள்ளது. இதன் பின்னும் பல புலம்பல்கள் தோன்றியுள்ளன. இவை பக்தியாக மட்டுமின்றி வேறு பொருண்மைகளையும் கொண்டமைந்துள்ளன.

## 1.28. மந்திரம்

ஆலோசனை, மந்திரிகள் சபை, எண்ணம், வேதமந்திரம், பஞ்சாட்சரம் அஷ்டாட்சரம் போன்ற தெய்வமந்திரம், நூற்றெட்டு உபநிடதங்களில் ஒன்று, திருமந்திரம், இவை மந்திரம் என்ற சொல்சொல்லும் பொருள்களாம். தாம் சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டும் குறை வின்றிப் பயன்தரச் சொல்லும் ஆற்றலுடைய நிறைமொழி மாந்தராகிய பெரியோர் 'இவ்வாறு ஆகுக' எனத் தனது ஆணையாற் சொல்லப்பட்டு, அவ்வாற்றலனைத்தையும் தன்கண் பொதிந்து வைத்துள்ள செறிவுடைய நன்மொழியே மந்திரம் எனப்படும் என்று மந்திரத்திற்கு விளக்கமளிக்கப் படுகிறது.

தொல்காப்பியர்,

> "நிறைமொழி மாந்தர் ஆணையின் கிளந்த
> மறைமொழி தானே மந்திரம் என்ப"[72]

என்று குறிப்பிட்டுள்ளார். நச்சினார்க்கினியர் மந்திரச் செய்யுள் என்றிதனைக் குறித்துள்ளார்.

திருமூலரின் 'திருமந்திரம்' பத்தாந்திருமுறையாக அமைந்து மந்திரம் போன்றே விளங்குகின்றது. "பக்திக் கவிஞர் இறைவனைப் பாடிப்போற்றி அவன் ஆற்றல், புகழ் ஆகியவற்றைப் பரப்புவதுடன் நின்றுவிடாது, தம்பாடல் வன்மையால் பல அற்புதச் செயல்களையும் நிகழ்த்தியுள்ளமை மந்திர ஆற்றலை வெளிப்படுத்துகின்றது. 'மந்திரமாவது நீறு' எனச் சம்பந்தர் பாடியதை இங்கு நினைக்கலாம். முதல் சித்தராகவும் மூத்த நாயனாராகவும் அமையும் திருமூலர் இம்மந்திர ஆற்றல் நிலைக்கு முன்னோடியாக அமைக்கின்றார்."[73]

இது திருமந்திரமாலை என்றும் குறிக்கப்படுகின்றது. இந்நூல் அனைத்துத் தோத்திர சாத்திர நூல்களுக்கும்

மூலமாக அமைந்துள்ளது. மந்திரம் பற்றிய கருத்தும் எண்ணமும் முன்னரே உள்ளபோதும் மந்திர இலக்கிய வகைக்கு முதல் சான்றாக இந்நூல் அமைகின்றது.

"மூலனுரை செய்த மூவாயிரந் தமிழ்
மூலனுரை செய்த முந்நூறு மந்திரம்
மூலனுரை செய்த முப்பது உபதேசம்
மூலனுரை செய்த மூன்றும் ஒன்றாமே"[74]

எனப்பெயர் மட்டுமின்றி உட்குறிப்பும் நூலை மந்திர மாக்குதலை உணரமுடியும் என்றுரைப்பர். 'மறைபொருட் கூறு' எனும் தலைப்பில் வரும்,

"பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாய்ச் சொரியுமே"

என்று மனமாகிய கருவியைக் கொண்டு ஐந்து புலன்களை யும் அடக்கி ஒழுக வேண்டும் என்பதை இப்பாடல் வழியே புலப்படுத்துகின்றார். இறைவன் திருவருள் பெற்ற திருஞானசம்பந்தப் பிள்ளையார், 'எந்தை நனி பள்ளியுள்ள வினைகெடுதல் ஆணைநமதே' (2-84-11) எனவும், 'ஆனசொன் மாலையோதும் அடியார்கள் வானில் அரசாள்வார் ஆணைநமதே' (2-85-11) எனவும் தம்மேல் ஆணையிட்டும், 'செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்' (1-116-1) என இறைவன் திருநீலகண்டத் தின் மீது ஆணையிட்டும் ஓதிய திருப்பதிகங்கள், நிறைமொழி மாந்தரது ஆணையின் ஆற்றலை நன்கு புலப்படுத்தி நிற்றல் காணத்தகும் என்று உரைப்பர். தனித்த தோரிலக்கியமாகவே மந்திரம் திருமுறைகளில் இடம் பெறுதலைக் கவனித்தல் தகும்.

## 1.29. மறம்

மறம் என்னும் இச்சொல் வீரம், பகை, வலி, வெற்றி, போர், கொலைத் தொழில், யமன், கெடுதி, பாவம், தம் குலத்துப் பெண்ணை விரும்பிய அரசற்கு மறவர் உடம் படாது மறுத்துக் கூறுவதாகப் பாடும் கலம்பக உறுப்பு, மறக்குடி போன்ற பல பொருள்களைக் கொண்டுள்ளது. புறத்திணையின் துறைகள் வளர்ச்சியுற்றுத் தனியிலக்கிய மாக நிற்றலை 'மறம்' எனும் இவ்விலக்கிய வகை விளக்கி நிற்கின்றது. பாட்டியல் நூல்களில் பன்னிருபாட்டியல் மட்டுமே இதனை ஓர் இலக்கிய வகையாக்கி இலக்கணம் படைத்துள்ளது.

**"பெருநில வேந்தன் மகட்பால் வேண்டி**
**ஒருபெருந் தூதன் உரைத்தமொழி கேட்டுக்**
**குறுநில மறவன் வெஞ்சினந் திருகி**
**மாற்றமிக உரைப்பது மறமென மொழிப"**[75]

என்று அவ்விலக்கணம் அமைந்துள்ளது.

பதினொராந்திருமுறையில் நக்கீரதேவ நாயனார், கல்லாட தேவநாயனார் ஆகிய இருவராலும் பாடப் பட்டுள்ள 'மறங்'கள் மறம் எனும் பெயர் பெறினும் வீரத்தின் வேறுபட்ட கண்ணப்பரின் மறப்பக்தியையே சுட்டி நிற்கின்றன எனவேதான் இவற்றின் பெயர்களுங்கூட, 'திருக்கண்ணப்ப தேவர் திருமறம்' என்றே அமைகின்றன. பெயர் ஒற்றுமையே தவிர மறக்கூறுகள் வேறு எவையும் இவற்றில் அமையவில்லை. பெயரைக் கொண்டே 'மறம்' எனும் இலக்கிய வகைக்குச் சான்றாக்கினர் போலும்.

"அடியவரின் கதைகளைச் சேர்த்துச் சேக்கிழார் பாடுமுன் தனியடியாரொருவர் வரலாற்றை இவர் விரிக் கின்றனர். முன்னதன் நீட்சி (157) பின்னதில் (38) அமைய வில்லை. முன்னதில் கண்ணப்பர் பெருமைகூறும் நோக்கம்

மட்டுமமையப் பின்னதில் கண்ணப்பர் வேடுவராயினும் அவரடி கைதொழ வினையகலும் எனப் பிறிதொரு நிலையமைகின்றது''[76]. இங்ஙனம் திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என்ற இருநூல்களும் அமைகின்றன. இதன்பின் 'மறம்' குறித்த நூல்களும் தோன்றியுள்ளன.

## 1.30. வார்த்தை

அகராதி வழியே வார்த்தை என்ற சொல்லுக்குச் செய்தி, வசனம் என்ற இருபொருள்களைப் பெறமுடிகிறது. இஃது ஓர் இலக்கிய வகையாகவும அமைகின்றது. இதனை மாணிக்கவாசகரின் திருவார்தஐத மூலமும பிற வார்த்தை நூல்களின் மூலமும் உணரமுடியும். சிவபெருமான் திருப் பெருந்துறையில் குருவாக எழுந்தருளி முழுமுதற் பொரு ளாகியதன் உண்மையினை வெளிப்படுத்தியருளியது முதலாகத் தன் சீரடியார்களுக்கு அருளியதிறங்களாகிய புகழ்ச்செய்திகளைப் போற்றிப் பரவும் பொருளுரை ஈறாக அமைந்ததனால் இப்பதிகத்திற்குத் 'திருவார்த்தை' என்ற பெயர் அமைந்ததாகக் குறிப்பர்.

''மாணிக்கவாசகரின் திருவாசகத்தில் 'வாக்குஉன் மணிவார்த்தைக்கு ஆக்கி' (30) எனவும், 'வார்த்தையும் பேசி' (166) எனவும், 'என்னை ஓர் வார்த்தையுட் படுத்துப் பற்றினாய்' (399) எனவும், வார்த்தை என்னும் சொல்லை இறைவனது பொருள்சேர் புகழ் என்ற பொருளிலும் இறைவன் அருளிய உபதேசமொழி என்ற பொருளிலும் ஆண்டுள்ளார். எனவே, அவரருளிய திருவார்த்தை என்பது இறைவனது புகழை விரித்துரைக்கும் திருவுடைய வார்த்தை எனவும், இறைவனால் திருவாய் மலர்ந்தருளப்பெற்ற திருவுடைய உபதேச வார்த்தை எனவும் இருவகையாகப் பொருள் கொள்ளும் நிலையில் அமைந்து நின்றதெனக் கருதுதல் பொருந்தும்.''[77]

இத்திருவார்த்தையானது பத்துப் பாடல்களைக் கொண்டதாய் அறுசீர்க்கழி-நெடிலடி ஆசிரியவிருத்தத்தால் இயன்றதாக அமைந்துள்ளது ஒவ்வொரு பாடலின் ஈறும் 'எம்பிரான் ஆவாரே' என்ற ஈறுபெற்று முடிந்துள்ளது.

> "மாலயன் வானவர் கோனும்வந்து
> வணங்க அவர்க்கருள் செய்தஈசன்
> ஞால மதனிடை வந்திழிந்து
> நன்னெறி காட்டி நலந்திகழுங்
> கோல மணியணி மாடநீடு
> குலாவும் இடைவை மடநல்லாட்டுச்
> சீல மிகக்கரு ணையளிக்குந்
> திறமறி வாரெம் பிரானாவாரே"[78]

என்ற பாடலை இதற்குச் சான்றாக்கிக் கூறமுடியும்.

## 1.31. வாழ்த்து

வாழ்த்து என்பதற்கு ஆசி, துதி, மங்களம் பாடுகை போன்ற பொருள்கள் அமைகின்றன. வாழ்த்திப் பாடப் படும் பொருள் வகையால் பெற்ற பெயராக இந்த வாழ்த்து விளங்குகின்றது.

வாழ்த்து – வாயுறை வாழ்த்து, இயன்மொழி வாழ்த்து, கடவுள் வாழ்த்து எனப்பலவகைப்படும். புறநானூற்றில், இயன்மொழி வாழ்த்தாகப் புரவலனை நேரில்கண்டு வாழ்த்திப் பாடப்பட்ட பாடல்கள் உள்ளன. இவ்வாழ்த்தியலே பின்பு இறைமைச் சார்புபெற்றுத் தனியொரு இலக்கிய வகையாகும் அளவிற்கு வளர்ந்து உள்ளது. திருமுறைகளில் தனித்த நூலாக இந்த வாழ்த்து இடம்பெறாவிடினும் 'போற்றி', 'அடிபோற்றி', 'போற்றி போற்றி', 'வாழி' போன்ற சொற்களின்மூலம் வாழ்த்து வகை இலக்கியம் இடம் பெறலை உணரமுடியும்.

"நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான்
தாள்வாழ்க"[79]

எனவும்,

"ஈசனடி போற்றி எந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி"[80]

எனவும் வரும் சிவபுராணத்தின் வரிகளைச் சான்றாக்க முடியும்.

"போற்றித்திருஅகவல்" எனும் பதிகப்பெயரே 'வாழ்த்து' எனும் பொருண்மையை விளக்கி நிற்கின்றது. 225 அடிகளைக் கொண்ட இவ்வகவலானது 87-ஆம் அடி தொடங்கிப் பாடலின் இறுதியடிவரை போற்றி என்ற ஈறுபெற்று முடிந்துள்ளது.

"சைவாபோற்றி தலைவா போற்றி
குறியா போற்றி குணமே போற்றி"[81]

என்றமைவனவற்றைக் குறிப்பிட முடியும்.

ஆறாந் திருமுறையான அப்பரின் திருவாரூர்ப் பதிக மானது 'போற்றித் திருத்தாண்டகம்' எனும் பகுதியைக் கொண்டமைந்துள்ளது.

"சங்கரனே நின்பாதம் போற்றி போற்றி
சதாசிவனே நின்பாதம் போற்றி போற்றி"[82]

என்றமையும் பாடலடிகளை இவ்வகைக்கு எடுத்துக்காட்ட முடியும். இவ்வாறே அவர் பல போற்றித் திருத்தாண்ட கங்களைப் படைத்துள்ளார். இவையும் இவைபோல்வன பிறவும் வாழ்த்துவகைக்கு வளர்ச்சியமைத்துத் தந்துள்ளன.

## 1.32. விண்ணப்பம்

இச்சொல் மன்றாட்டம், பெரியோர் முன் பணிந்து கூறும் அறிவிப்பு, மனு கடவுள் திருமுன்பு பாசுரம் முதலியன

ஓதுகை எனப்பொருள் விரிக்கின்றது. நம்மாழ்வாரின் திருவிருத்தம் 'அடியேன் செய்யும் விண்ணப்பமே, என இச்சொல்லைக் கையான மாணிக்கவாசகரின் நீத்தல் விண்ணப்பம் இலக்கிய வகையாக்கியதோடு நீத்துவிடாது அருள்புரிவாயாக என்று வேண்டிக்கொள்ளும் பொருண்மை யையும் கொண்டமைகின்றது. 'கடையவனேனைக் கருணை யினால்' என முதற்பாடலின் முதலடித் தொடங்கி இறுதிப் பாடலின் இறுதியடியானது 'அமுதுண்ணக் கடையவனே' என அந்தாதியாக முற்றுப் பெற்றுள்ளது.

இந்நூல் 50 பாடல்களைக் கொண்டதாகக் கட்டளைக் கலித்துறையால் பாடப்பெற்றுள்ளது. 'நின்திருவடிக்குத் தொண்டுபட்ட என்னைக் கைவிட்டு விடுதலாகாது' என வாதவூரடிகள் ஆண்டவனை நோக்கி வேண்டிக் கொள்ளும் முறையில் அமைத்துள்ளமையால் இப்பதிகத்திற்கு '**நீத்தல்** விண்ணப்பம்' என்று பெயர் அமைந்தாகக் குறிக்கப்படுகிறது.

**"கொம்பரில் லாக்கொடி போல்அல மந்தனன் கோமளமே**
**வெம்புகின் றேனை விடுதிகண் டாய்விண்ணர்**
**நண்ணுகில்லா**
**உம்பருள் ளார்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே**
**அம்பர மேநில னேஅனல் காலொடப் பானவனே"[83]**

இவ்வாறு அமைந்த விண்ணப்பமே பின்னாளில் பல விண்ணப்பங்களுக்கு அடிகோலியுள்ளது. இவ்வகையில் வள்ளலாரின் திருவருட்பாவில் பல விண்ணப்பங்கள் அமைந்துள்ளன.

## 1.33. வேட்கை

பற்றுள்ளம், அவத்தை பத்தனுள் ஒன்றான காமவிருப்பம் ஆகியன வேட்கையால் குறிக்கப்படுகின்றன. இதுவே விருப்பத்தைப் புலப்படுத்தும் நிலையில் வேட்டல்

அமைந்து, விரும்புகை, ஏற்கை என்பனவற்றையும் உணர்த்துவதாக அமைகின்றது. இவ்வேட்டலானது திருஞானசம்பந்தரின் தேவாரத்தில்' மழைவேட்டலா'க அமைந்துள்ளதாகக் குறிப்பர். இதைத்தவிர மாணிக்க வாசகரின் பிரார்த்தனைப்பத்து வேண்டல் – விருப்பம் – வேட்கை என்னும் பொருண்மையில் அமைந்துள்ளது.

**''வேண்டும் வேண்டும் மெய்யடியா**
**ருள்ளே விரும்பி எனையருளால்**
**ஆண்டாய் அடியேன் இடர்களைந்த**
**அமுதே அருமா மணிமுத்தே**
**தூண்டா விளக்கின் சுடரனையால்**
**தொண்ட னேற்கும் உண்டாங்கொல்**
**வேண்டா தொன்றும் வேண்டாது**
**மிக்க அன்பே மேவுதலே''[84]**

இதன்பின் பல வேட்டல்கள் தோற்றம் பெற்று வளர்ந்து வந்துள்ளன. புறச்சமயமான கிறித்துவத்திலும் வேட்டல் அமைந்துள்ளது. இதற்குக் 'கிறித்துவின் அருள்வேட்டல்' சான்றாகின்றது.

## 1.34. சேத்திரக்கோவை

இது க்ஷேத்திரம், கேத்திரம் (புண்ணியஸ்தலம்) பன்னிரெண்டு சாளக்கிராமங் கொண்ட தொகுதி, கருப்பை, மனைவி என்ற பலபொருள்களைக் கொண்ட ஒரு சொல்லாகும். ஐயடிகள் காடவர்கோன் நாயனாரால் பாடப்பட்டுப் பதினொராந்திரு முறையில் அடங்கியுள்ளது சேத்திரத்திருவெண்பா. இதில் இறைவனுறைகின்ற திருத் தலங்களின் தொகுப்பு அமைந்துள்ளது. 'கோவை' என்று இலக்கிய வகையின் பெயர் அமைய, சேத்திரத்திரு வெண்பா என்று இவ்விலக்கியத்தின் பெயர் அமைகின்றது. சேத்திரங்களைப் பற்றி வெண்பாவால் பாடப் பட்டுள்ளமையால் இப்பெயர் பெற்றது எனக்கருத முடி

கிறது. இவருக்கு முன்பே திருத்தலங்களை வரிசைப் படுத்தியுரைக்கும் மரபு தேவாரங்களில் காணப்படுகிறது.

திருஞானசம்பந்தரின் – திருச்சேத்திரக் கோவை (175-ஆம் பதிகம்) இவ்வாறு தலங்களைக் கோவையாக்கி உரைக்கின்றது. இவ்வகையில் பதினொரு பாடல்கள் அமைகின்றன திருநாவுக்கரசரின் 'க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகம்' (283-ஆம் பதிகம்), இவ்வாறே தலங் களைத் தொகையாக்கித்தருகின்றது. 284-ஆம் பதிகமும் இவ்வகையில் அடங்குகின்றது.

**"தில்லைச் சிற்றம்பலமும், செம்பொன்பள்ளி**
**தேவன்குடி, சிராப்பள்ளி, தெங்கூர்**
**கொல்லிக்குளிர் அறைப்பள்ளி, கோவல்**
**வீரட்டம், கோகரணம், கோடிகாவும்**
**முல்லைப் புறவம் முருகன் பூண்டி**
**முழையூர் பழையாறை சத்திமுற்றம்**
**கல்லில்திகழ் சீரார் காளத்தியும்**
**கயிலாய நாதனையே காணலாமே**[85]

என்றொரு பாடல் மட்டும் இதற்குச் சான்றுரைக்கப் போதுமானது. மேலும், சுந்தரரின் திருநாட்டுத்தொகை (பதிகம். 12), ஊர்த்தொகை (பதிகம் 47) ஆகிய இவையும் கூட இவ்வமைப்பினைக் கொண்டே அமைந்துள்ளன. தற்போது இவற்றை அடியொற்றிப் பல சேத்திரக் கோவைகள் தோற்றம் பெற்றுள்ளன.

**பொருள் நிலையால் பாகுபடுவனவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்திக் கூறமுடியும்**

1. **முன்னரே இருந்த** இலக்கிய, இலக்கண – சொல் லாட்சிகள், பொருண்மைகள் ஆகியவை திருமுறைகளில் சிறு இலக்கியக்கூறாகவும், பெயரையும் பொருளையும் உள்ளடக்கிய சிற்றிலக்கியங்களாகவும் வளர்ந்துள்ளன; அவை-அண்டகோசம், ஆற்றுப்படை, இரங்கல், உலா,

கலம்பகம், கவசம், கைக்கிளை, கோவை, தசாங்கம், திருப்புகழ், தூது, தேவபாணி, தொகை, பல்லாண்டு, பள்ளியெழுச்சி, பாதாதிகேசம், பாவை, பிள்ளைத்தமிழ், புலம்பல், மந்திரம், மறம், வாழ்த்து, வேட்கை என்ற 23-ம் ஆகும்.

**1.1. இவற்றுள் திருமுறைகளில் சிற்றிலக்கிய வகையாகவே அமைந்தவை**

ஆற்றுப்படை, இரங்கல், உலா, கலம்பகம், கோவை, தசாங்கம், தேவபாணி, தொகை, பல்லாண்டு, பள்ளியெழுச்சி, பாதாதிகேசம், பாவை, புலம்பல், மந்திரம், மறம் போன்ற 15-ம் ஆகும்.

**1.2. சிற்றிலக்கியப்பெயரை அல்லது அதன் பொருண்மையை மட்டும் கொண்டிருந்து பின்னாளில் இலக்கியமாகியவை.**

அண்டகோசம், கைக்கிளை, திருப்புகழ், தூது, பிள்ளைத் தமிழ், வாழ்த்து, வேட்கை, என்ற '8-ம் ஆகும்.

**2. புதிதாகத் தோன்றிவளர்ந்த இலக்கியங்கள்**

இசைப்பா, சீட்டுக்கவி, கோபப்பிரசாதம், புராணம், வார்த்தை, விண்ணப்பம், கேஷத்திரக்கோவை - என்ற ஏழும் ஆகும்.

**3. திருமுறைகளில் சிறுகூறாக இருந்து அல்லது பொருண்மை மட்டும் சுட்டப்பட்டுப் பின்னாளில் இலக்கியமாகியவை**

அலங்காரம், ஆனந்தக்களிப்பு, உபதேசம், நாமக் கோவை போன்றவை.

இயல் - 2

# சித்திர கவிகளை அடிப்படையாகக் கொண்ட இலக்கியங்கள்

சித்திரகவி என்பது நாற்கவியுள் ஒன்றாக அமைகின்றது. இச்சித்திரகவியும் தன்னுள் பல இலக்கிய வகைகளைக் கொண்டதாக அமைந்துள்ளது. பாட்டியல் நூல்கள் சித்திரகவியின் இலக்கணம் பற்றியும் அதன் வகைகளைப் பற்றியும் விரிவாகக் - கூறியுள்ளன. சம்பந்தர் பாடல்களில் பல சித்திரகவிகள் காணப்படுகின்றன. இவை தேவார காலத்தில் சித்திரகவிகளின் செல்வாக்கைக் காட்டுவனவாக அமைந்துள்ளன.

திருஞானசம்பந்தரின் முதல்மூன்று திருமுறைகளிலும் திருவியமகம் (4), திருச்சக்கரமாற்று (1), ஏகபாதம் (1),

எழுகூற்றிருக்கை (1), திருக்கோமூத்திரி (1), திருமாலை மாற்று (1), கூடற்சதுக்கம் (1), வினாவுரை போன்றனவும் அப்பரின் திருமுறைகளில் வினாவிடை என்ற ஒரு வடிவும் சித்திரகவிகளாக அமைந்துள்ளன.

## 1.2. எழுகூற்றிருக்கை

இவ்வகை சித்திரகவியாகத் திருமுறையில் இரண்டு பதிகங்கள் அமைந்துள்ளன. முதல் திருமுறையில் 128 ஆம் பதிகமாகிய திருப்பிரம புரப்பதிகமும் பதினோராந்திரு முறையில் நக்கீரதேவநாயனாரின் திருவெழுகூற்றிருக்கையும் இவ்வகையில் அமைந்துள்ளன. எழுகூற்றிருக்கையானது இருநிலைகளில் அமையும் இயல்புடையது. ஒன்றுமுதல் ஏழுவரையுள்ள எண்கள் ஒவ்வொன்றாக முறையே ஏறியும் இறங்கியும் வருமாறு கூறப்படும் கவிதைச் சித்திரமே எழுகூற்றிருக்கை எனப்படுகின்றது. இதுமுதல் நிலை. ஒன்றுமுதல் ஏழு முடிய ஏறியேறி இறங்கி இறங்கி ஒன்றில் நிற்பது இரண்டாம் நிலை. இவை இரண்டிற்கும் யாப்பருங்கல விருத்தியுரை (96) சான்றளிக்கின்றது.

"எழுகூற்றிருக்கையாவது ஏழு அறையாக்கி முறை யானே குறுமக்கள் முன்னின்றும் புக்கும்போந்தும் விளை யாடும் பெற்றியான் வழுவாமை ஒன்றுமுதலாக ஏழிறுதி யாக முறையானே பாடுவது என விருத்தியுரையாசிரியர் விளக்கமளிக்கின்றார். பாட்டியல் நூல்களில் முத்துவீரியம் மட்டுமே இதனை இலக்கியவகையாகக் கொண்டுள்ளது. சில அணியிலக்கணங்கள் இதனைச் சித்திரகவிப்பட்டியலில் சுட்டுகின்றன."[86] திருமுறைகளில் அமையும் எழுகூற்றிருக் கைகள் பின்வருமாறு அமைகின்றன. 'ஒருரு வாயினை மானாங் காரத்து' எனத்திருஞானசம்பந்தரின் எழுகூற்றிருக் கைத் தொடங்கி 'நினைய வல்லவரில்லைநீ ணிலத்தே' என நாற்பத்தேழு அடிகளைக் கொண்டு முடிந்துள்ளது.

நக்கீரதேவரின் எழுகூற்றிருக்கை, 'ஒருடம்பு ஈருரு ஆயினை' எனத்தொடங்கி 'பாதஞ் சென்னியிற் பரவுவன் பணிந்தே' என்று முடிந்துள்ளது. இது 55 அடிகளால் ஆகியுள்ளது. நக்கீரதேவர் பாடிய திருஎழுகூற்றிருக்கை முழுமையும் சம்பந்தர் பாடிய பாடலைப் பின்பற்றிப் பாடப்பட்டுள்ளது. இப்பாடலைச் சில பாடபேதங்களுடன் விருத்தியுரையாசிரியர் விருத்தியுரைக்கு மேற்கோளாகக் காட்டுகின்றார்.

எழுகூற்றிருக்கை என்பது ஏழு கூறுகள் முறையாக அமையும்படி செய்யப்பெறும் சித்திரகவி வகை என்று பொருள்படும். மிக முயன்று செய்யப்படுகின்ற கவியாதலால் இது 'மிறைக்கவி' எனவும் கூறப்படுகின்றது. "திருஎழுகூற்றிருக்கை, திருஞானசம்பந்தராலும், நக்கீரதேவ நாயனாராலும் பாடப்பெற்றுள்ளது. 'செய்யுளின் தொடக்க எண் முதல் இறுதி எண்முடிய ஏழு பகுதிகளாக எழுதி அந்த ஏழு வரிசைகளையும் ஒரு தேரின் மேற்பரப்பாகக் கொண்டு அவ்வாறே பாட்டின் இறுதி எண் முதல் தொடக்க எண் வரையில் ஏழு பகுதிகளையும் தேரின் அடிவரிசைகளாகக் கொண்டு தேர் என்னும் (ரதபந்தம்) சித்திர கவியாக அமைத்துத் தருவது திருவெழுகூற்றிருக்கையாகும் என்பர்."[87] இக்கூற்றும் இங்குக் கருதத்தக்கதாகும். பின்வந்த சித்திரகவிகளையும் உடன்வைத்துக் காணுங்கால் பற்பல செய்திகள் புலனாகும்.

## 2.2. ஏகபாதம்

ஏகபாதம் என்பதன் பொருள் ஓரடி என்பதாகும். ஓரடியே பாடலின் நான்கடியிலும் மடங்கி வருவது ஏகபாதமாகும். ஓரடியே நான்கடியாய் அமையினும் ஒவ்வொர் அடிக்கும் பொருள் வேறுபட்டு விளங்குவதே இச்சித்திரகவியின் சிறப்பம்சமாகும். இவ்வகையில்

திருஞானசம்பந்தரின் சீகாழிப்பதிகம் (127) ஏகபாதமாக அமைந்துள்ளது.

"பிரம புரத்துறை பெம்மான் எம்மான்
பிரம புரத்துறை பெம்மான் எம்மான்
பிரம புரத்துறை பெம்மான் எம்மான்
பிரம புரத்துறை பெம்மான் எம்மான்"[88]

இதனையே,

பிரமம் புரத்துறை பெம்மான் எம்மான்
பிரமம் புரத்துறை பெம் மான் எம் ஆன்
பிரமம் புரத்துறை பெம்ஆன் எம்மான்
பிரமபுரத்து உறை பெம்மான் எம்மான்

என்று பிரித்து,

(1) அறிவொளியாகவும் பராசக்தியாகவும் எங்கும் நிறைந்து நிற்கும் பூரணத்தன்மையை வியந்து, அத்தகைய பூரணத்தன்மைக்கும் மேலாய் இன்பமே வடிவாய் முதல் நடு இறுதி அற்று விளங்கும் பெரியோன் (2) வானத்தினின்று பெருகும் கங்கை நங்கையைத்தரித்தவன் எம்மை நீங்காத ஆன்மாவானவன். (3) எனது உடற்பற்றை அறுக்க, என்னைப்போலவே உடலோடு வந்து என்னைப் பிரம்மானுபவம் என்னும் முத்திநிலையை அடையும்படி செய்தவன் (யாவன் என்னில்). (4) பிரம்மபுரம் என்னும் திருத்தலத்தைக் கோயிலாகக் கொண்டு விளங்கும் பெருமான் என்று உரையெழுதப்படுகின்றது.

## 2.3. கூடற்சதுக்கம்

திருக்கயிலாயம், திருஆனைக்கா, திருமயேந்திரம், திருவாரூர் என்னும் நான்கு இடங்களிலும் கோயில் கொண்டுள்ள இறைவனைப் பற்றிப் பத்துப் பாடல்கள், பாடி அமைத்துள்ள மூன்றாந்திருமுறையில் (367-ஆம் பதிகம்) இவ்வாறு கூடற்சதுக்கம் அமைந்து உள்ளது.

"மாலயன் தேடிய மயேங் திரரும்
காலனை உயிர் கொண்ட கயிலையாரும்
வேலது ஓங்கும் வெண்நா வலாரும்
ஆலை ஆரூர் - ஆதி ஆனைக்காவே"[89]

இப்பதிகம் முழுதும் இவ்வாறே காணப்படுகின்றது.

## 2.4. திருக்கோமூத்திரி

கோமூத்திரி என்பது 'ஆநீர்த்தடம்' என்னும் வழங்கப் படுகிறது. ஆன் நடந்து கொண்டு நீர்விடுதலால் உண்டாகும் தடத்தின் வடிவாக அமைக்கப்படுவதொரு கோடுபோன்று எழுத்துகள் அமையப்பாடும் பாடல் வகைக்குக் 'கோமூத்திரி' என்று பெயர் அமைகின்றது. இவ்வகையில் சம்பந்தர் திருமுறையில் உள்ள திருக்கோமூத்திரி (210) பதிகம் அமைகின்றது. இதற்குச் சான்றாக,

"பூமகனூர் புத்தேளுக்கு இறைவனூர்
குறைவு இலாப்புகலி, பூமேல்
மாமகளூர் வெங்கு நல்தோணிபுரம்
பூந்தராய் வாய்ந்த இஞ்சிச்
சேமமிகு சிரபுரம் சீர்ப்புறவம்நிறை
புகழ்ச்சண்பை காழி கொச்சை
காமனைமுன் காய்ந்த நுதல்கண்ணவனூர்
கழுமலம் - நாம்கருது மூரே"[90]

என்ற பாடலைப் பகரலாம். இவ்வகையில் இப்பதிகத்தில் பதினொரு பாடல்கள் உள்ளன.

ஆனால் இதன் பெயர்மட்டுமே 'கோமூத்திரி' என்று அமைவதாகவும் இதன் பாடலமைப்பு அங்ஙனம் அமைய வில்லை என்றும் உரைப்பர். ஏனெனில், "பெயர் இவ்வாறு இருந்தாலும், அதன் திருக்கடைக்காப்பு 'வழி முடக்குமாவின் பாய்ச்சல், என்றுள்ளது. கோமூத்திரி வகைக்கு இப்பதிகப்பாடல்கள் இயையாமையாலும்,

மாவின் பாய்ச்சல் என்பது 'குதிரைப் பாய்ச்சல்' எனப்படும் 'சதுரங்க துரககதி பந்தம்' போல்வதொரு மிறைக்கவியாதல் வேண்டும்''. சதுரங்க துரககதிபந்தம் ஆகாதோ இஃது எனின், 64 கட்டங்களுள் அடக்கிக் காட்டத்தக்க பாட்டு அதுவாகலின் அவ்வகைப்படுத்தக் கூடவில்லை. 'திருக் கோமூத்திரி' எனும் பதிகக்குறிப்பு ஆயத்தக்கதாம்''[91] என்று கூறுகின்ற காரணத்தின் வழியறிய முடியும்.

## 2.5. திருச்சக்கரமாற்று

ஒன்றன் பெயர்களையெல்லாம் முறையே வரிசைப் படக் கூறிச் சக்கரச் சுழற்சிபோல அவை அடுத்தடுத்துத் தலைமை பெறுமாறு பாடுதல் 'சக்கரமாற்று என்று வழங்கப்படுன்கிறது. இவ்வகையில் திருச்சக்கரமாற்றாகச் சம்பந்தரின் 206, 209–ஆம் பதிங்களாகிய பிரமபுரப்பதி கங்கள் அமைந்துள்ளன.

''பிரமனூர் வேணுபுரம்
புகலிவெங்குருப் பெருநீர்த்தோணி
புரமன்னு பூந்தராய் பொன்னஞ்
சிரபுரம் புறவஞ் சண்பை
அரன்மன்னு தண்காழி கொச்சைவய
முள்ளிடங் காதி யாய
பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக்
கழுமலம்நாம் பரவுமூரே''[92]

இப்பாடல் ஒரு சான்றாம்.

இது பதிக முதற்பாடலாகும். பின்னர் வேணுபுரம் புகலி, வெங்குரு. தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம் எனப்பத்துப் பெயர்கள் முறையாக முன்னே அமையச் சக்கரமுறையில் சுழல்வதால் இப்பெயர் பெற்றதாம். சீர்ப்பிரமனூர் எனத்

தொடங்கும் 209-ஆம் பதிகமும் இவ்வாறே திருச்சக்கர மாற்றாக அமைகின்றது.

## 2.6. திருமாலைமாற்று

மாலையின் அமைப்புடன் அமையும் சித்திரகவியையே மாலைமாற்று என்று குறிப்பிடுகின்றனர் முதலிலிருந்து முடிவுவரைச் செல்லும் பாடலை இறுதியிலிருந்து தொடங்கி மறுதலையாக நோக்கினும் மாற்றமின்றி அமைதல் இதன் அமைப்பாகும் சம்பந்தரின் 375-ஆம் பதிகம் இவ்வாறு அமைந்துள்ளது.

ஒரு செய்யுளை முதலிலிருந்து தொடங்கிப் படித்தாலும் (அ) இறுதியிலிருந்து பின்னோக்கிப் படித்தாலும் அதே செய்யுளாக அமையுமாறு பாடப்பெறுவது மாலை மாற்றாகும்.

**''யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா**
**காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா**
**யாமாமா நீஆமாமா யாழீகா மாகா**
**காணாகா மாகாழீயா மாமாயாநீ மாமாயா''**[98]

இதனை இறுதியிலிருந்து படித்தாலும் முதலிலிருந்து படிப்பதைப் போலவே தோன்றும் வழக்கிலுள்ள 'விகடகவி' என்பதை இதற்கெளிய சான்றாக்கிக் கூறமுடியும்.

## 2.7. திருவியகம்

அடிதோறும் வந்த சொல்லோ தொடரோ மீண்டும் வந்து பொருள் வேறு தருவது மடக்கு என்னும் சொல் லணியாகும். மடங்கு எனினும் யமகம் எனினும் ஒன்று என்றே குறிக்கப்படுகின்றது. ஓர் அடியின் முதல், இடை கடை மடங்கி வருதல் முறையே முதன் மடக்கு, இடை மடக்கு, கடைமடக்கு எனப்பெறும். முழுதும் மடங்கி வருதலுமுண்டு. இது முழுமடக்கெனப்படும். திருஞான

சம்பந்தரின் திருமுறையில் 371, 372, 373, 374 ஆகிய நான்கு பதிகங்கள் இங்ஙனம் யமகம் என்னும் மடக்காக அமைகின்றன. இவை கடைமடக்காக அமைகின்றன.

**"உற்றுமை சேர்வது மெய்யினையே**
**உணர்வது நின்னருள் மெய்யினையே**
**கற்றவர் காய்வது காமனையே**
**கனல்விழி காய்வது காமனையே**
**அற்றம் மறைப்பது உன்பணியே**
**அமரர்கள் செய்வதும் உன்பணியே**
**பெற்றும் உகந்தது கந்தனையே**
**பிரம புரத்தையு கந்தனையே"[94]**

இப் பாடலையே, "

**"உற்றுஉமை சேர்வது மெய்யினையே**
**உணர்வதும் நின்அருள் மெய்யினையே**
**கற்றவர் காய்வது காமனையே**
**கனல்விழி காய்வது காமனையே**
**அற்றம் மறைப்பது முன்பணியே**
**அமரர்கள் செய்வதும் உன் பணியே**
**பெற்று முகந்தது கந்தனையே**
**பிரமரபுத்தை உகந்தனையே"**

என்று பிரித்து,

உமாதேவிபிரியாது பொருந்தி இருப்பது சிவபெருமானாகிய உன்னுடைய திருவுடம்பினையாகும். சிவஞானிகள் அறிவதும் உன்னுடைய உண்மையான அருளையேயாகும். ஞானநூல்களைக் கற்ற துறவியர் வெறுத்து ஒதுக்குவது மண், பொன், பெண் பற்றியவிருப்பமேயாகும். தீக்கண்ணாகிய நெற்றிக்கண் எரித்தது மன்மதனையே. முன்பக்கத்தில் படம் விரித்துக் கோவணமாகத் தங்கி உன்மானத்தைக் காப்பது பாம்பேயாகும். தேவர்களால் செய்யப்படுவதும் உன்னுடைய பணிவிடைகளேயாகும்.

மகனாகப் பெற்றுத் தூக்கிச் சுமந்தது கந்தனையே. சீகாழியை வீற்றிருக்கும் இடமாக உகந்ததும் நீயே என்றிவ்வாறு பொருள் கொள்ளப்படுகின்றது. திருஏகம்பம், திருஆலவாய். திருவீழிமிழலை ஆகிய மூன்று பதிகளைப் பற்றி பதிகங்களும் இவ்வகையிலேயே அமைந்துள்ளன.

## 2.8. வினாவுரை

வினாவும் உரையுமாக அமையும் பகுதியே வினாவுரை யாகும். இவ்வகையில் சம்பந்தரின் பதிகங்கள் பல அமைகின்றன. அவர் தாமே வினா எழுப்பி விடைகூறும் முகமாக இப்பதிகங்கள் அமைந்துள்ளன. 138, 139, 140, 141 போன்றவையும் மற்றும் பல பதிகங்களும் இவ்வகையில் அமைந்துள்ளன. 139ஆம் பதிகமாகிய திருவலஞ்சுழியில் அமையும் பாடலகள் இவ்வகையில் அமைகின்றன. அடங்குகின்றன.

**''விண்டெலாம் மலரவ்விரை நாறுதண் தேன்விம்மி**
**வண்டெலாம் நசையால் இசைபாடும் வலஞ்சுழி,**
**தொண்டெலாம் பரவும்சுடர் போல்ஒளியீர்! சொலீர்**
**பண்டெலாம் பலிதேர்ந்து ஒலிபாடப் பயின்றதே''[95]**

என்பது சான்று கூறுதலுக்கான ஒரு பாடல்.

## 2.9. வினாவிடை

வினாவிடை என்பது வினா ரூபமான விடைவகை, கேள்வியும் உத்தரமும், வினாவும் விடையுமாக அமைந்த நூல் ஆகியனவற்றைக் குறிக்கும் சொல்லாகும். வினாவும் விடையுமாக அமையும் பதிகமொன்று அப்பரின் 6ஆந் திருமுறையில் அமைந்துள்ளது. அப்பதிகத்தின் பெயரே 'வினாவிடைத் திருத்தாண்டகம்' (310) என்று அமைந் துள்ளது. தாண்டக யாப்பில் வினாவும் விடையுமாக அமைந்திருத்தலின் இப்பெயரினைப் பெற்று அமைந்துள்ளது.

"அண்டங் கடந்த சுவடும் உண்டோ?
அனலங்கை ஏந்திய ஆடல் உண்டோ?
பண்டை எழுவர் படியும் உண்டோ?
பாரிடங்கள் பல சூழப்போந்தது உண்டோ?
கண்டம் இறையே கறுத்தது உண்டோ?
கண்ணின்மேல் கண்ணொன்று கண்டது
உண்டோ?
தொண்டர்கள் சூழத் தொடர்ச்சி உண்டோ?
சொல்லீர் என்பினாரைக்கண்ட ஆறே"[96]

இத்திருத்தாண்டகம வினாவாக அமைகின்ற ஒரு பாடல். மற்றோர் பாடல்,

"அலைத்தோடு புனல்கங்கை சடையில் கண்டேன்
அலர் கொன்றைத் தாரணிந்த ஆறு கண்டேன்
பலிக்கோடித் திரிவார் கைப்பாம்பு கண்டேன்
பழனம் புகுவாரைப் பகலே கண்டேன்
கலிக்கச்சி மேற்றளியே இருக்கக் கண்டேன்
கறைமிடறும் கண்டேன் கனலும் கண்டேன்
வலித்துஉடுத்த மான்தோல் அரையில் கண்டேன்
மறைவல்ல மாதவனைக் கண்ட ஆறே"[97]

என்று விடையாக அமைகின்றது.

ஒருவர் வினா எழுப்ப மற்றவர்விடை கூறுமாறும் வினா விடை அமைதல் உண்டு. இங்கு அப்பரே வினாவை எழுப்பி விடையும் பகர்கின்றார். இவ்வாறு சம்பந்தர், அப்பர் பாடல்கள் பல சித்திரகவிகளுக்கு இடங்கொடுத்து அவற்றிற்கு இலக்கிய வடிவம் கொடுத்து வாழ்வளித்துள்ளன.

**சித்திரகவிகளால் பெயர்பெறுவனவற்றைப் பின்வருமாறு காண முடியும்**

1. மேற்சுட்டப்பெற்ற சித்திரகவிகளுக்கு விதையோ, சிறுகூறோ பழந்தமிழ், இலக்கியங்களில் அமைய வில்லை.
2. எழுகூற்றிருக்கை, ஏகபாதம், கூடற்சதுக்கம், திருக் கோமூத்திரி, திருச்சக்கரமாற்று, மாலைமாற்று, யமகம், வினாவுரை, வினாவிடை போன்ற இச் சித்திரகவிகள் முதன்முதலாக அமைவதோடு மட்டுமல்லாது முதல் இலக்கிய வகைகளையும் பெற்று வடிவததையும் வழங்கி, தோற்றமும் வளர்ச்சியும் பெற்று விளங்குகின்றன.
3. இவையே பின்னாளில் பல்வகை, சித்திரகவி களுக்கும் அடிப்படையாகியுள்ளன.

## இயல் — 8

# எண்பெயரால் அமையும் இலக்கிய வகைகள்

எண்ணிக்கையடிப்படையில் இலக்கியங்களை இயற்றலும் தொகுத்தலும் மிகப்பழைய மரபாகும். தமிழ் இலக்கியங்களின் தொகுப்புகளும் கூட எண்ணிக்கையை அடிப்படையாகக் கொண்டே பெயர் பெற்று விளங்குகின்றன. தொகுப்பென்றில்லாமல் இயற்றப்பட்ட நூல்களும்கூட எண்பெயரில் அமைந்துள்ளமைக்குப் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் பல சான்றுகள் உள்ளன. இம்முறையில் திருமுறைகளிலும் பல இலக்கியங்கள் அமைகின்றன. எண்ணை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டும் எண்பெயரால் குறிக்கப்பட்டும் அவை அமைகின்றன. இவ்வடிப்படையில் ஒருபா ஒருபஃது, இருபா இருபஃது, மும்மணிக்கோவை, பஞ்சகம்

(பஞ்சாச்சரம்), எழுபது, எட்டு, சதகம், பத்து, பதிகம் போன்றவை இங்குக் குறிப்பிடப்பெறுகின்றன.

### 3.1. ஒருபா ஒருபஃது

அகவல், வெண்பா, கலித்துறை இவை மூன்றில் ஏதேனும் ஒன்றில் அந்தாதித் தொடையமையப் பத்துப் பாடல்கள் பாடுவது ஒருபா ஒருபஃது எனப்படும்.

ஏதேனும் ஒருபாவினைக் கொண்டு இஃது அமைவதால் 'ஒருபா' என்ற பெயர் அமைகின்றது. ஒருபாவில் ஒரு பத்துப்பாடல்கள் இயற்றப்படுவதே ஒருபா ஒருபஃது ஆகும். இவ்வமைப்பு முறை பழையதமிழ் இலக்கியங்களில் அமைகின்ற போதிலும் ஒருபா ஒருபஃது எனும் பெயரில் முதலில் அமைந்த இலக்கியமாகப் பட்டினத்துப் பிள்ளை யாரின் 'திருவொற்றியூர் ஒருபா ஒருபஃதே' அமைகின்றது. அகவற்பாவால் அந்தாதியமைப்புடன் இப்பாடல் இயன்று உள்ளது. "திருவொற்றியூரிற் கோயில் கொண்டெழுந் தருளியுள்ள சிவபெருமானது பொருள்சேர் புகழை விரித்துரைக்கும் ஆசிரியப்பாவாலாகிய பத்துப்பாடல்களால் அந்தாதித் தொடைபெற அமைந்த பனுவலாதலின் இது திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது என்னும் பெயர்த் தாயிற்று"[98] என்று குறிப்பிடுவர்.

"இருநில மடந்தை இயல்பினின் உடுத்த
பொருகடல் மேகலை முகமெனப் பொலிந்த
ஒற்றி மாநகர் உடையோய் உருவின்
பெற்றிஒன் றாகப் பெற்றோர் யாரே"[99]

என்று தொடங்கி இறைவன் புகழைக் கூறிச் செல்கின்றார் பட்டினத்தடிகள். ஒருபா ஒருபஃதின் அமைப்பு இவ்வாறுள்ளது.

## 3.2. இருபா இருபஃது

வெண்பாவும் அகவலும் மாறிமாறி வர இருபது பாடல்களால் அந்தாதியாக அமையப் பாடப்படுவது இருபா இருபஃது ஆகும். திருமுறைகளில் இவ்விலக்கிய வகை இல்லை எனினும் பின்னாளில இவ்வகை இலக்கியம் தோன்றக் காரைக்காலம்மையாரின் திருவிரட்டை மணிமாலை அடிப்படையாகியுள்ளது. அவரே இருயாப்பு விரவிவர முதன்முதலில் இருபது பாடல்கள் அமைத்து இலக்கியம் படைத்தவர் வெண்பாவும கட்டளைக் கலித்துறையும் மாறிமாறி அமைய அந்தாதித் தொடையமையப்பாடுவது இரட்டை மணிமாலை. வெண்பாவும் அகவலும் மாறிமாறிவர இருபது பாடல்களை அந்தாதித் தொடையமையப்பாடுவது இருபா இருபஃது. எனவே, இவ்விலக்கியத் தோற்றத்திற்கு அடிகோலி வித்திட்டவர் காரைக்காலம்மையாரே ஆவார். சிற்றிலக்கியங்களின் தோற்றுவாயாகச் சிவனடியார்கள் ஆற்றியுள்ள இவ் விலக்கியத் தொண்டு எண்ணிமகிழத்தக்கது.

## 3.3. மும்மணிக்கோவை

மும்மணிக்கோவை, மூன்று கொத்துள்ள கழுத்தணி வகையையும், அகவலும் வெண்பாவும் கலித்துறையும் முறையே மாறிமாறி வர அந்தாதித தொடையாகப் பாடப்பெறும் முப்பது பாடல்களைக் கொண்ட பிரபந்தத் தினையும் குறிப்பதாகக் குறிப்பர். ஆசிரியம், வெண்பா, கலித்துறை ஆகியன மும்மணி போன்று இணைந்து அந்தாதி யாக முப்பது பாடல்கள் பாடுவது மும்மணிக்கோவை எனப்படுகிறது. இவ்வகையில் முதல் மும்மணிக்கோவையை இயற்றியவர் சேரமான்பெருமாள் நாயனாராவார். 'திருவாரூர் மும்மணிக்கோவை' என்பதே அம்மும்மணிக் கோவையாகும்.

பதினோராந்திருமுறையில் ஏழு மும்மணிக்கோவைகள் காணப்படுகின்றன. சேரமான் பெருமாள் நாயனாரைத் தொடர்ந்து நக்கீரதேவநாயனார், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், திருவெண்காட்டடிகள், நம்பியாண்டார் நம்பி போன்ற பலர் இவ்விலக்கிய வகையில் இலக்கியம் படைத்துள்ளனர்.

1. சேரமான் பெருமான நாயனார் - திருவாரூர் மும்மணிக்கோவை
2. நக்கீரதேவநாயனார் - திருவலஞ்சுழி மும்மணிக்கோவை
3. இளம்பெருமானடிகள - சிவபெருமான் திருமும்மணிக்கோவை
4. அதிராவடிகள் - மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை
5. பட்டினத்துப்பிள்ளையார் - திருவிடைமருதூர் மும்மணிக்கோவை
6. பட்டினத்துப்பிள்ளையார் - திருக்கழுமல மும்மணிக்கோவை
7. நம்பியாண்டார் நம்பி - ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை

என்பன அவை.

நக்கீரதேவரின் திருவலஞ்சுழி மும்மணிக்கோவை 30 பாடல்களைக் கொள்ளாது 15 பாடல்களுடன் முடிந்துள்ளது. அதிராவடிகளின் மும்மணிக்கோவை 23 பாடல்களே கொண்டு முடிவுறாமல் காணப்படுகின்றது. பட்டினத்துப்பிள்ளையாரின் மும்மணிக்கோவை 12 பாடல்களுடன் முடிந்துள்ளது. மற்ற மும்மணிக்கோவைகள் முப்பது பாடலுடன் முடிந்துள்ளன. இவை அனைத்துமே பக்திப் பொருண்மையுடன் அமைகின்றன.

## 3.4. பஞ்சகம் (பஞ்சாக்கரம்)

ஐந்து என்று பொருள்படும் வடசொல் சார்ந்ததாக இப்பஞ்சகம் என்பது அமைகின்றது. இலக்கிய நிலையில் இஃது ஐந்துபாடலாலான சிறுநூலைக் குறிக்கின்றதெனவோ அன்றி ஐவகைப்பொருள்பற்றிய நூலாக்கத்தைச் சுட்டுகின்றதெனவோ கொள்ள வாய்ப்புள்ளது என்று கருதுவர். 'பஞ்சகம்' என்ற பெயரில் இலக்கியம் எதுவும் திருமுறைகளில் அமையவில்லை. ஆனால், 'பஞ்சாக்கரம்' என்ற பெயருடன் திருஞான சம்பந்தர் பதிகம் ஒன்று காணப்படுகிறது. இது சிவனின் 'ஐந்தெழுத்து' மந்திரத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததாகலின் இப்பெயர் பெற்றது எனக் கருத இடமுண்டு.

280 ஆம் பதிகமான 'பஞ்சாக்கரத்திருப்பதிகம்' 'அஞ்சு எழுத்துமே' என்று ஈறுபெற்று முடிந்துள்ளது.

> **"மந்திர நால்மறை யாகி வானவர்**
> **சிந்தையுள் நின்று, அவர்தம்மை ஆள்வன**
> **செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு**
> **அந்தியுள் மந்திரம் அஞ்சு எழுத்துமே"[100]**

என்றிவ்வாறே மற்ற பாடல்களும் அமைந்து திருவைந்தெழுத்தின் பெருமையை கூறுகின்றன. இது பின்னாளில் பஞ்சகம் என்ற இலக்கிய வகையின் தோற்றத்திற்குத் தோற்றுவாயாக இருந்திருக்க வாய்ப்புள்ளது.

## 3.5. எழுபது

ஏழுபத்துகள் கொண்ட எண்ணையும் பாடல்களால் உருப்பெறும் இலக்கியவகையையும் இச்சொல்குறிக்கின்றது. இவ்வெண் சங்க இலக்கியங்களிலிருந்தே பயின்றுள்ளது. திருமுறைகளில் பதினோராந்திருமுறையில் நக்கீரதேவர் பாடியதாகத் 'திருஈங்கோய்மலை எழுபது' என்ற பெயரில் இவ்வெண் அமைந்துள்ளது. திருவீங்கோய் மலையிற்

கோயில் கொண்டுள்ள சிவபெருமானைப் போற்றிப் பரவிய எழுபது வெண்பாக்களை இது கொண்டுள்ளது

**'அடியும் முடியும் அரியும் அயனும்**
**படியும் விசும்பும் பாய்ந்தேறி – நொடியுங்கால்**
**இன்னதென அறியா ஈங்கோயே ஓங்காரம்**
**அன்னதென நின்றான் மலை'**[101]

இங்ஙனமே ஏனைய பாடல்களும் அமைகின்றன.

## 3 6. எட்டு

எட்டு என்பது பலபொருண்மைகளைக் கொண்ட ஒரு சொல் ஆகும். எட்டுத்தொகை என்ற சங்க இலக்கியத் தொகையும் இப்பெயர்பெற்று விளங்குகிறது. நக்கீர தேவநாயனாரின் 'கார் எட்டு' என்னும் இவ்வெண்ணுப் பெயரில் அமைந்த ஓரிலக்கியத்தைப் பதினோராந்திருமுறை கொண்டமைந்துள்ளது. கார் நாற்பது போன்றே இங்கும் கார்காலம் வருணிக்கப்பட்டபோதிலும் எட்டுப்பாடல்களே கொண்டமைந்துள்ளது. 'காரெட்டு' இந்த எட்டுப் பாடல் களும் வெண்பாவால் இயன்றுள்ளன.

**''அரவம் அரைக்கசைத்த அண்ணல் சடைபோல்**
**விரவி எழுந்தெங்கும் மின்னி – அரவினங்கள்**
**அச்சங்கொண் டோடி அணைய அடைவுற்றே**
**கைச்சங்கம் போல் முழங்கும் கார்''**[102]

இவ்வாறு கார்காலத்தை இறைவனின் உருவ அமைப்போடு தொடர்புறுத்திப் பாடப் பெற்றுள்ளதே 'காரெட்டு' ஆகும்.

## 3.7. சதகம்

சதகம் எனுஞ்சொல், நூறுபாடல்களுள்ள பிரபந்த வகை, நூறாண்டுதான்றி எனும் பொருள்களை நல்கு கின்றது. திருவாசகத் 'திருச்சதகம்' இச்சொல்லின் முதல் ஆட்சியையும் அதனால் அமைந்த நூலையும் குறிப்பிடு

கின்றது. 'திருச்சதகம்' என்பது தெய்வத்தன்மை வாய்ந்த நூறு திருப்பாட்டுகளைக் கொண்ட ஒரு தொகுதியாக விளங்குகின்றது. முதல் பகுதியைக் கட்டளைக் கலித்துறை யாப்பில் மாணிக்கவாசகர் பயன்படுத்தியுள்ளார். நூறு பாடல்கள் கொண்ட தொகுப்பு, தமிழிலக்கியத்தில் காணப்படினும் அவை 'சதகம்' என்று பெயர் பெறவில்லை. நூறு பாடல்கள் கொண்டு 'சதகம்' என்று பெயரும் பெற்ற இலக்கியம் இதுவேயாகும்.

> "மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்
> துன்விரை யார்கழற்கென்
> கைதான் தலைவைத்துக் கண்ணீர்
> ததும்பிவெதும்பி யுள்ளம்
> பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி
> சயசய போற்றியென்னுங்
> கைதான் நெகிழ விடேனுடை
> யானெனைக் கண்டுகொள்ளே"[103]

இவ்வாறே இரண்டாம் பகுதி தரவுகொச்சகக் கலிப்பாவால் இயன்றுள்ளது. மூன்றுமுதல் பத்துவரையிலமைந்த பகுதிகள் எண்சீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தத்தால் இயன் றுள்ளன. பத்துப்பகுதிகளாகப் பிரித்துப் பகுதிக்குப் பத்துப்பாடல்கள் அமைத்துப் பாடப்பட்டுள்ளதே மாணிக்கவாசகரின் 'திருச்சதகம்' ஆகும். அறப்பளீசுவரர் சதகம், குமரேச சதகம் போன்றவையும் கருதத்தக்கன.

## 3.8. பத்து

பத்து எனுஞ்சொல், ஒன்பதோடு ஒன்று கூடிய எண், நாலாயிரம் பிரபந்தத்தில் பத்துப் பதிகங்கூடிய பகுதி, தசமிதிதி, இறந்த பத்தாம் நாட் செய்யும் பிரேதச் சடங்கு, வயல், பக்தி போன்ற பலபொருண்மைகளைச் சுட்டி நிற்கின்றது. தொல்காப்பியத்திலேயே இச்சொல்லின்

எண்ணுப்பெயராட்சி அமைந்துள்ளது. பதிற்றுப்பத்து, ஐங்குறுநூற்றுப்பத்துகள் போன்றவை பத்துப்பத்தாகப் பாடல்களை இணைத்து, வழங்குவதன்மூலம் இவ் வெண்ணையும் அதன் பொருண்மையையும் சுட்டுகின்றன. அறஇலக்கியங்களும் கூட இவ்வாட்சியைக் கொண்டுள்ளன. மாணிக்கவாசகரின் பலபத்துகள் இந்த எண்ணிற்கு இலக்கியச் சான்றுகளாய் அமைகின்றன. அச்சப்பத்து, அடைக்கலப்பத்து, அதிசயப்பத்து, அருட்பத்து, அற்புதப் பத்து, அன்னைப்பத்து, ஆசைப்பத்து, பிடித்தபத்து, பிரார்த்தனைப்பத்து, புணர்ச்சிப்பத்து, யாத்திரைப்பத்து, வாழாப்பத்து போன்ற பல பத்துகளைத் தந்து ஒவ் வொன்றும் பத்துப் பாடல்களைக் கொண்டமையுமாறு விளங்குகின்றன மாணிக்கவாசகரின் பத்துகள்.

### 3.9. பதிகம்

பதிகம் என்பது தெய்வத்தைப் பற்றிப் பெரும்பாலும் பத்துச்செய்யுள்களால் பாடப்படும் பிரபந்தம், பாயிரம், பதியம் ஆகியபொருள்களுக்குரிய ஒரு சொல்லென்று உணர முடியும். பத்துப்பாடல்கள் கொண்ட அமைப்பானது சங்க காலத்திலேயே அமையினும் காரைக்காலம்மையாரின் 'மூத்த திருப்பதிக'மே இப்பெயரையும் அதற்குரிய பாடல் களையும் கொண்ட முதல் இலக்கியவடிவமாக அமைந் துள்ளது. பதிகம் என்பது பத்துப் பாக்களால் உருவாவது. பதினோராம் பாடல் பதிகப்பலன் கூறுவதாக இடம்பெறும்.

மேலும் பத்தோ, பதினொன்றோ பாடல் அமையினும் அமையாவிடினும் அதனைப் பதிகம் என்று குறிப்பது பக்தி இலக்கியத்தைப் பொறுத்தவரையில் ஒரு மரபாகி விட்டமைக்குத் திருமுறைப் பதிகங்கள் சான்று கொடுத்து நிற்கின்றன. மாணிக்கவாசகர் 'பதிகம்' என்னும் பெயரமையப் பல பத்துகளைப் பாடியுள்ளார். கோயில்

மூத்த திருப்பதிகம், கோயில் திருப்பதிகம், திருக்கழுக்குன்றப் பதிகம், திருப்பாண்டிப்பதிகம், எண்ணப்பதிகம், அச்சோப் பதிகம் என்பன அவையாகும். காரைக்காலம்மைக்குப் பின் 'பதிகம்' என்றமையைப் பாடியவர் இவரே.

பன்னிருதிருமுறைகளிலும் அமையும் பதிகங்களையும் இவற்றுடன் தொடர்புறுத்த முடியும். 3 பாடல்கள், 5 பாடல்கள், போன்றவற்றையுங்கூடப் பதிகம் என்ற ஒருவரையறைக்குள் பொருத்தியே அமைக்கின்றனர். எனவே பதிகம் என்பது பத்துப்பாடல்களால் அமைவது என்ற நிலையிலிருந்துமாறி ஒரு தலத்தைப்பற்றி எத்தனை பாடல்கள் அமையினும் அதனைப் பதிகம் என்று வழங்கும் மரபு இன்று உள்ளது. 'பதிகம்' என்ற சொல் சைவத் திருமுறைகளுக்கேயுரியது என்று கூறுமளவிற்குத் திருமுறை களில் பொருண்மையாலும் எண்ணிக்கையாலும் பெய ராலும் பதிகம் ஆட்சிபெற்று விளங்குகின்றது.

**எண்ணுப்பெயரால் அமைவனவற்றைப் பின்வருமாறு கூற முடியும்**

**(1) முன்னரே இடம்பெற்றிருந்தவை**

ஒருபா, எழுபது, எட்டு, பத்து, பதிகம், சதகம் இவையாவும் இப்பெயரிலமையாவிடினும் அவற்றிற்குரிய பொருண்மையினைப் பெற்று விளங்குகின்றன. இவை சிறுகூறாக இருந்த நிலையிலிருந்துமாறி இலக்கியமா கவும் அச்சொல்லாட்சியையும் குறிப்பனவாகத் திருமுறை களில் உள்ளன.

2. மும்மணிக்கோவை திருமுறைகளில் அமைந்த முதல் இலக்கியவகையாகும்.

3. சிறிய கூறாக இருந்து பின்னாளில் வளர்ச்சி யடைந்தவை - இருபா இருபது, பஞ்சகம் என்ற இரண்டுமாகும்.

## இயல் - 4

# நாட்டுப்புறப்பாடல் அடிப்படையில் தோன்றிய சிற்றிலக்கியங்கள்

மக்களின் இயல்பான வாழ்விலிருந்து எழுந்தனவாக இத்தகைய இலக்கியங்களைக் குறிப்பிட முடியும். மகளிரின் ஆடல், பாடல்களை மாணிக்கவாசகர் தம் இறைமைக் கருத்துகளைக் கூறவும் அவற்றில் அம்மகளிரை ஈடு படுத்தவும் வேண்டி இத்தகைய நாட்டுப்புறப்பாடல் வடிவங்களை மிகுதியும் கையாண்டுள்ளார். சிலம்பிற்குப் பின் வரிப்பாடல்களைப் பயன்படுத்தியவரும் இவரேயா வார் எனக் கருதவேண்டியுள்ளது. நாட்டுப்புறப்பாடல் அடிப்படையில் தோன்றிய இலக்கியங்கள் என்று கூறும் போது அங்கு மாணிக்கவாசகரின் பாடல்கள் மட்டுமே திருமுறைகளில் காணக்கிடைக்கின்றன.

"சங்கப் பாட்டுகள் கற்றவர்களுக்கு உரியனவாகப் பாடப்பட்ட இலக்கியமாகும். ஆழ்வார் நாயன்மார்களின் பக்திப்பாடல்கள் கற்றவர்களோடு மற்றவர்களும் கூடிப் பாடுவதற்கு ஏற்றவாறு தமிழ் எளியதாய் நெகிழ்ந்து அமைந்தது. இவை ஊர்தோறும் பக்தர்கள் கூட்டம் கூட்டமாகப் பாடிக் கோயில்களைச் சுற்றிவந்து வழிபடுவதற் கேற்ற வகையில் இசைப்பாடல்களாய்மைந்தன. இவ்வாறு நடை எளிமையும் இசையினிமையும் கூடினமையால், தமிழிலக்கியத்தில் ஒருமாறுதல் ஏற்பட முடிந்தது··· மக்கள் கூடிப்பாடும் எளிய இசைப்பாடல்களும், சேர்ந்து தெய்வ வழிபாடு செய்யும் இசைப்பாடல்களும் உள்ளன"[104] என்றமைகின்ற கருத்து இங்குக் கருதத்தக்க தாகும்.

இவ்வகையில் அம்மானை, உந்தியார், ஊசல், கோத்தும்பி, சாழல், சுண்ணம், தெள்ளேணம், தோணோக்கம், பூவல்லி என்பன அமைகின்றன. இவை அனைத்தும் நாட்டுப்புற மகளிரிடத்துக் காணப்படும் விளையாட்டு வகைகளையும் பாடல்வகைகளையும் அடிப்படையாகக் கொண்டு அப்பெயரிலேயே வழங்கி வருவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## 4.1. அம்மானை

அம்மானையாட்டம், அம்மானையாடுங்கருவி, ஒரு வகைப்பாடல், அம்மானைப் பருவம், கலம்பகஉறுப்பு ஆகிய தொடர்புடைய செய்திகளைச் சுட்டும் ஒரு சொல்லாக இஃது அமைகின்றது. சிலப்பதிகாரம் அம்மானை வரிபாடல்களைத் தருவதுடன் இச்சொல்லின் முதலாட்சி யையும் அளிக்கின்றது. மாணிக்கவாசகரின் 'திருவம் மானை' அம்மானைக்குப் பிறிதொரு சான்றாகின்றது.

அம்மானையின் இலக்கியத் தோற்றம் சிலம்பின் வரிப் பாடலில் இடம்பெற்ற போதிலும் திருவாசகத்திருவம்மா னையே இதனைத் தனியிலக்கிய வகையாக்கித் தருகின்றது. சிலம்பில் வினாவிடை வடிவிலமைந்த இது திருமுறையில் பாடல்தோறும் 'அம்மானாய்' என்ற ஈறுபெற்று முடிகிறது. அதனாலேயே இப்பெயரும் பெற்றது. சிலப்பதிகார அம்மானைப் பாடல்கள் வினாவும் விடையுமாக அமைந்து மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டுபாடப் பெற்றவையாகும். ஆனால் மாணிக்கவாசகரின் பாடல்கள் மகளிர் பலரும் ஒருங்குசேர்ந்து மகிழும் நிலையில் அமைந்த வரிப்பாடல்களாகும் என்னும் கருத்து, சிந்தனைக்குரியதாம்.

அம்மானை என்பது பல்வேறு பொருண்மைகளைக் கொண்ட ஒரு சொல்லாகும். தற்போது இச்சொல் அம்மானைப்பாடல் எனக் கதைப்பாடலின் வேற்றுப் பெயராக அமைந்தும் காணப்படுகிறது. இந்த அம்மானை யின் இலக்கணமாக வண்ணச்சரபந்தண்டபாணி சுவாமிகள், அம்மானைப் பாடலில் இடம்பெறும் மூவர்தம் பேச்சும் சொல்லல், மறுத்தல், விடை எனும் முறைமையில் அமைந் திருக்கும் என்கின்றார். எனவே வினாவும் விடையுமாக அமைந்து 2-ஆம், 4-ஆம், 5-ஆம் அடிகள் அம்மானை என்ற ஈறுபெற்று, மூவர்சேர்ந்து விளையாடிப்பாடும் அமைப் புடையது அம்மானைப் பாடலாகும். ஆனால் திரு வம்மானை, சிவனின் திருப்புகழினைத் தொகுத்துரைத்துத் துதிக்கும் நிலையில் அமைந்துள்ளது. இருபது பாடல்கள் அமைந்துள்ள இவ்வம்மானைப் பாடல்களில் ஒருபாடல் தவிர ஏனையவை அனைத்தும் 'பாடுதுங்காண் அம்மானாய்' என்றே ஈறுபெற்று முடிகின்றன. பதினாறாம் பாடல் மட்டும் கூறுதுங்காண் அம்மானாய் என முடிந்துள்ளது.

**வீங்குநீர் வேலி உலகாண்டு விண்ணவர் கோன்**
**ஓங்கரணம் காத்த உரவோன்யார்? – அம்மானை!**

ஓங்கரணம் காத்த உரவோன், உயர்விசும்பில்
தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்காண் - அம்மானை!
சோழன் புகார் நகரம் பாடேலோர் அம்மானை

என்பது சிலம்பு கூறும் அம்மானைப் பாடலாகும். அம்மானை இலக்கணத்திற்கு மிகப்பொருத்தமாக இவ்வம்மானை அமைகின்றது. ஆனால் மாணிக்கவாசகரின் திருவம்மானையோ,

"கையார் வளைசிலம்பக் காதார் குழையாட
மையார் குழல்புரளத் தேன்பாய வண்டொலிப்பச்
செய்யானை வெண்ணீ றணிந்தானைச் சேர்ந்தறியாக்
கையானை எங்குஞ் செறிந்தானை அன்பர்க்கு
மெய்யானை அல்லாதார்க் கல்லாத வேதியனை
ஐயா றமர்ந்தானைப் பாடுதுங்காண் அம்மானாய்"[105]

என்றமைகின்றது.

இந்த அம்மானைப் பகுதியில் வினாவிடைமுறை, மடக்கு என்னும் அம்மானை பாடலமைப்பு மாறிப் பெண்கள் கூடித்துதித்துப்பாடும் வகையில் பாடல் அமைந்துள்ளது. எனவே இந்த வளர்நிலையையே கதைப் பாடல்களாக வரும் அம்மானை எனவும் ஆங்கிலத்தில் உள்ள 'பால்ட்' (BALLAD) என்பதனோடு ஒப்பிடலாம் என்றும் குறிப்பார். அம்மானைக் கதைப்பாடல்கள் மக்களின் வாய்மொழி இலக்கியம் போல எளிய பேச்சு நடையில் காணப்படினும் மோனைநயமும் அடுக்குத் தொடர் அழுத்தமும் அமையப்புலவர் படைத்த படைப்புகளே. இவ்வகையில்தான் மாணிக்கவாசகரின் திருவம்மானையும் அமைகின்றது. இதுவே காலப்போக்கில் கதைப்பாடல் வடிவிலமைந்த பல்வேறு புராண, கதைப்பாடலம்மானைகளுக்கும் அடிப்படையாகியது எனல் பொருந்தும்.

## 4.2. உந்தியார்

உந்தி, கொப்பூழ், வயிறு, நீர்ச்சுழி, நதி, ஆற்றிடைக் குறை, நீர், கடல், தேரின் உருளை, தேர்த்தட்டு, மகளிர் விளையாட்டு வகை, யாழ்ப்பத்தல், நடு, உயர்ச்சி போன்ற பல பொருள்களுக்கான ஒருசொல் உந்தியார் எனப்பெறுஞ் சொல். இவ்விடத்தில் உந்தியார் என்பதற்கு மகளிர் விளையாட்டு வகை என்று பொருள் கொள்ளுதல் பொருத்தமாக இருக்கும்.

"மகளிர் ஆடலெனக் குறிக்கப்படும் உந்தி, கழங்கு, அம்மானை போன்றபிற எளிய ஆடல்கள் ஒத்ததாக இருக்கலாம். 'உந்திபற' எனும் இதன் பாடலமைப்புக் காரணமாக இதனை இன்றைய பூப்பந்தமைப்பினதாகவும் கருதுவர். உந்திபறத்தல் என்பது, விளையாடும் பெண்டிர் இருகைகளையும இருமருங்கும் நேராக நீட்டிக்கால்-விரல்கள் மேல் நின்று பாடிச்சுழன்றாடல் எனவும் கூறுவர்"[106]

மாணிக்கவாசகரின் 'திருஉந்தியார்' 20 பாடல்களைக் கொண்டமைகின்றது இதனை 'ஞானவெற்றி' என்ற மறுபெயராலுங் குறிப்பர். திருவருள் வெற்றி என்பதனையே இங்ஙனம் குறித்தனர் போலும். "உந்திபறத்தல் என்பது மகளிர் விளையாட்டுக்களுள் ஒன்று. விளையாடும் பருவத்து இளமகளிர் பாட்டுடைத்தலைவனது வெற்றியை வாயாற்புகழ்ந்து கொண்டு உயரஎழுந்து குதித்தல் உந்தி பறத்தலாகும். மகளிர் இருவர் சிவபெருமானுடைய வெற்றிச் செயல்களைச் சொல்லிக் கொண்டு துள்ளிக் குதித்து விளையாடும் முறையில் அமைந்துள்ளது. அருட் சத்தியினுடைய சாமர்த்தியத்தைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது இப்பனுவலாகும். இதற்கு 'ஞானவெற்றி' என்று முன்னோர் கருத்துரைத்தனர்."[107]

மாணிக்கவாசகரின் திருவுந்தியாரை அடியொற்றியே உய்யவந்த தேவநாயனாரால் சைவசித்தாந்த சாத்திரங் களுள் ஒன்றான திருவுந்தியார் செய்யப்பட்டது என்றும் குறிப்பிடுவர்.

> **"வளைந்தது வில்லு விளைந்தது பூசல்**
> **உளைந்தன முப்புரம் உந்தீபற!**
> **ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற!"**[108]

இது கலித்தாழிசையில் அமைந்த பாடலாகும் இதற்குப் பின் பல 'உந்தி' நூல்கள் தோற்றம் பெற்றுள்ளமையை இலக்கிய வரலாறு சுட்டுகிறது.

## 4.3. ஊசல்

ஊசல் எனும் இச்சொல்லிற்கு ஊசல், அசைவு, ஊஞ்சல், பிரபந்தவகை, ஊசற்பருவம், கலம்பக உறுப்பு, தடுமாற்றம் போன்ற பல பொருள்களுண்டு. இச் சொல்லாட்சியை முதலில் சங்கப்பாடலே தருகின்ற தெனினும் ஊசற்பாட்டைப் பற்றிச் சிலப்பதிகாரமே குறிப்பிடுகின்றது. ஊசல்வரி என்றமையும் மூன்று பாடல்கள் சேரமன்னனைப் புகழும் தன்மையுடன் கலித்தாழிசை யாப்பில் 'ஆடாமோ ஊசல்' எனும் முடிவுடன் அமைந் துள்ளன. சிலம்பிற்குப் பின் மாணிக்கவாசகரின் 'திருப் பொன்னூசல்' இதனையோர் இலக்கிய வகையாக்கி புரைக்கின்றது.

"ஊசலில் அமர்ந்து ஆடும் மகளிர்தம் சார்பில் அமைந்து அதன் வழியே இயங்கி மகிழ்தல் போன்று, சிவபெருமான்பால் நேயமிகுந்த அடியார்களும் தம் முணர்வின் வழியொழுகாது எப்பொருட்குஞ்சார்பாகிய இறைவனது அருளே சார்பாகப் பற்றி நின்றுயாண்டும் இயங்கி மகிழுந்திறனை விளக்கும் நிலையில் அமைந்தது இத்திருப்பொன்னூசல் என்று கருத்துரைத்தல் ஏற்புடைத்

தாம்"[109] என்று திருப்பொன்னூசலுக்கு விளக்கமளிக்கப் படுகின்றது.

"சீரார் பவளங்கால் முத்தம் கயிறாக
ஏராரும் பொற்பலகை ஏறிஇனி தமர்ந்து
நாராயணன் அறியாநாண் மலர்த்தாள் நாயடியேற்
கூராகத் தந்தருளும் உத்தரகோச மங்கை
ஆரா அமுதின் அருள்தா ளிணை பாடிப்
பேரார்வேற் கண்மடவீர் பொன்னூச லாடாமோ"[110]

இவ்வாறு 9 பாடல்களைக் கொண்டதாக மாணிக்க வாசகரின் 'திருப்பொன்னூசல் அமைகின்றது. ஒவ்வொரு பாடலின் ஈறும் 'பொன்னூசல் ஆடாமோ' என்று முடி கின்றது. இவ்வகையால் குறிக்கத்தக்க இலக்கிய வகைமையை இதன்வழி உணரமுடிகின்றது.

## 4.4. கோத்தும்பி

கோத்தும்பி என்பது அரசவண்டினைச்சுட்டும் ஒரு பெயராகும். இதையழைத்துப் பாடப்பட்ட இலக்கியமே கோத்தும்பி எனப்படுகின்றது. திருமங்கை ஆழ்வாரின் 'கோல்தும்பி'யும் மாணிக்கவாசகரின் 'கோத்தும்பி'யும் இப் பெயரையும் அதன் இலக்கிய வகையையும் முதன் முதலில் தருகின்றன. வணடானது மலரிலுள்ள தேனையுண்டு மகிழ்ச்சி மிகுதியால் சுற்றிச்சுற்றிச் சுழன்று பறத்தலைப் போன்று மகளிர் ஒருவருக்கொருவர் கைகோத்து மகிழ்ச்சியுடன் சுற்றி விளையாடும் விளையாட்டே தும்பி பறத்தல் எனப்படுகின்றது.

"இத்தகைய விளையாட்டில் ஈடுபட்ட இளமகளிர் கோத்தும்பியை முன்னிலைப்படுத்தி அம்பலவன் தேனார் கமலமாகிய திருவடித் தாமரையிலேயே சென்று படிந்து அவனது திருப்புகழாகிய இசையினையே இடைவிடாது இசைக்கும் வண்ணம் வேண்டிப் பாடுமாறு அமைந்த

பனுவலாதலின், இது 'திருக்கோத்தும்பி' என்னும் பெயர்த் தாயிற்று''[111] என்று இதன் பெயர், இலக்கியப் பொருண்மை களுக்கு விளக்கமளிப்பர். சான்றுக்கு ஒருபாடல்

**'கரணங்கள் எல்லாம் கடந்துநின்ற கறைமிடற்றன்**
**சரணங்களே சென்று சார்தலுமே தானெனக்கு**
**மரணம்பிறப் பென்றிவை இரண்டின் மறுக்கறுத்த**
**கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்''[112]**

இவ்வகையிலேயே ஏனைய பாடல்களும் அமைகின்றன.

## 4.5. சாழல்

சாழல் என்பது மகளிர் விளையாட்டு வகைகளுள் ஒன்றாக அமைகின்றது. முதலிரண்டடி வினாவாகவும் பின்னிரண்டடி விடையுமா அமைய விடையின் இறுதியில் சாழலோ எனும் சொல் பயிலப் பாடப்படுவது சாழல் எனும் இலக்கிய வகைக்குரிய அமைப்பாகும். ''மகளிர் கைகொட்டி ஆடும் விளையாட்டு வகை சாழை எனப் படுவதும், சாழை கொட்டுதல் என்பது கைகொட்டுதலைக் குறிப்பதும், இங்கு நினைக்கத்தக்கது. பாடலுடன் இணைந்து வருமிவ்வாடல், ஓரளவு கும்மியையும் ஒத்து அமைகின்றது''[113].

ஒருத்தி ஒரு கதையின் செயலைப்பற்றி வினா நிகழ்த்த மற்றொருத்தி அக்கதையின் இடமாகத் தோற்றிய முரண் பாட்டினை நீக்கி அதன் உட்பொருளை விளக்கி விடைகூற இவ்வாறு மகளிர் இருவர் ஒரு கதையைப் பற்றி வினாவும் விடையும் நிகழ்த்தி உரையாடி விளையாடும் முறையில் அமைந்தது சாழல் என்னும் இவ்விளையாட்டு வகை என்றும் கூட இதற்கு விளக்கமளிக்கப்படுகின்றது. மாணிக்கவாசகரின் திருச்சாழல் 20 பாடல்களைக் கொண்டு நான்கடிக் கொச்சகங்களாலாகி இறுதியில் 'சாழலோ' என்ற ஈறுபெற்று முடிகின்றது.

'கோலாலமாகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த
ஆலாலம் உண்டான் அவன் சதுர்தான்] என்னேடீ
ஆலாலம் உண்டிலனேல் அன்றயன்மால் உள்ளிட்ட
மேலாயதேவரெல்லாம் வீடுவர் காண் சாழலோ''[114]

என்று சான்றமைகின்றது. இவ்விலக்கியமே ஏசலுக்கும், எரிந்தகட்சி – எரியாதகட்சி ஆகிய இலாவணிப்பாட்டிற்கும் அடிப்படையாகியது என்றும் கூறப்படுகிற கருத்து ஏற்கக் கூடியதாகவே தோன்றுகிறது. இதனை,

''சாடுதலே சாழலாயிற்று எனும் அடிப்படையில் கேள்விக்கணையால் சாடுதலும், தக்க பதிலால் எதிரடி கொடுத்தலுமாக இவை பொருந்துகின்றன. இடைமடக்காக வரும் இப்பாடல்கள் அம்மானையிலும் இந்நிலை அமைவதை நினைப்பூட்டுகின்றன. கேள்விபதிலாக மட்டு மின்றி, கிண்டலும் அதற்குத் சமாதானம் (மறுப்புக்) கூறுதலுமாகத் திருவாசகப் பாடல்சில அமைதல் பிற்கால ஏசல்வகையின் தோற்றக்களன் இதுவோ என எண்ணச் செய்கின்றன. எரிந்தகட்சி, எரியாதகட்சி பாடும் காமன் பாட்டான லாவணிப்பாட்டும் இதன் தோய்வில் எழுந்திருக்கலாம்''[115] என்ற கருத்தின் வழியறியலாம்.

இவ்வாறு பிற்காலச் சிற்றிலக்கியங்களுக்கு அடியெடுத்துக் கொடுத்த அருளிச் செயல்களை இலைமறை காயாகத்திருமுறைகளில் அடையாளங் காணமுடியும்.

## 4.6. சுண்ணம்

இது வள்ளை. கொடிவகை, மகளிர் நெற்குத்தும் போது பாடும் பாட்டு ஆகியவற்றைக் குறிக்கும் சொல் ஆட்சியாகும். மேலும் இதனை உரற்பாட்டு, உலக்கைப் பாட்டு, அவலிடி, அம்மனைவள்ளை என்ற பெயர்களுக்கும் உரியதாகக் குறிப்பர், செல்வர் பூசும் வாசனைப் பொடியே பொற்சுண்ணம் எனப்படுகின்றது. இப்பொடியை உரலில்

இடிக்கும்போது மகளிரால் பாடப்படும் பாட்டாகச் செய்யப்பட்டதனால் 'பொற்சுண்ணம்' என்ற பெயர் இவ்விலக்கிய வகைக்கு அமைந்தது. அம்மானை ஆடுதல் போன்றமைந்த மகளிர் செயலாக அமைகின்றது இது.

மாணிக்கவாசகரின் 'திருப்பொற்கண்ணத்'தை 'ஆனந்த மனோலயம்' என்றுமுரைப்பர். இதற்குச் சிவானந்தத்தில் ஆன்மாவின் உணர்வு ஒன்றியிருத்தலே காரணமாகக் கூறப்படுகின்றது. 20 பாடல்களைக் கொண்டு ஒவ்வொரு பாடலின் ஈறும் 'பொற்சுண்ணம் இடித்தும் நாமே' என்ற ஈறுடன் இறைவனைப்பற்றிப் பாடப்படுவதால் 'திரு' என்னும் அடைபெற்று, அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தத்தால் அமைந்துள்ளது திருப்பொற்சுண்ணம். சான்றாக,

> "சூடகந் தோள்வளை ஆர்ப்ப ஆர்ப்பத்
> தொண்டர் குழாமெழுந் தார்ப்ப ஆர்ப்ப
> நாடவர் நந்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப
> நாமும் அவர்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப
> பாடகம் மெல்லடி ஆர்க்கும் மடந்தை
> பங்கினன் எங்கள் பராபரனுக்
> காடக மாமலை அன்ன கோவுக்
> காடப் பொற்சுண்ணம் இடித்தும்நாமே'[116]

என்ற பாடலை மொழியலாம்.

"சங்க இலக்கியம் தலைவியும் தோழியும் தலைவனின் புகழ்பாடும் வள்ளைப்பாடலைத் தருகின்றது. குறிஞ்சிக் கலியின் வள்ளைப் பாடலுக்குப்பின் சிலம்பின் வாழ்த்துக் காதையில் வள்ளைப்பாடலமைகின்றது. அகத்தலைவனைப் பாடிய நிலைவீழ்ந்து அரசனை வாழ்த்தும் அமைப்பு இங்குப்பொருந்துகின்றது. அரசவாழ்த்து நீங்கி இறைவனைப் போற்றுதல் உரற்பாட்டின், பொருண்மை

யாகியமை திருவாசகத்தின்-திருப்பொற்சுண்ணப் பகுதியில் காணப்படுகின்றது. முந்தைய பாடல்களினின்று மாறுபட்டு இப்பகுதி சுண்ணம் இடித்தலைத்தருவதால் வள்ளைப் பாட்டாயினும் பெயர் வேறுபாடுபெறுகின்றது''[117] பின்னரும் இப்பாடல்வகை நடைமுறையிலிருந்தமையைப் பாரதியாரின் பாடல் மறைமுகமாகச் சுட்டுகிறது. 'சுண்ணம் இடிப்பார்தம் சுவை மிகுந்த பண்களில் நெஞ்சம் பறிகொடுத்த' பாவியாகத் தம்மைப் பாரதியார் காட்டு மிடம் நற்சான்றாகும.

## 4.7. தெள்ளேணம்

மாணிக்கவாசகரின் திருத்தெள்ளேணம் இவ்வகைக்குச் சான்றாயமைகின்றது. தெள்ளேணம் என்பது கை கொட்டிப் பாடியாடும் மகளிர் விளையாட்டு வகையாக உள்ளது. கும்மி, மகளிர் கைகொட்டிப்பாடியாடும் விளையாட்டு, கும்மிப்பாட்டு ஆகியனவற்றைக் குறிக்கும் 'கொம்மை' எனும் சொல்லினடிப்படையில் இச்சொல் பிறந்ததாகக் குறிப்பர். ''குதித்தாடுதல் எனப்பொருள் படும் 'கும்மாளம்' என்ற சொல்லிலிருந்து 'கும்மி' வந்தது என்றும், கைகொட்டுதல் எனும் பொருள்தரும் கும்முதலே கும்மிக்கு அடிப்படை என்றும் பலவாறு எண்ணுவர். திருவாசகத்தின் 'திருத்தெள்ளேணம்' கும்மியை ஒத்த வகையாகக் கருத வாய்ப்புண்டு''[118] என்று கூறப்படுகின்ற கருத்து இங்குக் கருதத்தக்கது. இதைவிடவும் பின்வரும் கருத்தானது தெள்ளேணம் என்பதற்குப் பொருத்தமாக அமைகின்றது.

''தெள்ளேணம் என்பது சிறுமியர்க்குரிய விளையாடல் களில் ஒன்றாகும். சிறுமியர் முச்சில் என்னும் சிறிய முறத்தைக் கையிற்கொண்டு தானியங்களைத் தெள்ளிக் கொழித்து விளையாடும் நிலையில் இறைவனது புகழ்த்

திறங்களைத் தெளிந்துணர்ந்து பாடிப்போற்றுவதாக அமைந்தது இப்பனுவலாதலின் இது 'திருத்தெள்ளேணம்' என்னும் பெயர்த்தாயிற்று'' தெள்ளுதல் என்பது தானிய முதலியவற்றைக் கல்லும் மண்ணுமாகிய குற்றங்களைப் புடைத்து ஒதுக்கித் தூயனவாகத் தனியே பிரித்தெடுத்தல் ஆகும். 'பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ' என வரும் சொற்குறிப்புக்கொண்டு தெள்ளேணம் எனக் குறிக்கப்படும் இவ்விளையாட்டுப் பாட்டுக்கேற்பக் கை கொட்டியோ பறைகொட்டியோ இயற்றப்பெறும் விளை யாட்டாக இருக்கலாம் எனக்கருதுதலும் உண்டு''[119] என்பதே அக்கருத்தாகும்.

> ''கனவேயும் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்
> புனவேய் அனவளைத் தோளியொடும் புகுந்தருளி
> நனவே எனைப்பிடித்தாட் கொண்டவா நயந்து நெஞ்சம்
> சினவேற்கண் நீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமே''[120]

என்றிவ்வாறு அமையும் இருபது பாடல்களைக் கொண்ட தாக நாலடித்தரவு கொச்சகக் கலிப்பாவால் இயன்றதாக அமைந்து ஒவ்வொரு இறுதியும் 'தெள்ளேணங் கொட்டாமோ' என்று முடிந்துள்ளது.

## 4.8. திருத்தோணோக்கம்

மகளிர் விளையாட்டு வகையாக இது குறிக்கப் பெறுகின்றது. மகிழ்ச்சியின் விளைவாகத் தோள்கள் பூரிக்கக் கை வீசியாடும் விளையாட்டாக இதனைக் குறிப்பர் ''தோணோக்கம், மகளிர் விளையாட்டு வகையைச் சுட்டுகின்றது. தோள் வீசியாடலை ஒத்த நிலை இங்கு அமையலாம். நோக்கம் என்பது 'ஒக்கம்' என உயர்ச்சியைக் குறிப்பதும், கைவீசிப்பாடும் குழந்தையர் பாடல் பாங்கும் இங்கு நினைக்கத்தக்கன. மாணிக்க வாசகரின் 'திருத்தோணோக்கம்' இம்மகளிர் ஆடல் வகை

இலக்கிய அமைப்புப் பெற்றதைக் காட்டுகின்றது... சிலம்பில் அடியார்க்கு நல்லார் உரைதரும் பல்வகை வரிக்கூடத்தில் 'நல்லார் தோள் வீச்சாகக் குறிக்கப்படுவது இவ்வகைபோலும்''[121] திருத்தோணோக்கம் 14 பாடல் களைக் கொண்டு அமைந்துள்ளது. இவை நாலடித்தரவால் அமைக்கப்பெற்றுள்ளன. "தோணோக்கம் ஆடாமோ" எனவும் 'தோணோக்கம்' எனவும் இப்பாடல்கள் ஈறுபெற்று முடிகின்றன.

**''ஆனந்தக் கூத்தன் அருள்பெறின்நாம் அவ்வணமே
ஆனந்த மாகிநின் றாடாமோ தோணோக்கம்''[122]**

மகளிர் ஒருவர் தோளை ஒருவர் அன்போடு நோக்கித் தொட்டும் தட்டியும் அகமகிழ்ந்து ஆடும் விளையாட்டாகும் என்றும்கூட இதற்கு விளக்கமளிப்பர். இவ்வகையில் மகளிரொடு தொடர்புடைய பாடல்வகைகள் போலப் பல கோணங்களில் இலக்கிய வகைகளைச் சிந்திக்கத் திருமுறைகள் இடந்தருகின்றன

## 4.9. பூவல்லி

பூவல்லி என்பது பூக்கொய்து ஆடும் மகளிர் விளையாட்டு வகையைக் குறிக்கின்றது. ''பூ + வல்லி எனும் நிலையில் பூவைத்தாங்கிய கொடியிலிருந்து மலரைக் கொய்தல் கருதப்படுகின்றது சங்கப் பாட்டின் குறிஞ்சிப் பாட்டு, தலைவியும் தோழியும் மலர்கொய்து மகிழ்ந்த நிலையினைக் காட்டுதல் (61–106) இங்கு நினைக்கத் தக்கது''[123]

திருப்பூவல்லி என்பது அழகிய பூக்களையுடைய கொடி எனப்பொருள்படும். இச்சொல், பூக்கொய்தலாகிய இள மகளிர் விளையாட்டினையும் அவ்விளையாட்டிற்பாடப்- பெறும் வரிப்பாடலையும் குறித்த பெயராக இங்கு ஆளப் பெற்றுள்ளது. சிலப்பதிகாரவுரையில் அடியார்க்கு நல்லார்

குறித்த பலவகை வரிக் கூத்தினுள் ஒன்றாகிய 'கொய்யுமுள்ளிப்பூ' என்பது இப்பூவல்லியாகிய விளையாட்டினைக் குறிக்கும் எனக் கருதுதல் பொருந்தும். இறைவனுக்குச் சாத்துதற்கென நறுமலர் கொய்யும் சிறுமியர்கள் அம் முதல்வனது பெருங்கருணைத் திறத்தை வியந்து பாடும் முறையில் திருவாதவூரர் இப்பூவல்லியினைப் பாடியுள்ளார் என்றும் கருத்துத் தெரிவிப்பர்.

> **"எந்தையெந் தாய்சுற்ற மற்றுமெல்லாம் என்னுடைய**
> **பந்தம் அறுத்தென்னை ஆண்டுகொண்ட பாண்டிப்**
> **பிரான்**
> **அந்த இடைமருதில் ஆனந்தத் தேனிருந்த**
> **பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ"[124]**

என்றமைகின்றது. நாலடித்தரவாலியன்ற 20 பாடல்களைக் கொண்டு பூவல்லி கொய்யாமோ எனும் ஈறுபெற்று முடிகின்றது. இப்பாடல்கள் விளையாட்டானது பாடலோடு இணைந்துவரும் நிலையை உரைப்பனவாக, 'புனையாளன் சீர்பாடி', 'பொந்தைப்பரவி', 'புண்பட்டவாபாடி', 'குணங்கூரப்பாடி நாம்' என்றமைவதால் உணரமுடியும்.

இவ்வாறு நாட்டுப்புறப்பாடல்களின் அடிப்படையில் தோன்றிய இலக்கியங்கள் அமைகின்றன.

**நாட்டுப்புறப் பாடல் மரபை அடிப்படையாகக் கொண்டமைந் வற்றைப்பின்வருமாறு வகைப்படுத்த முடியும்**

**(1) முன்னை இலக்கியத்தைப் பயன்படுத்தியதால் தோன்றியவை.**

அம்மானை, ஊசல், பூவல்லி, சுண்ணம்.

**(2) தனியாகத் தோன்றியவை**

உந்தியார், கோத்தும்பி, சாழல், தெள்ளேணம், தோணோக்கம் போன்றவைகளாகும்.

**(3) பின்னாளில் தனித்த ஓர் இலக்கிய வகைக்கு வித்திட்டவை**

*அம்மானைக் கதைப்பாடல், இலாவணி, ஏசல் என்பவற்றில் பொருண்மைகள் அமைந்துள்ளன. பின்னாளில் இப்பெயரில் இலக்கியங்கள் அமைய இவை அடிப்படையாகியுள்ளன.*

இயல் — 5

# மாலை போன்ற தனிவகைகள்

மாலை என்ற சொல்லின் பொருளாவன அந்திப் பொழுது, அரசன்மனை, இயல்பு, இரா, ஒழுங்காயிருப்பது, ஒழுங்கு, சொல்; பூ, பொன் முதலியவற்றாலாகிய மாலை, பெண், பாசம், வரிசை, விறலி. இருள், சமயம், பிரபந்த வகை. ''மலர்களால் தொடுக்கப்பட்ட பூந்தொடையைக் குறிக்கும் நிலையில் இச்சொல்லின் பயிற்சி சங்ககால இலக்கியத்தில் அமைகின்றது: வரிசையாக மலர்கள் மட்டு மின்றிப்பாவும் தொடுக்கப்பட்ட நிலையில் பூமாலை போன்று பாமாலையும் உருவாயிற்று. ஏதேனும் ஒரு பொருள் பற்றிப் பல பாடல்கள் தொடர்ந்து அமைந்த போது அவற்றிற்கு மாலை என்ற பொதுப்பெயர் வழங்கப்பட்டது''[125]

பாட்டியல்கள் பொருள், யாப்பு, அமைப்பு, எண்ணிக்கை போன்ற பல அடிப்படையில் அமைந்த மாலை பலவற்றைத் தருவதாகக் குறிப்பர். பொருளால் வடிவால் வேறுபடு மிவை 'மாலை' என்ற பின்னொட்டால் ஒன்றுபட்டு நிற்கின்றன இவ்வகையில் அங்கமாலை, ஆனந்தமாலை, இரட்டைமணிமாலை, உலாமாலை, ஏகாதசமாலை நவரத்தினமாலை, நான்மணிமாலை போன்ற மாலைகள் இங்குத் தொடுக்கப்பெறுகின்றன பிற்காலத்திய மாலை இலக்கியங்களை உடன் வைத்துக் கருதின் மேலும் பல செய்திகளைப் பெறலாம்.

## 5 1. அங்கமாலை

திருநாவுக்கரசரின் அங்கமாலை 'மாலை' எனும் ஈறு பெற்றுள்ளமையால் இங்குக் குறிப்பிடப்படுகிறது. அங்க மாலை எனப்படுவது மாந்தர்தம் உடல் உறுப்புகளை வருணித்து வெண்பாவால் அல்லது வெளிவிருத்தத்தால் பாடப்படும் தன்மையுடையதாகும்.

> "மிக்க உறுப்பை வெண்பா விருத்தம்
> தொக்க வொரு முறையால் தொடர்புறப் பாடுதல்
> அங்கமாலை யாமெனப் பகர்வர்"[126]

என்று இதற்கு இலக்கணமும் வரையறுக்கப்பட்டுள்ளது.

அப்பரின் நான்காந்திருமுறையில் அமைந்த 9ஆம் பதிகம் இவ்வங்கமாலையாக அமைந்துள்ளது. இப்பதிகம் உறுப்புகளின் வருணனையாக அமையவில்லை, இது மாந்தர்தம் உறுப்புகள் இறைவனை வழிபடுதற்கே படைக்கப்பட்டுள்ளன எனும் போக்கில் அமைந்துள்ளது. பெயருக்கேற்ற உறுப்பு வருணனை இதில் அமையவில்லை எனினும் அங்கங்களின் செயல்களைத் தலைமுதல் கால் வரையில் கோவையாக்கி - மாலையாக்கி உரைக்கின்ற

மையின் இப்பதிகம் அங்கமாலை என்று பெயர் பெற்றது போலும்.

"தலையே நீ வணங்காய் –
தலைமாலை தலைக்கணிந்து
தலையாலே பலிதேரும் தலைவனை
தலையே நீ வணங்காய்"[127]

இவ்வாறே, 'கண்காள் காண்மின்களோ' என்று ஒவ்வொரு உறுப்பையும் வரிசைப்படுத்தியுரைக்கின்றார். இதனாலேயே இது அங்கமாலை எனப்படுகின்றது. பாதாதிகேசம், கேசாதிபாதம் போன்றே இதுவும் உறுப்புகளைப் பற்றிய இலக்கிய வகையாகும்.

## 5.2. ஆனந்தமாலை

இவ்வகை மாலையில் மாணிக்கவாசகரின் 'ஆனந்த மாலை' அமைகின்றது. மாணிக்கவாசகர், சிவானந்தத்தை அடைய விரும்பிப்பாடிய பதிகமாதலின் இப்பெயர் பெற்று விளங்குகிறது. "ஆரா அன்புடைய மெய்யடியார்களுடன் கூடிப் பெருமானது பேரானந்தத்துப் பிரியாதிருக்கப் பெறும் இன்பத்தின் இயல்பினை விரும்பியுரைப்பதாதலின், இஃது ஆனந்தமாலை' என்னும் பெயருடையதாயிற்று"[128]. சிலப்பதிகாரத்திலுள்ள 'துன்பமாலை' என்னும் தலைப்பினைப் போன்று இன்பத்தின் இயல்பினை விளக்கும் இப்பனுவல், 'ஆனந்தமாலை' என்னும் பெயருடைத்தாகிறது என இப்பெயர்க் காரணத்தைப் பற்றிக் குறிப்பிடுவர்.

இப்பதிகம் ஏழு பாடல்களைக் கொண்டதாக அமைந்து உள்ளது.

'மின்னே ரனைய பூங்கழல்கள்
அடைந்தார் கடந்தார் வியனுலகம்
பொன்னே ரனைய மலர்கொண்டு
போற்றா நின்றார் அமரரெல்லாம்

கன்னே ரனைய மனக்கடையாய்க்
கழிப்புண் டவலக் கடல்வீழ்ந்த
என்னே ரனையேன் இனியுன்னைக்
கூடும் வண்ணம் இயம்பாயே'[129]

மற்றைய பாடல்களும் இவ்வாறே அமைந்து மாணிக்க வாசகரின் சிவானந்த அனுபவங்களைக் கூறுவனவாக அமைகின்றன.

## 5.3. இரட்டை மணிமாலை

கட்டளைக்கலித்துறையும் வெண்பாவும் இணைந்து மணிமாலைபோல் அமைக்கப்படும் இலக்கியமே இரட்டை மணிமாலையாகும். இஃது இருபது பாடல்களால் முடிவுறும்.

'வெண்பா விருத்தம் வியப்புற இருபஃ
தெண்பட உரைப்பது இரட்டை மணிமாலை'[130]

எனப் பாட்டியல் நூல்கள் பலவும் இதற்கு இலக்கணம் வகுத்துள்ளன.

இவ்வகையில் காரைக்காலம்மையாரின் திருவிரட்டை மணிமாலை முதல் இலக்கிய வகையாகவும் வடிவமாகவும் அமைந்துள்ளது. இதனை, "திருவிரட்டை மணிமாலை யென்பது கட்டளைக் கலித்துறை முன்னும் வெண்பா பின்னுமாக முறையே தொடர்ந்து அந்தாதித் தொடை யால் மாலை போன்றமைய இருபது செய்யுள்களால் இயற்றப்பெறுவதாகும். இதனை, 'ஆய்ந்தசீர் இரட்டை மாலையந்தாதி' எனச் சேக்கிழாரடிகள் குறிப்பிட்டுள்ளார். இரட்டைமணிமாலையென்ற பிரபந்தத்தை முதன்முதற் பாடியவர் காரைக்காலம்மையாரேயாவார். இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள தமிழ் நூல்களிற் கட்டளைக் கலித்துறையென்னும் யாப்புக்கு மூல இலக்கியமாக விளங்குவன காரைக்காலம்மையாரின் பாடல்கள் இருபதுமே யாகும்"[131] என்ற கூற்றின் வழி அறியமுடியும்.

'கிளர்ந்து வெந்துயர் வந்தடும் போதஞ்சி
நெஞ்சம் என்பால்
தளர்ந்திங் கிருத்தல் தவிர்திகண்
டாய்தள ராதுவந்தி
வளர்ந்துந்து கங்கையும் வானத்
திடைவளர் கோட்டுவெள்ளை
இளந்திங் களும்எருக் கும்இருக்
குஞ்சென்னி ஈசனுக்கே''[132]

இது கட்டளைக்கலித் துறையாகும். இதனையடுத்து, வெண்பா அமைகின்றது

''ஈசன்அவன் அல்லா தில்லை எனநினைந்து
கூசி மனத்தகத்துக் கொண்டிருந்து — பேசி
மறவாது வாழ்வாரை மண்ணுலகத் தென்றும்
பிறவாமைக் காக்கும் பிரான்''[133]

இவ்வாறு காரைக்காலம்மையாரின் திருஇரட்டைமணி மாலை அமைகின்றது.

பதினோராந்திருமுறையில் இதனையுஞ் சேர்த்து நான்கு இரட்டைமணிமாலைகள் காணப்படுகின்றன. அவை,

கபிலதேவநாயனாரின் — மூத்தநாயனார்
திருவிரட்டைமணிமாலை
— சிவபெருமான்
திருவிரட்டைமணிமாலை
நம்பியாண்டாரின் — திருநாரையூர் விநாயகர்
திருவிரட்டைமணிமாலை

என்பன. இரட்டை மணிமாலைகள் அனைத்தும் பதினோராந்திருமுறையிலேயே அமைந்துள்ளன. கபிலதேவ நாயனாரின் இரண்டு மணிமாலைகளும் வெண்பா அதனை அடுத்துக் கட்டளைக் கலித்துறை என்றமைய மூத்த

நாயனாராம் விநாயகரைக் கொண்டும் சிவனைக் கொண்டும் அமைந்துள்ளன. நம்பியாண்டாரின் திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலையும் வெண்பா முன்னும் கட்டளைக் கலித்துறை பின்னும் அமையத் திருநாரையூர் விநாயகனைப் பற்றி 20 பாடல்களைக் கொண்டதாக அமைந்துள்ளது.

## 5.4. உலாமாலை

தலைமகன் ஒருவன் வீதியில் உலாமேற்கொள்ள அவனைக் கண்டு எழு பருவமங்கையர் காதல் கொள்வதாகப் பாடுவது உலா எனப்படும். இங்கே கருதப்பெறும் நம்பி யாண்டார் நம்பியின் ஆளுடையபிள்ளையார் திருவுலா மாலையானது, திருஞானசம்பந்தப் பிள்ளையார் பேதை முதலிய எழு பருவ மகளிர் காதல் கொள்ள சீகாழிப் பதியிலே திருவுலாச் சென்ற தன்மையினை விரித்துரைக் கின்றது

இது கலிவெண்பாவாலாகிய 143 கண்ணிகளை யுடையதாக அமைந்துள்ளது. இதன்கண் சீகாழியின் எழில் வளம், அந்நகரில் பிறந்து இறையருளால் ஞானப்பாலுண்டு இன்னிசைத் திருப்பதிகங்களால் இறைவனுக்குப் புகழ் மாலைச் சூட்டிப் பல பாடல்களைப்பாடி அற்புதங்கள் பல செய்த சம்பந்தரின் செயல்கள் விளக்கப்பெறுகின்றன. அவர் படைத்த இலக்கியப் பெயர்களும் வரிசையாகக் கூறப்படுகின்றன. இதன்பின் சீகாழிப் பதியில் வீதியுலாப் போக அங்கு மகளிர் அவரைக் கண்டு காதல் கொள்ளும் திறம் பிற்பகுதிகளில் பேசப்பெறுகின்றது. இவ்வாறு ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலையமைகின்றது.

## 5.5. ஏகாதசமாலை

அகவல்விருத்தம் பதினொன்றால் முடிமுதல் தொடை அமைவுறப் பாடப்படுவது ஏகாதசமாலையாகும். இவ்

வகையில் பதினோராந் திருமுறையில் நம்பியாண்டார் நம்பியின் 'திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை' அமைகின்றது.

"திருநாவுக்கரசரைப் போற்றிப் பரவும் பதினொரு பாடல்களையுடைய செந்தமிழ் மாலையாக விளங்குவது இப்பிரபந்தமாதலின் இது திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை என வழங்கப் பெறுவதாயிற்று. இதன்கண் அமைந்த பாடல்கள் பதினொன்றாயினும் திருநாவுக்கரசரது வரலாற்றிலமைந்த சிறந்த உண்மைகளும் அப்பெருந்தகை யாரை வழிபடுவதனாலுளவாம் பெருநலங்களும் அரசர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களின் சிறப்பும் இப் பாடல்களில் தெளிவாக அறிவுறுத்தப் பெற்றுள்ளன."[134]

மேலும் திருநாவுக்கரசருக்குரிய சிறப்பினைப் பல படக் கூறி இப்பாடல்கள் புகழ்கின்றன. மற்றைய சிறப்புகளையும் சிறப்பித்து நம்பியாண்டார் பாப்புனைந்துள்ளமை குறிக்கத் தக்கது.

## 5.6. நவரத்தினமாலை

நவமணிகளான கோமேதகம், நீலம், பவளம், மரகதம், மாணிக்கம், முத்து, புருடராகம், வைடூரியம், வயிரம் ஆகிய ஒன்பது வகையும் இதனால் சுட்டப்படுகின்றன. இவை அனைத்தும் சேர்ந்து தொடுக்கப்பட்ட மாலையே நவரத்தினமாலையாகும். மேலும், ஒன்பது பாடல்களால் ஆன நூலும் கூட 'நவரத்தினமாலை' என்று கருதப்படு கின்றது. வெண்பா முதலிய பல்வேறு வகைப்பட்ட பாக்களாலும் பாவினங்களாலும் அமைந்த ஒன்பது பாடல்களைக் கொண்ட இலக்கியமே 'நவரத்தினமாலை' எனப்படும்.

சம்பந்தர் தேவாரத்தில் இவ்வகையில் 'நவரத்தின மாலை'யானது பத்துக்கட்டளைக் கலித்துறைப் பாடல்

களைக் கொண்டு அமைந்துள்ளதாகக் குறிப்பர். ஆனால் இதன் பெயர்தான் நவரத்தினமாலை என்று அமைந் துள்ளதே தவிர ஒன்பது பாடல்களைக் கொண்டதாகவோ ஒன்பது வகைப் பா, பாவினங்களால் இயன்றதாகவோ இஃது அமையவில்லை. இதனையே, "திருஞானசம்பந்தர் பாடியதுபோல், நவரத்தினமாலை என்னும் பெயரில் பத்துப்பாடல்கள் கொண்டமைவது இலக்கணத்திற்குப் பொருந்துவதாகாது என்றே கூறவேண்டும்"[185] பெயரைக் கொண்டே இவ்விலக்கிய வகை இங்கு எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது.

## 5.7. நான்மணிமாலை

நான்மணிமாலை என்பது, அந்தாதித் தொடையாகப் பாடப்பட்டதும் வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம் என்பன மாறிமாறி இயைந்துவரும் நாற்பது செய்யுள் கொண்டதுமான பிரபந்த வகையைக் குறிக்கும் என்று குறிப்பிடுவர். நான்குமணிகளால் ஆன கோவையாகிய மாலையைப் போன்று நான்கு வகைப்பா, பாவினங்கள் இவற்றின் தொகுப்பாகக் - கோவையாக அமைய நாற்பது செய்யுள்களால் அமையும் இலக்கியமே நான்மணிமாலை எனப்படுகின்றது.

இவ்வகையில் பதினோராந்திருமுறையில் பட்டினத்துப் பிள்ளையாரின் கோயில் நான்மணிமாலை அமைகின்றது. இதுவே இவ்விலக்கிய முன்னோடியாகவும் விளங்குகின்றது. வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரியவிருத்தம், ஆசிரியப்பா எனும் நால்வகைப் பாவால் அமைந்துள்ளது.

> 'பூமேல் அயனறியா மோலிப் புறத்ததே
> நாமே புகழ்ந்தளவை நாட்டுவோம்-பாமேவும்
> ஏத்துகந்தான் தில்லை இடத்துகந்தான் அம்பலத்தே
> கூத்துகந்தான் கொற்றக் குடை'[186]

இது வெண்பாவால் இயன்றுள்ளது. இதைத்தொடர்ந்து கட்டளைக் கலித்துறை, அதன்பின் ஆசிரியவிருத்தம், ஆசிரியப்பா என்ற அமைப்புக் காணப்படுகின்றது.

கோயில் என்று தில்லை குறிக்கப்படுவதால் அக் கோயிலைப் பற்றி வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா எனும் நான்குவகைப் பாவாலும் பாவினத்தாலும் நாற்பது பாடல்களால் இயற்றப்பட்டுள்ளமையால் இப்பெயரினை இவ்விலக்கியம் பெற்றதென ஓரலாம். இவ்வாறு மாலை என்னும் ஈறுபெற்றவை தனி இலக்கிய வகையாகக் குறிக்கப்படும் அளவிற்கு மாலை இலக்கியங்கள் திருமுறைகளில் காணப் படுகின்றன.

**மாலை என்ற பெயரில் அமையும் இலக்கிய வகைகளைப பின்வருமாறு வகைப்படுத்த முடியும்**

1. முன்னரே இருந்த இலக்கியப் பொருண்மையைக் கொண்டு அமைந்தது – அங்கமாலை என்பதாகும். பெயர் புதியது.

2. மாலை என்ற பின்னொட்டுடன் அமையும் இலக்கியங்கள் அனைத்தும் தனித்த இலக்கியமாக அமைகின்றன.

3. அங்கமாலை, ஆனந்தமாலை, இரட்டைமணி மாலை, ஏகாதசமாலை, நவரத்தினமாலை, நான்மணிமாலை போன்றன இத்தகையன.

இயல் - 6

# யாப்பால் பெயர்பெற்றமையும் இலக்கிய வகைகள்

"யாப்பு அடிப்படையில் கணிக்கக் கூடிய சில பிரபந்தங் களும் அமைகின்றன இலக்கிய வெளியீட்டில் புறவடிவ மான யாப்பு தனியிடம் பெறுகின்றது. பொருளுக்கே முதன்மை எனினும் அப்பொருளைத் தாங்கிவரும் பாவடிவுக்கும் முதன்மை ஏற்பட்ட காலம் யாப்பிலக் கணத்தைத் தனியாக வளர்த்தது. முதலில் ஏற்பட்ட இயல்பு வடிவங்களும், புலமை மிக்கோர் புகுத்திய சோதனை வடிவங்களும் பயிற்சி காரணமாக நிலைபெற்றுப் பிற் காலத்தில் வடிவ வரையறை பெற்றன"[137] என்ற கருத்தின் வழி யாப்பின்வழி பெயர்பெற்ற, இலக்கியங்களின் தன்மை

பெறப்படுகிறது. இந்தப்பெயர்கள் பொருள், வடிவம் என்று மட்டுமில்லாது பல்வேறுபட்ட கோணத்தையும் அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளன. அவ்வகையில் திருமுறைகளில் காணப்படும் வகைகளைப் பின்வருமாறு வரிசைப் படுத்தியுரைக்கலாம் அகவல் (ஆசிரியம்), அந்தாதி, கலிவெண்பா, திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம், திருநேரிசை, திருமுக்கால், திருவிருத்தம், திருவெண்பா, மேல்வைப்பு என்பனவும் வழிமொழித் திருவிராகம் என்று வருவனவும் இவ்வகையில் அடங்குகின்றன.

## 6.1. அகவல் (ஆசிரியம்)

அழைக்கை, எடுத்தலோசை, அகவற்பாவுக்குரிய ஓசை, ஆசிரியப்பா, மயில்குரல், கூத்தாடல் போன்ற பல பொருள்களைக் குறிக்கும் ஒரு சொல்லாகும் இது. 'அகவல் என்பது ஆசிரியம்மே' என்று இச்சொல் தொல்காப்பியத்தில் 'பா' வகைகளில் ஒன்றாகிய ஆசிரியப் பாவைக் குறித்து நிற்கின்றது. அகவற்பாவால் அமைந்தநூல் அகவல் எனப் பெறுகின்றது. பல பாடல்கள் இவ்வகையாப்பில் அமைந்திருப்பின் அப்பாடல்களை அகவல் என்று வழங்கும் மரபில்லை. ஒரே ஒரு நெடிய அகவற்பாவால் அமைந்த பாடல் மட்டுமே 'அகவல்' என்பதற்குப் பொருத்தமுடையதாக உள்ளது. மேலும்,

''பத்துப்பாட்டுள் 'பட்டினப்பாலை' நீங்கலாக எஞ்சிய ஒன்பதும் அகவல் பாவால் அமைந்த நூல்களே எனினும் அக்காலத்து 'அகவல்' என ஒரு நூல்வகை எண்ணப் பெறவில்லை யாகலின் அவற்றைப் பாட்டென்றே வழங்கினர்''[138] என்ற கருத்து மேற்கூறியதற்கு வலுவூட்டுகின்றது. மாணிக்கவாசகரின் திருவாசகத்தில் அகவல் என்ற பெயரிலேயே அமைந்த இருவடிவங்கள் காணப்படுகின்றன. அவையாவன. போற்றித்திரு அகவல், கீர்த்தித்திரு அகவல்

என்பன. கீர்த்தித்திரு அகவலாவது, சிவபெருமான் தன்பால் அன்புடைய மெய்யடியார்களுக்கு அருள்புரிந்த புகழ்ச் செய்திகளை உரைத்தலின் இப்பெயர் பெற்றுள்ளது எனல் இயலும்.

நிலைமண்டில ஆசிரியப்பாவினால் இயன்றதாக 146 அடிகளைக் கொண்டதாக இது விளங்குகின்றது. உயிர்கள் உய்தியடைய இறைவன் நிகழ்த்திய திருவிளையாடல்களை விரித்துரைப்பதாகவும் இவ்வகவல் அமைகின்றது.

''**துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்**
**என்னுடை யிருளை ஏறத் துரந்தும்**
**அடியா ருள்ளத் தன்புமீ தூரக்**
**குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும்**''[139]

இவ்வாறே தொடர்ந்து இறைவனின் புகழ்ச்செய்திகள் உரைக்கப்படுகின்றன.

போற்றித்திரு அகவலாவது, ''நான்முகன் முதலா வானவர் தொழுதெழ' எனத்தொடங்கும் அகவல், வணக்கம் எனப்பொருள் படும் 'போற்றி' என்னும் தமிழ் மந்திரத்தால் இறைவனை முன்னிலைப் படுத்திப் போற்றுவதாதலின் போற்றித்திரு அகவல்' என்னும் பெயர்த்தாயிற்று''[140]. உயிர்கள் இவ்வுலகில் பிறந்து வீடுபேறு அடைதற்குரிய நெறிமுறைகளை அறிவுறுத்தும் நிலையில் இந்தப் பாடல் அமைவதால் 'முத்திபெறு நெறியறியும் மொழி போற்றித் திரு அகவல்' என்றிதனைச் சிறப்பித்தனர் போலும்.

225 அடிகளாலாகிய நிலைமண்டில ஆசிரியப்பாவால் இயற்றப் பெற்றுள்ளது இது. 89-லிருந்து 225 வரையுள்ள அடிகள் சிவமந்திரங்களாகக் கொண்டு அருச்சனை செய்யத் தக்கத் தன்மையுடையனவாக உள்ளன. மாணிக்கவாசகரின் அகவல்களே 'அகவல்' என்ற பெயர் அமைந்த முதல்

சிற்றிலக்கியங்களாக அமைந்துள்ளன. பின்னாளில் பல அகவல்கள் தோன்ற இவை அடிப்படையாகியுள்ளன.

**அந்தாதி**

வடிவம், பொருள் என்றிவை மட்டுமல்லாது பாடலின் தொடையமைப்புங்கூட இலக்கிய வகையின் பெயராகும் தன்மையினை இவ்வந்தாதியானது உணர்த்தி நிற்கின்றது. அந்தாதி - அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தோ அசையோ சீரோ மற்றையடிக்கு ஆதியாகத் தொடுப்பது. இவ்வாறு அந்தாதித் தொடையையும் ஒரு பிரபந்த வகையையும் இது உணர்த்துகின்றது.

ஒரு செய்யுளின் இறுதிச்சீரோ எழுத்தோ அசையோ அதனை அடுத்துவரும் செய்யுளுக்கு முதலாக வருமாறு பாடப்படும் நிலையிலேயே திருமுறை சுட்டும் அந்தாதிகளும் அமைந்துள்ளன. இச்சொல் அந்தம் + ஆதி என்ற இரு வடசொல்லின் அடிப்படையில் பிறந்த சொல்லாகக் கருதப்படுகின்றது.

காரைக்காலம்மையாரின் அற்புதத்திருவந்தாதியாகிய முதல் அந்தாதி தோன்றுவதற்கு முன்பே தமிழிலக்கிய உலகில் அந்தாதிப் பண்பு பரந்து காணப்படுவதாகக் குறிப்பர். இதனைச் ''சங்க இலக்கியமும் சில பாடலின் உள்ளும் சில செய்யுட்களிடையும் அந்தாதிப் பண்பை அமைத்துள்ளது. பதிற்றுப்பத்தின் நான்காம் பத்தும் ஐங்குறு நூற்றின்பதினெட்டாம் பத்தான தொண்டிப் பத்தும் முழுநிலையில் அந்தாதி இணைவைப் பெற்றுள்ளன. புறநானூறு (2), நற்றிணை (95) போன்றவற்றின் ஒவ்வொரு பாடலும், சிறுபாணாற்றுப்படையின் இடையடிகளும் (14–28) ஒரு அடியின் ஈறு தொடர்ந்த அடியின் தொடக்கமாகி அந்தாதியமைப்புப் பெறுவது குறிப்பிடத் தக்கது.''[141] என்ற கருத்திற்கு விடை கூறுமுகத்தான்

வெள்ளைவாரணன் தம் பன்னிரு திருமுறை வரலாற்றின் இரண்டாம் பகுதியில் கூறுவது ஏற்புடையதாக அமைகின்றது.

"சங்கத் தொகை நூல்களுள் ஒன்றாகிய பதிற்றுப் பத்திற் காப்பியாற்றுக் காப்பினார் பாடிய நான்காம்பத்து அந்தாதித் தொடையமையப் பாடப்பெற்றதாகும். எனினும் இப்பத்தின் இறுதிச் செய்யுளின் இறுதியடி முதற் செய்யுளின் முதலடியுடன் மண்டலித்து முடியவில்லை"[142] என்று அவர் கூறுவதன் மூலம் காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதியே அந்தாதி எனும் பெயரையும் அப்பெயருக்கேற்ற இலக்கிய வகையையும் தருகின்றது என்பதைப் பெறவியலுகின்றது.

தமிழிலக்கிய உலகில் அந்தாதிப் பண்பு காணப்படினும் தனித்த ஓர் இலக்கியமாகவும் அதற்குரிய இலக்கணத் தோடும் அமைந்தது காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதியே ஆகும். பாட்டியல் நூல்கள் அந்தாதியின் இலக்கணத்தை வரையறை செய்துள்ளன. பதினொராந் திருமுறையில் இவ்வகையில் 8 அந்தாதி இலக்கியங்கள் காணக்கிடைக்கின்றன.

1. அற்புதத் திருவந்தாதி – காரைக்காலம்மையார்.
2. ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி – நம்பியாண்டார் நம்பி.
3. கயிலை பாதி காளத்திபாதி அந்தாதி – கபிலதேவ நாயனார்.
4. சிவபெருமான் திருவந்தாதி – கபிலதேவ நாயனார்.
5 சிவபெருமான் திருவந்தாதி – பரணதேவ நாயனார்.
6. திருத்தொண்டர் திருவந்தாதி - நம்பியாண்டார்.
7. திருவேகம்பமுடையார் திருவந்தாதி – பட்டினத்தார்.

8. பொன் வண்ணத்தந்தாதி - சேரமான் பெருமாள் நாயனார்.

வெண்பாவிலமைந்த முதல் அந்தாதி காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி, கட்டளைக் கலித்துறையில் முதலில் அந்தாதியாத்தவர் சேரமான் பெருமாள் நாயனார். அற்புதத்திருவந்தாதி - 101 வெண்பாக்களைக் கொண்டு 'பிறந்து மொழி பயின்ற' என்று முதற்பாடலின் முதலடி தொடங்கி இறுதிப்பாடலின் இறுதியடி 'பேராத காதல் பிறந்து' என்று முடிந்துள்ளது. சான்றாக,

**''அன்றுந் திருவுருவங் காணாதே ஆட்பட்டேன்**
**இன்றுந் திருவுருவங் காண்கிலேன் - என்றுந்தான்**
**எவ்வுருவோ னும்பிரான் என்பார்கட் கென்**
**னுரைக்கேன்**
**எவ்வுருவோ நின்னுருவம் ஏது''[143]**

எனவும்,

**''ஏதொக்கும் ஏதொவ்வா தேதாகும் ஏதாகா**
**தேதொக்கும் என்பதனை யாரறிவார் - பூதப்பால்**
**வில்வேட னாகி விசயனோ டேற்றாள்**
**வல்வேட னான வடிவு''[144]**

எனவும் அமையும் இருபாடல்களிலும் அந்தாதி இணைவு அமைந்துள்ளமையை அறியமுடியும். இவ்வமைப்பினையே பதினொராந் திருமுறையின் மற்றைய அந்தாதி நூல்களும் கொண்டுள்ளன.

இவ்வனைத்து அந்தாதிகளுமே சிவபெருமானைப் புகழ்தலையே நோக்கமாகக் கொண்டுள்ளன. திருத்தொண்டர் திருவந்தாதி மட்டும் சிவனை வணங்கிய அடியார்களைப் பற்றிக் கூறுகின்றது.

**கலிவெண்பா**

கலிவெண்பா என்பது கலியோசை தழுவி ஈற்றடி வெண்பாப் போல முச்சீரடியான் வருவதான கலிவகையைக் குறிக்கின்றது "தொல்காப்பியம் கலிவெண்பாட்டைக் கலிப்பாவின் நூல் வகையுள் ஒன்றாகத் தருகின்றது. இக்கலி வகையின் பயிற்சியைச் சங்கக் கலித்தொகையில் ஓரளவே காண்கின்றோம். கலிவெண்பா அமைப்புடைய எட்டுப் பாடல்கள் அமைகின்றன. நச்சினார்க்கினியர் ஒரு பொருண்மையைக் குறித்துப் பல கொச்சகம் விரவுவன வற்றையும் கொண்டு கலிவெண்பா பலவெனக் காட்டினார்".[145]

இலக்கிய வகைகளுள் உலா, தூது, மடல் போன்ற பல கலிவெண்பா யாப்புடன் வழங்குகின்றன. எனினும் பதினோராந் திருமுறையில் நக்கீரதேவ நாயனாரின் போற்றித் திருக்கலிவெண்பாவே இவ்வகையில் அமைந்த தனிஇலக்கியமாக அமைகின்றது மாணிக்கவாசகரின் 'போறறித்திரு அகவல்' போன்றே போற்றிப் பொருண்மை அமைந்துள்ளதால் இந்நூலுக்கும் போற்றிருத்திருக் கலிவெண்பா என்ற பெயர் அமைந்துள்ளது. போற்றி எனும் சொல்லாட்சியுடன் 45 கண்ணிகளால் இந்நூல் இயன்றுள்ளது எனவே, பொருளும் யாப்பும் கலந்த நிலையில் இவ்விலக்கியத்தைப் 'போற்றித்திருக் கலிவெண்பா' எனல் சாலும்.

சிவபெருமான் உலக உயிர்களுக்கு அருள் புரிதல் வேண்டி அவ்வக்காலந்தோறும் செய்தருளிய அருட்செயல் களை எடுத்துரைத்துப் போற்றுங்கருத்துடன் நக்கீர தேவரின் இந்த இலக்கியம் அமைந்துள்ளது. இதற்கு,

"தானவர்கட் காற்றாது தன்னடைந்த நன்மைவிறல்
வானவர்கள் வேண்ட மயிலூரும் – கோனவனைச்

**சேனா பதியாகச் செம்பொன் முடிகவித்து**
**வானாள வைத்த வரம்போற்றி''[146]**

போன்ற அடிகளைச் சான்றாக்கலாம்.

**குறுந்தொகை**

''குறுந்தொகை யாப்பென்பது நாற்சீர் நாலடியாய் அடிதோறும் தேமா புளிமா என்னும் மாச்சீர்களுள் ஒன்று முதற்சீராகவும் கருவிளம், கூவிளம் என்னும விளச்சீர் களுளொன்று நான்காஞ்சீராகவும் இடையிலுள்ள இரண்டு மூன்றாஞ்சீர்கள் பெரும்பாலும் விளச்சீர்களாகவும் சிறுபான்மை மாச்சீர்களாகவும் அமையவரும் செய்யுள் விகற்பமாகும்''[147] என்று குறுந்தொகைக்கு விளக்கமளிக்கப் படுகிறது. பத்தெழுத்து முதல் பதினான்கெழுத்தளவும் பெற்று வரும் அளவடியாகிய நாற்சீரடியுள் பதினொன்றும் பன்னிரண்டுமாகக் குறைந்த எழுத்துகளைப் பெற்று வருவன குறுந்தொகை எனும் பெயர் பெறுதற்குரியன என்றும் கூடக் குறிக்கப்படுகின்றது.

ஐந்தாந்திருமுறையாகிய அப்பர் தேவாரம் முழுமையும் இக்குறுந்தொகைப் பாடல்களாகவே அமைந்துள்ளது. 'அன்னம் பாலிக்குந் தில்லைச் சிற்றம்பலம்' எனவரும் கோயில் திருக்குறுந்தொகை முதலாக 'வேதநாயகன்' என்ற முதற்குறிப்புடைய ஆதிபுராணத் திருக்குறுந் தொகை ஈறாகவுள்ள நூறு திருப்பதிகங்களின் தொகுதி ஐந்தாந்திருமுறையென வழங்கப்படுகிறது. சிலப்பதிகார வேட்டுவவரி இக்குறுந்தொகை யாப்பிற்கு அடித்தளம் அமைத்துள்ளதென்றும் அதைப்பின்பற்றியே அப்பர் இப் பதிகங்களை யாத்தார் என்றும்கூடக் கருதுவாருண்டு.

இறைவனைப்பாடி, போற்றித் துதித்துப் பரவும் நிலையில் அமைகின்றமையால் இக்குறுந்தொகைக்குத்

'திரு' என்னும் அடையமைந்து 'திருக்குறுந்தொகை' என்றாகியுள்ளது.

"அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே'[148]

இப்பாடல் திருக்குறுந்தொகைக்கு ஒரு சான்று.

அப்பர், இறைத்தலங்கள் ஒன்றிலிருந்து மற்றொன்றிக்குச் செல்லும் போதும் அக்கோயில்களில் உழவாரத் தொண்டு முதலியவற்றைச் செய்யும் போதும் இறைவனை முன்னிலையாக்கிப் போற்றும் நிலையிலும் அவன் புகழை மக்களுக்கு எடுத்துரைக்கும் நிலையிலும் பாடிப் பரவுதற் கேற்ற சந்தமாக இத்திருக்குறுந்தொகை அமைந்துள்ளது.

'தொகை' என்னும் பகுதியில் இத்திருக்குறுந்தொகை குறித்தும் பேசப்பட்டுள்ளது. இது பொருள் நிலையால் பாகுபடுவனவற்றில் ஒருவகையாக அமையும் 'தொகை'யில் குறிப்பிடப்பெற்றுள்ளது.

**திருத்தாண்டகம்**

அறுசீராலும் எண்சீராலும் ஆடவரையோ கடவுளரையோ புகழ்ந்து பாடும் இயல்பில் அமைவது தாண்டகமாகும். இவை முறையே அறுசீர்வரப்பாடப்படுவன குறுந்தாண்டகம், எண்சீர் வரப்பாடப்படுவன- நெடுந்தாண்டகம் என்றும் வழங்கப்படும். 'தாண்டகம்' எனும் சொல் இருபத்தாறு எழுத்தின் மிக்க அடியான் வரும் அளவழித் தாண்டகம், அளவியற் தாண்டகம் என்ற இரு பகுப்பினையுடைய பாக்கள், அறுசீராலேனும் எண்சீராலேனும் இயன்ற ஒத்த நான்கடி கொண்ட செய்யுள்களுடையதும் கடவுளரைப் புகழ்வதுமான பிரபந்தம் ஆகியவற்றைக்

குறிக்கும்''[149] என்றும் குறிப்பிடுவர். பன்னிரு பாட்டியல் தாண்டகத்தின் இலக்கணத்தைக் கூறுகின்றது.

திருநாவுக்கரசரின் திருமுறையான ஆறாந்திருமுறை முழுவதுமே திருத்தாண்டகப்பாடல்கள் அமைந்துள்ளன. முதன் முதலில் தாண்டக அமைப்பில் பாடியவர் அப்பரே யாவார். அதனாலேயே இவர் 'தாண்டகவேந்தர்' என்று சிறப்பிக்கப் பெறுகின்றார். இவ்வகையில் 215-313 வரை யமைந்த மொத்தம் 99 பதிகங்கள் அமைந்துள்ளன. இவை யனைத்தும் எண்சீர்களைக் கொண்டனவாகவும் தன்னுணர்ச்சியை வெளிப்படுத்துவனவாகவும் உள்ளன.

'தாண்டகம்' என்பது தமிழிலக்கணம் பற்றி வந்த செய்யுளன்று. வடமொழி இலக்கணம் பற்றிவந்த செய்யுளாகும் என்றொரு கருத்தும் காணப்படுகின்றது. எப்படியிருப்பினும் முதன்முதலில் இவ்வகையில் இலக்கியம் படைத்ததோடு தமிழுக்குரிய யாப்பு வடிவம்போலவே இதனை அமைத்து அதன்வழித் 'தாண்டகவேந்தர்' என்ற பட்டத்தையும் பெற்று அப்பர் விளங்குவதை மறுத்தல் இயலாது.

**நாமார்க்குங் குடியல்லோம் நமனை அஞ்சோம்**
**நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்**
**ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்**
**இன்பமே எந்நாளுந் துன்பம் இல்லை**
**தாமார்க்குங் குடிஅல்லாத் தன்மை ஆன**
**சங்க ரன்நற் சங்கவெண் குழைஓர் காதின்**
**கோமாற்கே, நாமென்றும் மீளாஆளாய்க்**
**கொய்ம்மலர்ச் சேவடி இணையேகுறுகி னோமே.**[150]

என்பது சான்றுக்கொன்றாகும்.

**திருநேரிசை**

"நேரிசை என்னும் இப்பெயர் அறுசீர்க் கட்டளையடியால் அமைந்த யாப்பினைக் குறிப்பதுடன் அதனைப் பாடுதற்கமைந்த சுத்தாங்கமாகிய இசையமைப்பினையும் புலப்படுத்தும் முறையில் அமைந்துள்ளது... வண்டுகள் நாறு மலர்களில் மகரந்தப் பொடியையும் தேனையும் மாந்தி அம்மலர்களிற் படிந்து இடையூடின்றி முரல்வது போலும் நேரிசை இசையமைந்த திருப்பாடல்களைக் கொண்டுள்ளமையால் இப்பெயர் பெற்றது"[151] என்று குறிப்பிடுவர்.

ஆனால் தேவாரங்கள் அனைத்துமே இசையுடன் பாடப்படும் இயல்புடையவை. அப்படியிருக்க ஏனைய பெயரில் அமைந்த இலக்கிய வகைகளுக்கு இசையோடு தொடர்புறுத்தாமல் 'நேரிசை'யை மட்டும் 'இசை' என்ற சொல் ஈற்றில் உள்ளமையால் இசையுடன் தொடர்புபடுத்துகின்றனரோ எனத் தோன்றுகின்றது. இவ்வகையை இசைப்பாடல் அடிப்படையில் அமைத்துப் பெயர்ப் பொருத்தம் பார்ப்பதைவிடவும் யாப்பின் பெயரால் அமைத்துக் கொள்வது பொருத்தமெனலாம்.

தேவாரத்தில் வருகின்ற இத்திருநேரிசை யாப்பும் திவ்யபிரபந்தத்தில் வருகின்ற திருக்குறுந்தாண்டக யாப்பும் ஒன்றுபோலவே இருப்பதாகக் குறிப்பர். இத்திருநேரிசையானது அறுசீர் ஆசிரிய விருத்தத்தால் இயன்றுள்ளது. அப்பரின் நான்காந் திருமுறையில் 22 முதல் 79 வரையுள்ள பதிகங்கள் நேரிசை யாப்பில் அமைந்துள்ளன.

**"கண்டவா திரிந்து நாளும்**
**கருத்தினால் நின்தன் பாதம்**
**கொண்டி ருந்தாடிப் பாடிக்**
**கூடுவன்றுகுறிப் பினாலே**

**வண்டு பண்பாடும் சோலை**
**மல்கு சிற்றம் பலத்தே**
**எண்டிசை யோரும் ஏத்த**
**இறைவர் ஆடும் ஆறே''[152]**

என்ற அமைப்பிலேயே பிறபாடல்களும் இடம் பெற்றுள்ளன.

## திருமுக்கால்

பாடலின் இரண்டாமடியும் நான்காமடியும் மூன்று சீரால் அமைய முதல், மூன்றாம் அடிகள் நாற்சீரால் அமைந்து வரும் இலக்கிய வகைக்குத் திருமுக்கால் என்ற பெயர் அமைகின்றது. இவ்வகையில் சம்பந்தர் தேவாரத்தில் 6 பதிகங்கள் உள்ளன. (352, 353, 354, 355, 356, 357). இப்பாடல்கள் திருவெங்குரு, திருஇன்னம்பர், திருநெல் வெண்ணெய், திருச்சிறுகுடி, திருவீழிமிழலை, திருமுதுக் குன்றம் ஆகிய தலங்களில் பாடியனவாக உள்ளன.

**''விண்ணவர் தொழுதெழு வெங்குரு மேவிய**
**சுண்ணவெண் பொடியணி வீரே**
**சுண்ணவெண் பொடியணி வீரும தொழுகழல்**
**எண்ணவல் லாரிட ரிலரே''[153]**

இந்த அமைப்பிலேயே பிறபாடல்களும் பாடப்பட்டுள்ளன.

## திருவிருத்தம்

விருத்தம் எனும் இச்சொல் வட்டம், சொக்கட்டான் ஆட்டத்தில் விழும் தாயவகை, தொடர்ச்சியாக விழும் தாயவகையான விருத்தி, பாவினம் மூன்றுள் ஒன்று, ஒழுக்கம், தொழில், வெள்ளெருக்கு, மக்கட்பருவம் ஆறனுள் ஒன்றான மூப்பு, முரண், விரோதம், குற்றம், இடையூறு, கூட்டம் என்பன போன்ற பல பொருள்களைக் கொண்டதாகும்.

இங்கு யாப்பினாலேயே இப்பெயர் அமைக்கப் பட்டுள்ளது. இப்பெயரில் பல இலக்கியங்கள் தோற்றம்

பெற்றுள்ளன. பாவினங்களுள் ஒன்றாகிய இவ்விருத்தம் பற்றிய எண்ணம் தொல்காப்பியருக்குப் பின்னரே தமிழில் வழங்குகின்றது இவ்விருத்தத்தினை இலக்கியப் பெயராக்கி யுரைக்கும் திருமுறை இலக்கியச் சான்றுகளாகத் திருநாவுக்கரசரின் பல பதிகங்கள் இப்பெயரில் அமைகின்றன. பதினோராந் திருமுறையின் கோயில் திருப்பண்ணியர் விருத்தம், ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம் ஆகியனவும் குறிக்கத்தக்கன "அப்பரடிகள் அருளிய திருப்பதிகங்களில் திருவிருத்தம் என்பது இக்காலத்தில் கட்டளைக் கலித்துறை என்ற பெயரால் வழங்கப்பெறும் யாப்பாகும்... தொல்காப்பியர் கருத்துப்படி இது ஐஞ்சீர் நான்கடியான்வந்த தரவு கொச்சகம் என்றும் கூறப்படும்"[154] என்று இதன் இலக்கணத்தை வரையறுப்பர்.

அப்பரின் பதிகங்களில் 80 - 113 வரையுள்ள 33 பதிகங்கள் விருத்தயாப்பால் பாடப்பட்டுள்ளன.

> 'குனித்த புருவமும் கொவ்வைச்செவ்
> வாயில் குமிண்சிரிப்பும்
> பனித்த சடையும் பவளம்போல்
> மேனியில் பால்வெண்ணீறும்
> இனித்த முடைய எடுத்தபொற்
> பாதமும் காணப்பெற்றால்
> மனி(த்)தப் பிறவியும் வேண்டுவ
> தேயிந்தமா நிலத்தே'[155]

இவ்வாறே ஏனைய பதிகப் பாடல்களும் அமைகின்றன. விருத்தம் கம்பரால் புகழ் பெற்றமையினையும இவண் கருதுதல் வேண்டும்.

**கோயில் திருப்பண்ணியர் விருத்தம்**

"சிவனெறிச் செல்வர்களாற் கோயில் எனச் சிறப்பித்துப் போற்றப்பெறும் பெரும்பற்றப் புலியூராகிய

தில்லைச் சிற்றம்பலத்திலே எழுந்தருளியுள்ள கூத்தப் பெருமானைப் போற்றும் கட்டளைக் கலித்துறையாகிய திருவிருத்தங்களால் இயன்ற பனுவல் ஆதலின் இது கோயிற் திருப்பண்ணியர் விருத்தம் என யாப்பினாற் பெயர் பெறுவதாயிற்று''[156]. எழுபது கட்டளைக் கலித்துறை களால் இயன்று, அந்தாதி அமைப்புடையனவாய் இப் பாடல்கள் அமைந்துள்ளன.

### ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம்

இது பதினொரு பாடல்களைக் கொண்ட பதிகமாகும். பதினோராம் பாடல் முதல் பத்துப் பாடல்களுக்கும் அடிவரவாக அமைகின்றது. 'சண்பை' என்பது சீகாழியைக் குறிக்கும் 12 பெயர்களுள் ஒன்றாகும். சம்பந்தரின் அற்புதச் செயல்களையும் தமிழ்ப்பாடல்களையும் பற்றி இப்பாடல்கள் அமைகின்ற காரணத்தினால், இது, 'ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம்' என்று பெயர் பெற்றுள்ளது. 'சண்பையர் காவலன் சம்பந்தனே' என்றமைந்து கட்டளைக் கலித்துறையால் முடிந்துள்ளமை யாலும் இப்பெயர் அமைந்திருக்க வாய்ப்புண்டு.

### வெண்பா

வெண்பா, நால்வகைப் பாக்களுள் ஒன்றாகும். தொல் காப்பியம் வெண்பாவை ஒரு பாவகையாகக் கொண்டு இலக்கணம் வகுத்ததோடு நெடுவெண்பாட்டு, குறுவெண் பாட்டு என அடிவரையறை வகைகளையும் தந்துள்ளது. சங்க இலக்கியம் தனிவெண்பாக்களைத் தரவில்லை. பத்துப்பாட்டுள் சிலவற்றின் ஈற்றைத் தொடர்ந்தமைந்த வெண்பாக்கள் பிற்காலத்தனவாகக் கருதப்படுகின்றன. கலித்தொகையின் இடை நிலைப்பாட்டும், பரிபாடலின் இடையேயுள்ள கொச்சகமும் வெண்பாவுமாக அமைந்து காணப்படுகின்றன. சிலம்பில் காதைகள் சிலவற்றின் ஈற்றிலும் வெண்பாக்கள் உள்ளன.

"சங்கம் மருவிய காலமான பதினெண்கீழ்க்கணக்குக் காலம் வெண்பாவைத் தனி இலக்கிய வடிவாகத் தருகின்றது. எனினும் இலக்கியப் பெயராகத் 'திருக்குறள்' என்பதிலேயே ஓரளவேனும் வருகின்றது. முழுநிலையில் பதினொராந் திருமுறையின் ஐயடிகள் காடவர்கோன் பாடிய க்ஷேத்திரத் திருவெண்பா, மாணிக்கவாசகரின் திருவெண்பா ஆகியவற்றைச் சுட்டலாம்"[157].

## மாணிக்கவாசகரின் திருவெண்பா

"திருவாதவூரடிகள் தாம்பெற்ற சிந்தையின் நிறைவாகிய சிவமே பெறுந்திருவினை, பெறாத ஏனையோரும் பெற்று மகிழுமாறு விளங்க அறிவுறுத்தும் அழகிய வெண்பாக்களாலாய பனுவலாதலின், இது திருவெண்பா என்னும் பெயர்த்தாயிற்று அறிவினாற் சிவனேயாகிய மணிவாசகப் பெருந்தகையின் சிவமாந்தன்மைப் பெருவாழ்வினைத் தெரிவிப்பதுபற்றி இதற்கு 'அணைந்தோர் தன்மை' என முன்னோர் கருத்துரை வரைந்தனர்"[158] திருவெண்பா என்னும் இப்பனுவல் பதினொரு வெண்பாக்களையுடையதாக அமைந்துள்ளது.

## க்ஷேத்திரத் திருவெண்பா

தில்லைத் திருச்சிற்றம்பலம் முதலாகவுள்ள சிவாலயங்கள் பலவற்றையும் நேரில் கண்டு வணங்கி ஒவ்வொரு திருத்தலத்தினையும் ஒவ்வொரு வெண்பாவினாற் பாடிப் போற்றினர் என்பது வரலாறு. இவ்வாறு ஐயடிகள் சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் திருத்தலங்களைப் போற்றிப் பரவிய இனிய தமிழ் வெண்பாக்களின் தொகுதியே க்ஷேத்திரத் திருவெண்பா என்ற சிற்றிலக்கியமாகும். இவ்வகையில் 24 வெண்பாக்கள் கிடைத்துள்ளன. இதனை ஊர் வெண்பா என்ற சிற்றிலக்கிய வகையிலும் அடக்கிக் கூறுவர்.

"குந்தி நடந்து குனிந்தொருகை கோலூன்றி
நொந்திருமி ஏங்கி நுரைத்தேறி – வந்துந்தி
ஐயாறு வாயாறு பாயாமுன் நெஞ்சமே
ஐயாறு வாயால் அழை"[159]

க்ஷேத்திரத் திருவெண்பாவாகிய இப்பிரபந்தத் திலமைந்த பாடல்கள் ஒவ்வொன்றும் ஐயடிகளின் உலக அனுபவத்தையும் அதனால் அவர்பெற்ற மெய்யுணர்வினை யும் ஒருங்கே விளக்குவனவாக அமைந்துள்ளன. வெண்பாப் பெயரில் அமைந்த நூல்களே தற்போது குறள்வெண்பா, சந்தவெண்பா, சிலேடை வெண்பா, நிரோட்டகவெண்பா எனப்பல வகையாகி வகை பல கிளையாகி இன்றும் பல்கிப் பெருகி வருகின்றன.

**மேல்வைப்பு**

மேல்வைப்பு, ஒரு பாவகையாகவும், இலக்கியவகை யாகவும் அமைகின்றது. தொல்காப்பியம் 'வைப்பு' எனும் சொல்லைக்கலியின் இறுதியுறுப்பாகிய சுரிதகத்தைக் குறிக்கப் பயன்படுத்தியது. மேல்வைப்பு எனும் யாப்பு வகை, பக்திக்காலத்தில் முகிழ்த்த புதுவடிவமாகும். இவ் வகையில் சம்பந்தர் தேவாரம் ஈரடிமேல்வைப்பு, நான்கடி மேல்வைப்பு எனும் இரு பிரிவுகளைக் கொண்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**ஈரடிமேல்வைப்பு**

இரண்டடிப் பாடல்களுக்குமேல் இரண்டடிகளை வைத்துப்பாடுவது ஈரடிமேல் வைப்பு எனப்படும். இவ்வாறு மேல் வைக்கப்படும் அடிகள் அப்பதிகத்தின் அனைத்துப் பாடலிலும் ஒன்றாகவே அமைதலும் ஞானசம்பந்தர் பாடல்களில் மட்டும் இவ்வமைப்புக் காணப்படுதலும் குறிக்கத்தக்கதாகும். மூன்றாந்திருமுறையில் 5, 6 ஆம்

பதிகங்கள் இவ்வீரடி மேல்வைப்பு யாப்பமைப்பில் அடங்குவனவாக உள்ளன.

**''தக்கன் வேள்வி தகர்த்தவன் பூந்தராய்**
**மிக்க செம்மை விமலன், வியன்கழல்**
**சென்று சிந்தையில் வைக்க மெய்க்கதி**
**நன்றது ஆகிய நம்பன் தானே.'**[160]

இதைத் தொடர்ந்து வரும் பாடல்களின் மேல் வைக்கப் படும் அடிகள் வேறு வேறாக அமைகின்றன.

**நாலடி மேல்வைப்பு**

நாலடிச் செய்யுளைத் தொடர்ந்து இரண்டடிகள் வைக்கப்படும் அமைப்பிற்கு நாலடி மேல்வைப்பு என்று பெயர். சம்பந்தர் தேவாரம் தவிர, திவ்ய பிரபந்தத்திலும் இவ்வமைப்புக் காணப்படுகின்றது. இவ்வகையில் 3, 4 ஆம் பதிகங்கள் நாலடி மேல்வைப்பாக அமைந்துள்ளன.

**''இயலிசை எனும் பொருளின் திறமாம்**
**புயலன மிடறு உடைப் புண்ணியனே!**
**கயலன வரிநெடுங் கண்ணி யொடும்**
**அயலுல கடிதொழ அமர்ந் தவனே!**
**கலனாவது வெண்தலை கடிபொழில் புகலிதன்னுள்**
**நிலன்நாள் தொறும்இன்புற நிறைமதி அருளினனே''**[161]

இம்மேல்வைப்பு இருவகைகளிலும் அமைந்து எந்த வரையறைக்குள்ளும் அடங்காது நிற்கின்றது.

**வழிமொழித் திருவிராகம்**

சம்பந்தரின் பதிகமொன்றின் தலைப்பில் காணப்படும் இதனையும் ஓர் இலக்கிய வகையாக்கியுரைப்பர். 325 ஆம் பதிகமான சம்பந்தரின் திருப்பிரமபுரப் பதிகம் இவ்வகையில் அமைந்துள்ளது.

"சுரருலகு நரர்கள்பயில் தரணிதலம்
முரணழிய அரணமதில்முப்
புரமெரிய விரவுவகை சரவிசைகொள்
கரமுடைய பரமனிடமாம்
வரமருள வரன்முறையி னிரைநிறைகொள்
வருசுருதி சிரவுரையினாற்
பிரமனுயர் அரனெழில்கொள் சரணவிணை
பரவவளர் பிரமபுரமே"[162]

இதில் பிரமபுரம் எனும்பெயர் அமையச்சீர்கள் தோறும் எதுகை அமைந்து வழிமொழிதலைக் காணமுடியும். இராகம் என்பது இசையாகும் இவ்வாறு சீர்கள் தோறும் எதுகை அமைந்து இசையுடன் வழிமொழிந்து வருவதால் இதற்கு இப்பெயர் அமைந்துள்ளதுபோலும். இங்ஙனம் திருமுறைகளில் யாப்பு, பொருள், வடிவம் இவற்றைக் கொண்டும் கொள்ளாதும் இலக்கியப் பெயர்கள் அமைந்து உள்ளன. இவற்றுள் பெரும்பான்மைப் பாக்கள் சம்பந்தர் தேவாரத்தில் அமைந்துள்ளன.

**யாப்பால் பெயர் பெற்றவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்த முடியும்:**

**1. முன்னரே இருந்த யாப்பு வடிவங்கள், இனங்கள் இவற்றின் பெயராலும் ஓரிலக்கியத்தின் பெயராலும் தோற்றம் கொண்டு அப்பெயரையும் கொண்டு அமையும் இலக்கியங்கள்:**

*அகவல், அந்தாதி, கலிவெண்பா, குறுந்தொகை, நேரிசை, வெண்பா.*

**2. புதிதாகத் தோன்றியவை;**

*தாண்டகம், திருமுக்கால், திருவிருத்தம். மேல்வைப்பு–ஈரடிமேல்வைப்பு, நாலடிமேல் வைப்பு, வடமொழித் திருவிராகம்.*

# பகுதி-1 - குறிப்புகள்

1. வை. இரத்தினசபாபதி, திருமுறைப் பெருமை-ப.1
2. முத்துச்சண்முகன், நிர்மலாமோகன் - சிற்றிலக்கியங் களின் தோற்றமும் வகையும், பக்.4, 5.
3. மேலது, மேற்கோள், பக்-3,4.
4. இரா. இளங்குமரன்-இலக்கியவகை அகராதி, ப. 9.
5. ச.வே. சுப்பிரமணியன் - இலக்கிய வகையும் வடிவும், ப. 294.
6. மேலது, ப. 295.
7. ம.சா. அறிவுடைநம்பி, திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள், மேற்கோள், ப. 242.
8. திருக்கோவையார் - பாடல் - 11.
9. போற்றித்திருஅகவல் - வரிகள். 37-41.
10. திருவண்டப் பகுதி-வரிகள். 20-26
11. மேலது, வரி. 29.
12. பிரபந்தத்திரட்டு நூற்பா-39.
13. ச.வே. சுப்பிரயணியன், முற்சுட்டியநூல். ப. 307.
14. க. வெள்ளைவாரணன், பன்னிருதிருமுறை வரலாறு இரண்டாம் பகுதி. பக். 860-861.
15. ச. வெ. சுப்பிரமணியன், முற்சுட்டிய நூல். ப. 124.
16. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல். ப. 137.
17. திருவாசகம், திருவம்மானை, பாடல்-3,

18. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 10ஆம் நூற்றாண்டு, ப. 427.

19. திருவிசைப்பா - திருமாளிகைத்தேவர், கோயில் பதிகம்-1, பாடல்-1.

20. சுந்தரர் தேவாரம் ஏழாந்திருமுறை, 22ஆம் பதிகம், பாடல்-3.

21. மேலது, பதிகம், 30, பாடல்-3.

22. மேலது, பதிகம், 34, பாடல்-1.

23. திருவாசகம், யாத்திரைப்பத்து, பாடல்-2.

24. இரா. இளங்குமரன், முற்சுட்டியநூல்-ப. 47.

25. தொல்காப்பிய நூற்பா-1029.

26. மா.சா. அறிவுடைநம்பி, முற்சுட்டியநூல், - ப 243.

27. ச.வே. சுப்பிரமணியன்-முற்சுட்டியநூல், ப. 91.

28. திருக்கைலாய ஞானவுலா, வரிகள், 56-61,

26. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல். ப. 1004.

30. ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம், வரிகள் 30-34.

31. சம்பந்தர் தேவாரம் திருநீற்றுப்பதிகம், பாடல்-3

32. மேலது, கோளறுதிருப்பதிகம் பாடல்-1.

33. அ. அறிவுநம்பி, தமிழரின் வழிபாட்டுச் சிந்தனைகள், பக். 77-78,

34. ச.வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல், ப. 347.

35. மேலது.

36. மேலது. 348.

37. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 282.

38. திருக்கோவையார், பாடல்-1.

39. பதினோராந்திருமுறை, திருவாலவாயிறைவர் சீட்டுக்கவி, வரிகள், 8-12.

40. தொல்காப்பிய நூற்பா, 1571

41. திருவாசகம் திருத்தசாங்கம், வரிகள், 37-41.

42. சம்பந்தர்தேவாரம், 321 ஆம் பதிகம், பாடல்-4.

43. அப்பர் தேவாரம், திருப்பழனப்பதிகம், பாடல்-1.

44. சுந்தரர் தேவாரம்-பதிகம்-37, பா. 2

45 ச.வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல், ப. 371.

46. நக்கீரதேவநாயனார்-பெருந்தேவபாணி, வரிகள்-50-52.

47. நவநீதப்பாட்டியல், நூற்பா, 66.

48. நம்பியாண்டாரின் ஆளுடையபிள்ளையார் திருத்தொகை, வரிகள்-16-17.

50 ச வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல், ப. 384.

51. க. வெள்ளைவாரணன்-முற்சுட்டியநூல், ப. 442.

52. சேந்தனார் திருப்பல்லாண்டு-பாடல்-1.

53. இரா. இளங்குமரன்-முற்சுட்டியநூல், பக். 145, 146.

54. க. வெள்ளைவாரணன்-முற்சுட்டியநூல், ப. 126,

55. மாணிக்கவாசகர் திருப்பள்ளியெழுச்சி, பாடல்-1.

56. அப்பர். கோயில்திருப்பதிகம், பாடல்-2.

57, திருவாலியமுதனார், ஏழாந்திருவிசைப்பா. – பதிகம், 1 பாடல்-1.

58. மேலது, பாடல்-2

59. திருமாளிகைத்தேவர், முதல்திருவிசைப்பா, பதிகம்-2, பாடல்-6.

60. மேலது, பாடல்-8.

61. ச.வே. சுப்பிரமணியன், முற்சுட்டிய நூல், ப. 396.
62. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 176.
63. நாராயணவேலுப்பிள்ளை, திருவாசகமும் திருவாய் மொழியும், ப. 44.
64. மாணிக்கவாசகர் திருவெம்பாவை, பாடல் 14.
65. அ. அறிவுநம்பி, தமிழர் மறந்த தமிழர் மரபுகள், ப. 20.
66. பெரியபுராணம், திருஞானசம்பந்தர் புராணம், பாடல் – 46
67. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 850.
68. நக்கீர தேவனாரயனார் – கோபப்பிரசாதம், வரிகள் – 10–13.
69. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 1062.
70. மேலது, ப. 257.
71. மாணிக்கவாசகர் திருப்புலம்பல், பாடல் – 3.
72. தொல்காப்பிய நூற்பா, 1434.
73. ச. வே. சுப்பிரமணியன். முற்சுட்டிய நூல், ப. 408.
74. திருமந்திரம், பாடல் – 3046.
75. பன்னிருபாட்டியல் நூற்பா, 250.
76. ச. வே. சுப்பிரமணியன், முற்சுட்டிய நூல், 410.
77. க. வெள்ளைவாரணன், முற்சுட்டிய நூல், பக். 264, 265.
78. மாணிக்கவாசகர் – திருவார்த்தை, பாடல் – 2.
79. மாணிக்கவாசகர் – சிவபுராணம், வரிகள் – 1, 2.
80. மேலது, வரிகள் – 11, 12.

81. மாணிக்கவாசகர் போற்றித்திருஅகவல், வரிகள் - 114, 115.
82. அப்பரின் 6 ஆந்திருமுறை, திருவாரூர்ப்பதிகம், போற்றித்திருத்தாண்டகம். பாடல் 6
83. மாணிக்கவாசகர் நீத்தல் விண்ணப்பம், பாடல் - 20.
84. மேலது, பிரார்த்தனைப்பத்து, பாடல் - 4.
85. அப்பர் 6 ஆந்திருமுறை, பதிகம், 283, பாடல் - 1.
86. ச. வே. சுப்பிரமணியம், முற்சுட்டியநூல், ப. 430
87. முத்துச்சண்முகம், நிர்மலாமோகன், முற்சுட்டியநூல், ப. 67.
88 திருஞானசம்பந்தர் பதிகம் - 127, பாடல் - 1.
89. மேலது, பதிகம் - 367, பாடல் - 1.
90. மேலது, பதிகம் - 210, பாடல் - 1.
91. இரா. இளங்குமரன், முற்சுட்டியநூல், ப. 112.
92. திருஞானசம்பந்தர் பதிகம், 206, பாடல் - 1.
93. மேலது, பதிகம் - 375, பாடல் - 1.
94. மேலது, பதிகம் - 371, பாடல் - 1.
95. மேலது, பதிகம் - 139, பாடல் - 1
96. திருநாவுக்கரசர், பதிகம் - 310, வினாவிடைத்திருத்தாண்டகம், பாடல் - 1,
97. மேலது, பாடல் - 7.
98. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 974.
99. பட்டினத்துப்பிள்ளையார் - ஒருபா ஒருபஃது, பாடல் வரிகள், 1 - 4.
100. திருஞானசம்பந்தர் பதிகம், 280, பாடல் 2.

101. நக்கீரதேவநாயனார், திருவீங்கோய்மலை எழுபது, பாடல் - 1.
102. மேலது, காரெட்டு, பாடல் - 1
103. மாணிக்கவாசகர் திருச்சதகம், பாடல் - 1.
104. மு. வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 131.
105. மாணிக்கவாசகர் திருவம்பாவை, பாடல் 13.
106. ச. வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல். பக் - 478,
107. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 205.
108 மாணிக்கவாசகர், திருவுந்தியார், பாடல் - 1.
109. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், பக். 208, 210.
110. மாணிக்கவாசகர் திருப்பொன்னூசல், பாடல் - 1.
111. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 195.
112. மாணிக்கவாசகர் திருக்கோத்தும்பி - பாடல் - 9.
113. ச. வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல், பக். 498, 499.
114. மாணிக்கவாசகர் திருச்சாழல், பாடல் - 8.
115. ச. வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல், பக். 498, 499.
116, மாணிக்கவாசகர் திருப்பொற்சுண்ணம், பாடல் - 7.
117. ச. வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல், ப. 510.
118. மேலது, ப. 493
119. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல் ப. 197.
120. மாணிக்கவாசகர். திருத்தெள்ளேணம், பாடல். 10.
121. ச. வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல், பக். 502, 503.

122. மாணிக்கவாசகர், திருத்தோணோக்கம், பாடல் - 8.
123. ச. வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல், ப. 509.
124. மாணிக்கவாசகர், திருப்பூவல்லி, பாடல்-2.
125. ச. வே. சுப்பிரமணியன், முற்சுட்டிய நூல், ப. 120.
126 இலக்கண விளக்கப்பாட்டியல், நூற்பா. 75.
127. திருநாவுக்கரசர் தேவாரம், அங்கமாலைப்பதிகம், பாடல்-1.
128. க. வெள்ளைவாரணன், முற்சுட்டிய நூல், ப. 278.
129 மாணிக்கவாசகர், ஆனந்தமாலை, பாடல்-1.
130. இலக்கண விளக்கப்பாட்டியல், நூற்பா. 69.
131. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 686.
132. காரைக்காலம்மையார் திருவிரட்டை மணிமாலை, பாடல்-1.
133. மேலது, பாடல்-2.
134 க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 1008.
135. முத்துச்சண்முகன், நிர்மலாமோகன், முற்சுட்டிய நூல், ப. 36.
136. பட்டினத்துப் பிள்ளையார், நான்மணிமாலை, பாடல்-1.
137. ச. வே. சுந்பிரமணியன், முற்சுட்டியநூல், பக் 544, 545.
138. இரா. இளங்குமரன், முற்சுட்டியநூல், ப. 18.
139. மாணிக்கவாசகர் கீர்த்தித்திருஅகவல், பாடல் வரிகள்-5-8.
140. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 689.
141. ச. வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல், ப. 547.

142. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், பக். 689, 690.
143. காரைக்காலம்மையார் அற்புதத் திருவந்தாதி, பாடல்-61.
144. மேலது, பாடல்-62.
145. ச. வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல், ப. 564.
146. நக்கீரதேவநாயனார் போற்றித் திருக்கலிவெண்பா – பாடல் வரிகள், 31–34.
147. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 416.
148. அப்பர் தேவாரம்–5, பதிகம்–115, பாடல்–1.
149. ச. வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல், ப. 572.
150. அப்பர் திருத்தாண்டகம், ஆறாந்திருமுறை, 98ஆம் பதிகம், பாடல்–1.
151. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 410.
152. அப்பர் தேவாரம், நான்காந்திருமுறை, பதிகம்–23, பாடல்–5.
153. திருஞானசம்பந்தர் பதிகம்-352, பாடல்–1.
154. க. வெள்ளைவாரணன், முற்சுட்டிய நூல், ப. 411.
155. அப்பர் நான்காந்திருமுறை பதிகம்–81, பாடல்–4.
156. க. வெள்ளைவாரணன், முற்சுட்டியநூல், ப. 983.
157. ச. வே. சுப்பிரமணியன், முற்சுட்டியநூல், ப. 582.
158. க. வெள்ளைவாரணன், முதல் பகுதி (பன்னிரு திருமுறை வரலாறு) ப. 270.
159. ஐயடிகள் காடவர்கோன், க்ஷேத்திரத்திருவெண்பா, பாடல்-3.
160. சம்பந்தர் மூன்றாந்திருமுறை, பதிகம்–5, பாடல்-1.
161. மேலது, பதிகம்–3, பாடல்–1.
162. மேலது, பதிகம்–325, பாடல்–1.

## பகுதி - 2

இயல் - 7

# திருமுறைகளில் காணலாகும் சிற்றிலக்கியக் கூறுகளுக்கான தோற்றச் சூழல்கள்

திருமுறைகள் பன்னிரண்டு என்ற தொகுப்பாய் அமையினும் அவற்றினுள் பல்வேறு வகையான சிற்றிலக்கியங்களின் கூறுகள் காணக்கிடைக்கின்றன. அவை தோன்றுவதற்குக் காலச்சூழலும் அடிப்படையாகியுள்ளது. ஒவ்வொரு இலக்கியமும் தோன்றுவதற்குத் தன்னளவில் பல்வேறு பின்புலங்களைக் கொண்டமையும். திருமுறை ஆசிரியரின் வாழ்வில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகள் அவர்களைப் பாவலர்களாக்கி இறையைப் பாடவைத்தது

உடன் பல்வேறு இலக்கிய வடிவங்களுக்கும் தோற்றம் வழங்கச் செய்துள்ளன.

அப்பர், சம்பந்தர் காலங்களில் பொதுவாகச் சமண சமயத்தின் செல்வாக்குத் தமிழரிடம் பரவி இருந்தமைக்கு வரலாற்றுச் சான்றுகள் பலவுள முதன் முதலில் வைதிகசமய மறுமலர்ச்சிக்கு வித்திட்டவர்கள் காரைக் காலம்மையாரும் முதலாழ்வார் மூவருமாவர் ஆனால், இவர்கள் காலத்தில் இல்லாத சமயக்காழ்ப்பு அப்பர், சம்பந்தர் வாழ்ந்த காலங்களில் இருந்துள்ளமைக்கு இவர்கள் இருவரின் பாடல்களுமே சான்றாய் உள்ளன. அவற்றுள்ளும் சம்பந்தர் பாடல்களில் இக்காழ்ப்பு உணர்ச்சி யானது மிகுந்து காணப்படுகின்றது. எது எப்படியிருப்பினும் பல்வகை இலக்கியத் தோற்றங்களுக்கு இவர்கள் இருவரும் வழிவகைசெய்துள்ளனர்.

மக்களைச் சைவசமயத்திற்குக் கொணடு வரவேண்டும என்று உறுதிபூண்டு செயல்பட்டதைப் போலவே சமபந்தர், அப்பர் பாடல்கள் விளங்குகின்றன. அதனாலதான் இறையுறை தலங்கள் தோறும் சென்று இவர்கள் இறைவழிபாட்டுடன் சமயப்பிரச்சாரமும் செய்துள்ளனர். இதற்குப்பின் வரும் கூற்று அரண்சேர்க்கின்றது. "சம்பந்தர் பதிகத்தின் பொருளமைப்பு தனித்தன்மையுடையதாய் விளங்குகின்றது. சம்பந்தர் தமது சைவசமயப் பிரசார நோக்கத்தின் சாதனமாகவே இவ்வாறு பதிகத்தை அமைத்திருக்கிறார் போலத்தெரிகிறது"[1].

சம்பந்தர் பாடல்கள் முன்னிரண்டடிகள் இயற்கை வருணனையாவும் பின்னிரண்டடிகள் இறைவனைப் பற்றியனவாகவும் அமைதலை மரபாகக் கொண்டுள்ளன. இயற்கை வருணனையாக அமையும் முதலிரண்டு அடிகள் அத்தலத்தின் ஊரைச் சிறப்பிக்கும் நிலையில் அமைகின்றன.

இது அவ்வூரார் மனதில் மகிழ்வைத் தோற்றுவிக்கச் சம்பந்தரால் பயன்படுத்தப்பட்டமுறை என்று குறிப்பிடுவர். "தம்பிரதேசத்தைப் பற்றிப்பிறர் புகழத்தாம் கேட்டு மகிழ்தல் என்னும் மனநிலையையே பயன்படுத்தித் தம் காரியத்தைச் சாதிக்கச் சம்பந்தர் முயல்கிறார் போலத் தெரிகிறது பிற்போக்கான பிரதேசங்களிற் போக்குவரத்து வசதிகள் குறைந்த பகுதிகளில் ஆங்காங்கு குடியிருக்கும் மக்களிடையிற் பிரதேச உணர்ச்சி மிகுந்து காணப்படும். சம்பந்தர் தமிழ்நாடு முழுவதும் சுற்றுப்பிரயாணஞ் செய்தவர் ஆதலால், இவ்வாறுள்ள பிரதேசங்கள் பலவற்றைக் கண்டிருப்பார் இவ்வாறாய்ப் பிரதேசங்களைக் குறித்து. உள்ளது விரித்தும் இல்லது புணர்த்தியும் அப்பிரதேசங்களைச் சேர்நதவரிடம் கூறினால், அவர் அகம் மிகமகிழ்நது எப்பெரிய காரியத்தையும செய்ய முனைநது நிற்றலை இன்றுங்காணலாம. பிரதேச உணர்ச்சியைப் பயன்படுததிச் சைவ சமய மறுமலர்ச்சியில் மக்களை முன்நின்று உழைக்கச் செய்யச் சம்பந்தர் இந்த முறையைக் கையாண்டிருக்கிறார் போலத்தெரிகிறது"[2]. இப்பிரதேச உணர்ச்சி சம்பந்தருக்கும் இருந்துள்ளது என்பதை அறிய அவருடைய திருப்பிரமபுரப்பதிகம், சீர்காழிப்பதிகம் போனறவை உதகிவுன்றன. இதற்கான சான்றுகள் அப்பதிகங்களில் காணப்பெறுகின்றன.

சமண பௌத்த சமயங்கள் துறவறத்தை வற்புறுத்திய காலத்தில் அப்பரும், சம்பந்தரும் தத்தம் பாடல்களின் வழி நாயக – நாயகி பாவத்தைத் தம் பாடல்கூறும் முறையாகக் கொண்டு பாடலாயினர். இப்பாவத்தைப் பொறுத்தவரையில் ஆழ்வார் பாடல்களிலேயே இக்கூறு மிகுதி என்பர். நாயன்மார்களின் பாடல்களிலும் இவை பயின்றுள்ளமையே இங்குச் சுட்டப்படுகின்றது. மேலும் இரங்கல், உலா, தூது போன்ற அகஇலக்கியக்கூறுகள்

இவர்கள் பாடல்களில் படிந்துள்ளமையும் கருதப்படும். இவர்களின் முக்கிய நோக்கமே இல்லறத்தை வற்புறுத்து வதன்மூலம் சமண, பௌத்த சமயங்களின் கொள்கையான துறவறத்தை எதிர்ப்பதே ஆகும். இதன்மூலம் சைவம் தழைத்தோங்க உழைத்துள்ளனர் இருவரும்.

அப்பர் தம் பாடல்கள் சமயஞ்சார்ந்த அறக்கருத்து களைக் கூறுவனவாக அமைகின்றன. "அறநூல்கள் அனைத்தும் சமயச சார்புடன் அமைந்து முன்பும், சமய நூல்களிலும் அறக்கருத்து இணைவுண்டது இங்கும் பொருந்துகின்றன. சமண சமயச் சார்பு காரணமாக, இவ்வறமுணர்த்தும் பண்பு இவரிடம் ஏற்பட்டிருக்கலாம். நிலையாமை பற்றிய பண்டைக் கருத்து இவரிடம் தொடர்கின்றது. நிலையற்ற உலகிலிருநது மக்களை உய்விப்பது இறைவன் திருவருளே எனவும் பற்றற்றினைப் பற்றுதலே வழி எனவும் சுட்டுகின்றார்"[3].

கவச இலக்கியம் என்ற பிற்கால இலக்கிய வளர்ச்சிக்கு வித்திட்டுள்ள சம்பந்தர் தம் பாடலில் இறைவனின் அருட்கருணைத் திறத்தைத் தெளிவாக உணர்த்தி நிற்கின்றார். மதுரையில் சைனர்களோடு வாதிடச் சம்பந்தர் புறப்பட, அந்நாள் சோதிடத்தின்படி நல்ல நாளாக இல்லை, என்று கூறி உடன் இருந்தவர் அவர் பயணத்தைத் தடைசெய்ய முயல, அதற்குச் சம்பந்தர் கூறும் பாடல் கவச இலக்கியத்திற்கு மட்டுமல்லாது மூட நம்பிக்கையை வேரறுப்பதாகவும் உள்ளது. 'வேயுறு தோளி பங்கன்' என்று தொடங்கும் கோளறுதிருப்பதிகம் மிகச் சிறப்புடைய ஒன்றாக இன்றளவிலும் கருதப்பட்டு வருகின்றது. சம்பந்தரின் பாடல்களின் பின்புலங்கள் தனித் தனியே சுட்டத்தக்கன.

சமணசமயத்திருந்த அப்பர், சூலைநோயின் காரண மாகவே சைவத்திற்கு மாறியவர். தமக்கேற்பட்ட சூலை

நோய் தீர்தல் வேண்டி இறைவனைச் சிவனை நினைந்து பாடிய பாடல் அடங்கிய பதிகமும் கவச இலக்கியத்திற்குத் தோற்றுவாயமைத்துள்ளது. 'கூற்றாயினவாறு விலக்ககலீர்' என்று தொடங்கிப் பத்துப்பாடல்களைக் கொண்டதாக அப்பதிகம் அமைந்துள்ளது. குறுந்தொகை என்ற இலக்கிய வடிவம் அப்பரால் திருமுறைகளில் படைக்கப்பட்டுள்ளது. ஐந்தாந்திருமுறை முழுதும் இக்குறுந்தொகை வகையிலேயே அமைந்துள்ளது. இஃது அவரது சிறப்பையும் அவ்விலக்கியச் சிறப்பையும் உணர்த்தவல்லது.

அப்பர் சைவசமயத்திற்கு மாறியபின்பு அவர் மீது பகைமை கொண்ட சமணர்கள் மன்னரிடம் சென்று 'சைவத்தில் சேர்ந்து நம் சமயத்தை அழித்தார் அப்பர்' என்று கூற அதுகேட்டு மன்னன் கோபமுற்று, அவரை நீற்றறையினுள் வைப்ப அந்நிலையில் அவர் பாடியபதிகம் 'மாசில் வீணையும் மாலை மதியமும்' என்று தொடங்கிப் பத்துப் பாடல்களைக் கொண்டுள்ளது. அப்பர் சில புதுமைகளையும் செய்துள்ளார் புதிய யாப்பு வடிவத்தைக் கொண்டு இலக்கியம படைத்தது மட்டுமல்லாமல் இலக்கிய மரபிலும் புதுமை செய்துள்ளார். தூது விடுக்கும் அகமரபைத் தமபாடல்களில கையாணடுள்ள இவர் அஃறிணையை மட்டுமல்லாது உயர்திணையாகிய தம் தோழியையும் தலைவி தூது விடுப்பதாகப்படைத்துள்ளார். திருவலம்புரப் பதிகமதில் உலா வரும் தலைவனைக் கண்டு காதல் கொண்ட தலைவியின் கூற்றுகளை இவர் படைத்துள்ளார். மேலும், "இப்பதிகத்தில் தலைவியும் உரையாடுவதாக உலா இலக்கியத்தில் இல்லாத ஒரு புதுமையைத் திருநாவுக்கரசர் படைத்துள்ளார்"[4] என்பதனையும் உணரமுடியும் இவ்வாறே திருத்தாண்டக யாப்பையும் புதுமையாகப் படைத்துப் பெயர் பெற்றுள்ளார். இத்தாண்டகத்தைப் பயன்படுத்திப் பல்வேறு செய்தி

களையும் தந்து செல்கின்றார் அப்பர். இவற்றுள் இறைவனின் திருவுருவத்தைப்பாடும் திறன் போற்றத்தக்கதாகவும் கூறத்தக்கதாகவும் அமைகின்றது. ஒரே ஊரில் உள்ள இருகோயில்களில் அமையும் ஒரே மூர்த்தத்தை இறுவேறு பட்ட நிலையில் அப்பர் படைத்துத் தருகின்றார்.

திருவெண்காட்டுப்பதிகம், திருவலம்புரப் பதிகம் ஆகிய இரண்டிலும இறைவனின் பிட்சாடனக் கோலத்தைத் தருகின்றார் அப்பர். "வெண்காட்டிய பிட்சானன் கோயிலிலிருந்து தெரு வழியே வெளிப்பட்ட செய்தியே பரக்கப் பேசப்படுகிறது, திருவெண்காட்டுத்திருத்தாண்டகத்தில். வலம்புரப் பதியத்தில் வீதியிலின்றும் கோயில் புக்க செய்தியே யாசுரந்தோறும் கூறப்படுகின்றது. இரு தலத்திற்கும் ஒருவகை யாப்பாகவே பாடல்கள் அமைந்திருப்பதையும் இச்சந்தர்ப்பத்தில் மனங்கொள்ளல் பயனுடையதாகும்... வெண்காட்டில் ஆன்மாக்களின் ஆணவத்தை இரந்து வெற்றி கொள்வான். வெளிப்பட்டான் இறைவன். இங்கே "ஆன்மாக்கள் அனைத்தும், 'எல்லாம் பணிந்து' (முழுவதும் அடங்கி) வணங்கித்தன் பின்னே நடக்க, வெற்றி கொண்டு 'வலம்புரமே' புகுநது அங்கேயே நிலைபெற்று விடுகின்றான்" என்கிறார் அப்பர்"[5] என்று கூறப்படுகின்றது. ஒரே யாப்பில் இருபாடல்களில் ஒரே செய்தியை இருநிலைகளில் அப்பர் தருகின்றதனையும் இதன் வழி உணரமுடியும்.

சுந்தரர்தம் பாடல்கள் இறைவனோடு நட்புரிமை பூண்ட தன்மையை எடுத்துரைப்பனவாக அமைந்துள்ளன. சம்பந்தர் அப்பர் பாடல்களில் 'சிவனை'த் தவிர மற்றையோருக்கு இடமில்லை. சிவனது சிறப்பு எடுத்துக் கூறப்படும் நிலையில் அவர்களின் பாடல்கள் அமைந்திருக்கின்றன. அப்பர் சம்பந்தர் இருவரும் தோற்றிவித்த சைவசமய வளர்ச்சி இவர் காலத்தில் மிக்கிருந்தது. "சம்பந்தரும்

அப்பரும் ஆற்றிய அருந்தொண்டுகளால் சமணபௌத்தர் களின் வாழ்வு, வரவரக் குறைந்து விட்டாலும் எங்கேனும் எப்படி யேனும் அவை தலைதூக்க வழி ஏற்பட்டுவிடும் என்பதால் அவற்றைத் தடுத்துநிறுத்தும் தடுப்புச் சுவராக அமைந்ததுதான் சுந்தரது தேவாரம்"[6] என்று சுந்தரர் தேவாரம் புகழ்பெறுகின்றது

"ஆண்டவனைப் பாடுவதுடன் அவன் அடியவரையும் பாடும் மரபு இங்குத் தோற்றம் கொள்ளுகிறது மனிதனை யும் மன்னனையும் பாடுதலைக்கடிந்த இவரே அறுபத்து மூன்று தனியடியாரையும் ஒன்பது தொகையடியாரையும் பாடி, இறைவனுக்கு ஒத்த ஏற்றத்தை அடியவர்க்கும் அளிக்கின்றார்"[7] தொகை என்ற இலக்கிய வகையில் குறிக்கப்படும 'திருத்தொண்டத்தொகை'யானது சுந்தர ரால் இயற்றப்பட்டது 'அடிமை' என்று கூறித்தடுத்தாட் கொள்ள வந்த இறைவனை உணராது 'நான் உனது அடிமை இல்லை' என்று கூறிப் 'பித்தன்' என்று கூறி இகழ்ந்த சுந்தரர், இறைவன் எனறுணர்ந்து இறைவனுக்கு மட்டுமல்லாது இறையடியவர்கள் அனைவருக்கும் அடிமை என்று கூறும் வகையிலேயே அப்பதிகத்தைப் படைத் துள்ளார்

'தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று தொடங்கிப் பதினொரு பாடல்களால் இயன்றதாக இப்பதிகம் அமைந்துள்ளது.

இவ்வாறே ஏனைய பதிகங்களும் அமைந்துள்ளன. புலவர்களுக்கு, இவர் உபதேசம் செய்யும் பாங்கில் அமைந்துள்ள பதிகங்கள் உபதேச இலக்கியங்களுக்குத் தோற்றுவாயாகியுள்ளன. இறைவனைப் பாடுவதை இன்பமாகக் கருதிய இவர் புலவர்கள் வீணில் மனிதரைப் பாடி காலங்கடத்துவதைத் தவிர்க்கவே புலவர்களுக்கு உபதேசம் செய்கின்றார்.

மாணிக்கவாசகரின் பாடல்களில் இறைவனின் பேரன்பில் மூழ்கித்திளைத்த தன்மையே பெரிதும் பேசப் படுகின்றது. மகளிர் மேற்கொள்ளும் நோன்புகளும் விளையாட்டுகளும் இவரது பாடல்களில் சிறப்பிடம் பெறுகின்றன. இவர் இறைவன் ஒருவனையே தம் பாடு பொருளாகக் கொண்டு பாடியுள்ளார். ஏனையோரைப் பற்றிய செய்திகள் இவர் பாடல்களில் மிக அரிதாகவே இடம் பெறுகின்றன. "மகளிர் நோன்புகளும் விளையாட்டு களும் களனாகக்கொண்டு, பக்தி நெறியினை அறிமுகப் படுத்தி அறிவுறுத்தி அவரிடையே பரப்பி வளர்த்துவதைப் பாவைப்பாடலும் அம்மானை, சுண்ணம், சாழல், உந்தி, ஊசல் போன்ற பல பகுதிகளும் வெளிப்படுத்துகின்றன"[8].

மகளிரும் இறைவனிடம் பக்திகொண்டு விளங்க வேண்டும் என்ற நோக்கத்திலேயே பல வகைகளில் பாடல் களைக் கீழ்க்கண்டாங்கு எழுதியிருக்கிறார். திருவெம்பாவை, திருவம்மானை, திருப்பொற்சுண்ணம், திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருப்பொன்னூசல் என்னும் பத்துள் திருச்சாழல் ஒழிய ஏனையவை அவரால் பாடப்பட்டன என்றுரைப்பர். திருச்சாழலாவது, பௌத் தருடன் வாதிட நேர்ந்தபோது இலங்கை மண்ணின் ஊமை மகளைப் பேசச்செய்து இறைவனின் (சிவனின்) பெருங் கருணைத் திறத்தையும் கூறச்செய்ததாகக் குறிப்பர். சாற்றுதல் என்னும் பொருளில் 'சாழல்' அமைவதாகவும் குறிப்பர்.

"அன்னைப்பத்து அடிகள்தம் அருமைப் புதல்வியை நோக்கி அருளிச் செய்தாராகல் வேண்டுமெனவே கருதற்பாலதாயிருக்கிறது. இளஞ்சிறார் தம் அன்னையை நோக்கிச் கூறுவதாக அடிகள், அதனை அருளிச்செய்திருப் பதே அதற்குச் சான்றாமென்க. சிவபிரான் தன் அளப்பரிய

அருட்பெருமைகளை அடிகள் எடுத்தோதக்கேட்ட அவர்தம் மனைவியார் தாமும் அப்பெருமான்மாற் பேரன்புமீதூரப் பெற்றாராதல் என்பது திருவெம்பாவைப் பாடல் 15ஆல் விளங்குகிறது''.[9] இறைவனின் உபதேசங்களே மாணிக்க வாசகரின் வார்த்தை, விண்ணப்பம், பிரார்த்தனை போன்ற பதிகங்கட்கு அடிப்படையாகியுள்ளன.

இசைப்பா, பல்லாண்டு என்ற இரு இலக்கியங்களுக்கு வழிவகுத்தவர்கள் ஒன்பதாந்திருமுறை பாடிய அருளாளர் கள் ஆவர். இவர்கள் பாடிய இசைப்பாவே இன்றளவும் தனிச்சிறப்புடையதாய் விளங்குகின்றது. இசைப்பாவி னுள்ளே இறைவனின் அடிமுதல் முடியை வருணிக்கும் 'பாதாதிகேச' இலக்கிய வடிவம் காணப்படுகின்றது. திருவாலியமுதனார், திருமாளிகைத் தேவர் பாடிய இரண்டு பாதாதிகேசங்களுமே தில்லையில் அருளப் பெற்றவையாதலால் அவை இறைவனின் காற்சிலம்பிற்கு முதலிடங்கொடுத்ததில் வியப்பில்லை.

திருமூலரின் திருமந்திரம் சைவத்தத்துவங்களை உலகுக்கு அளிப்பதில் முன்னோடியாக நிற்கின்றது. பதினொராந் திருமுறையைப் பிரபந்தமாலை என்றே வழங்குகின்றனர். அந்தப் பிரபந்தமாலையில், பதின்மூன்று ஆசிரியர்கள் பாடிய பாடல்களின் தொகுப்புகள் காணப்படுகின்றன. பதினொராந்திருமுறையில் காரைக்காலம்மையார் – தன் வாழ்க்கையில் ஏற்பட்ட அனுபத்தினால் வாழ்வைத்துறந்து என்புருக்கொண்டு இறைவனாடும் இடுகாட்டைத் தன் இடமாக அடைந்து–பாடியுள்ள மூத்த திருப்பதிகங்கள் அவரின் சிறப்பினையும் இறையுணர்வினையும் உணர்த்த வல்லன. முதன்முதலில் அந்தாதி பாடியவரும் இவரே. நம்பியாண்டாரின் அந்தாதிக்குச் சுந்தரரின் திருத் தொண்டத்தொகை அடிப்படையாகியது. இவர்கள்

இருவர்தம் பாடல்களுமே சேக்கிழாரின் புராணத்திற்கு அடிப்படையாகின.

திருமுறைகளில் காணலாகும் ஒவ்வொரு பாடலும் இலக்கியவடியும் தமக்மென்று தனித்ததோர் பின்புலத்தை உடையனவாக உள்ளன. ஒவ்வொரு வகையும், கூறும், இறையன்பர்களின் அனுபவத்தைக் கூறுவனவாக உள்ளன. மேற்கூறியவை சிற்சில எடுத்துக்காட்டுகளேயாகும் திருமுறைகளில் காணலாகும் இலக்கியங்களின் பின் புலத்தைத் தனித்ததோர் ஆய்வு செய்யுமளவிற்குச் செய்தி கள் விரிந்து பரந்து கிடக்கின்றன. விரிவஞ்சியே ஒருசில மட்டும் சான்றாக்கப்பட்டுள்ளன. அவற்றுள் உறையும் இறைமாண்புகள் உய்த்துணரத்தக்கன.

## பகுதி-2 - குறிப்புகள்

1. ஆ. வேலுப்பிள்ளை – தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பக். 107, 108
2. மேலது, ப 108.
3. ச.வே. சுப்பிரமணியன், தமிழிலக்கிய வகையும் வடிவும் ப. 170
4. பு.இரா. திலகவதி, (20-ஆவது கருத்தரங்க ஆய்வுக் கோவை தொகுதி-1,) 'திருநாவுக்கரசரின் அகப்பாடல்கள்', ப 116.
5. சா. கணேசன், (திரு. வேங்கடாசலம் செட்டியார் அவர்கள் 60-ஆம் ஆண்டு நிறைவுவிழா மலர்,) 'அப்பர் அருளிய அப்பன்', ப. 228.
6. தெ. முருகசாமி, (தமிழ்மாருதம்,) 'திருத்தொண்டத் தொகை', ப. 31. திசம்பர்-93
7. ச வே. சுப்பிரமணியன், முதற்சுட்டிய நூல், ப. 172.
8. மேலது, ப. 176.
9. மறைமலையடிகள், மாணிக்கவாசகர் வரலாறும் காலமும், முதல் பகுதி ப. 22.

# முடிவுரை

திருமுறைகளில் இறைமாண்பு (சிற்றிலக்கிய நோக்கில்) எனுந்தலைப்பில் இதுவரை காணப்பெற்று செய்திகள் தொகுக்கப்பட்டு முடிவுரையாக இவண் கொடுக்கப் படுகின்றன.

திருமுறைகளில் காணலாகும் மொத்த இலக்கியக் கூறுகளின் எண்ணிக்கை – 79 ஆகும்.

இவையே,

பொருள் நிலையால் பாகுபடுவன – 34 வகைகள்
சித்திரகவிகளை அடிப்படையாகக்கொண்டு
வளர்ந்தவை – 9
எண்பெயரில் அமைந்தவை – 9
நாட்டுப்பாடல் வடிவில் அமைந்தவை – 9
மாலை எனும் பின்னொட்டுடன் அமைபவை – 7
யாப்பால் பெயர் பெற்றவை – 11
என்று பிரிந்து அமைகின்றன.

இவ்வாறு அமையும் இலக்கிய வடிவங்களை மூன்று பிரிவுகளாகப் பிரித்துக் காணமுடியும்.

1. முன்னரே இருந்த இலக்கியக் கூறுகளை அடிப்படையாகக்கொண்டு உருவாக்கப்பெற்றவை – 38 வகைகள்.

2 இக்காலத்திலேயே புதிய இலக்கிய வடிவங்களாகத் தோன்றி வளர்ந்தவை – 35 வகைகள்.

3. சிறிய இலக்கியக் கூறாக இருந்து பின்னாளில் குறிக்கத்தக்க இலக்கிய வகையாக வளர்ச்சியுற்றவை – 6. என்று பெரும்பான்மையின் அடிப்படையில் இலக்கிய வடிவுகளை இனங்காணலாம்.

அவ்வாறான இலக்கிய வடிவுகள் வழி பெறக் கூடிய செய்தி களில் சில:

1. சிற்றிலக்கியங்களின் தோற்றத்திற்கும் வளர்ச் சிக்கும் பன்னிரு திருமுறைகளும் தொண்டாற்றி யுள்ளமை புலனாகின்றது
2. இறைவனைப் பாடுதலே நோக்கமாக இருப்பினும் அதனையும் ஒரு குறிப்பிட்ட வடிவில் - வகையில் - யாப்பில் - பண்ணில் பாடிப் புதுமை செய்தவர்கள் இறையடியார்கள். ஏனெனில் இறைவனும் பல பெயரினன் பல்லுருவினன் அதனால்.
3. 'அகக்காதல்' மரபானது 'பக்திக்காதல்' மரபிலும் அவ்வாறே அதே பொருண்மையைக் கொண்டு அமைந்துள்ளமையைக் காணமுடிகின்றது.
4. ஞானசம்பந்தரும், மாணிக்கவாசகரும், மிகுதியான இலக்கியக் கூறுகளினைச் சமைத்துள்ளனர்.
5. குறித்துக் காட்டப் பெற்ற சித்திரகவிகளில் ஒன்றைத் தவிர ஏனைய அனைத்தையும் பாடிச் சித்திரகவிகளால் இறைவனை வழிபட்டவர் ஞானசம்பந்தரேயாவர். அவருக்குச் சொல் விளையாடல்கள் எளிதில் கைவந்துள்ளமையை இதன்மூலம் அறிய முடிகின்றது.
6. பெண்களையும் உளப்படுத்தி இலக்கியம் படைத்த பெருமை மாணிக்கரைச் சாரும்.
7. 'திருவாசகத்துக்கு உருகாதார் ஒருவாசகத்துக்கும் உருகார்' எனும் பயில்மொழியைத் திருவாசகத்தில் அமையும் பதிகப்பெயர்கள்கூடச் சுட்டி நிற்கின்றன. அச்சப்பத்து, அச்சோபத்து, வாழாப்பத்து, பிரார்த்தனைப்பத்து இவை போன்றவற்றைச் சான்றாக்க முடியும்,

8. 'தாண்டகம்' எனும் யாப்பு வடிவை அறிமுகப் படுத்தி அதில் இலக்கியமும் படைத்துத் 'தாண்டக வேந்தர்' என்ற சிறப்பையும் பெற்றவர் அப்பர் என்பது குறிக்கத்தக்கது.

9 அப்பர் தம் பாடல்கள் அனைத்துமே பெரும்பாலும் திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் போன்ற யாப்பு வடிவங்களுக்கே முதன்மை கொடுத்துள்ளமை கருதத்தக்கது.

10 அங்கமாலை என்பது உறுப்புகளின் வருணையாக அமையாது மாந்தரின் உறுப்புகள் இறைவனைத் தொழுதற்கே படைக்கப்பட்டுள்ளன என்று கூறாமல் கூறும் அப்பரின் திறம் போற்றுதற்குரியது.

11. சுந்தரர் வீணில் மனிதரைப்பாடிக் காலங்கடத்தும் புலவர்களுக்கு உபதேசம் செய்கின்ற போதிலும் இறைவனுடன் இறையடிவர்களையும் வரிசைப் படுத்தி உரைக்கும் முயற்சிக்குத் தோற்றுவாய் செய்துள்ளார்.

12. மாணிக்கவாசகரின் அம்மானை – அம்மானைக் கதைப்பாடலுக்கும், சாழல் – இலாவணிக்கும், ஏசலுக்கும் அடிப்படையாகியுள்ளமையை உணர முடிகின்றது.

13. அந்தாதி, பதிகம், இரட்டைமணிமாலை போன்றவை இக்காலத்தில் பல்கிப் பெருகியுள்ள மைக்குத் திருமுறைகளே அடிப்படையாகியுள்ளன.

14. திருமுறைகள் இசைப்பாடல்களால் ஆகியுள்ள போதிலும், இசைப்பா' என்ற பெயருக்கும் – இலக்கிய வகைக்கும் உரியதாக அமையும் ஒன்பதாந் திருமுறையின் சிறப்பு அறியத்தக்கதாகும்.

15. தொல்காப்பியரின் 'நிறைமொழிமாந்தரின் மந்திர மானது' திருமூலரின் வாக்கால் வெளிப்பட்டு உள்ளது.

16. வழக்குஞ்செய்யுளும் நாடிப்புராணம் படைத்த பெருமைக்கும், தொண்டர்களின் புகழினைப் பரப்புவதற்கென்றே இலக்கியம் படைத்த பெருமைக்கும் உரியவர் சேக்கிழார் ஆவார்.

முதல் ஒன்பது திருமுறைகளும் சிவனையே தம் பாடு பொருளாகக் கொண்டுள்ளன. பத்தாந்திருமுறை பொது நிலையில் அமைகின்றது. பதினொராந் திருமுறை சிவன், விநாயகர், முருகன் ஆகியோரின் துதியையும் பெற்றுள்ளது. பன்னிரண்டாந்திருமுறையில் 'சிவன்' எனும் முழு முதற் பொருளை வணங்கிய அடியவர்கள் பாடப்பட்டுள்ளனர்.

17. திருமுறைகளில் காணப்பெறும் யாப்பு வேறுபாடு கள் ஆக்கியோரின் வித்தகங்களைச் சுட்டுகின்றன. அவர்தம் உளப்பாங்கினை இதன்வழி அறிய முடிகின்றது.

18. ஒரு குறிப்பிட்ட வட்டாரம், ஒரு குறிப்பிட்ட தொழில்சார் ஓசை போல்வன அடிப்படைக்கூறாய் அமைந்து நிற்கப் புதிய வகைகளில் அடியார்கள் இலக்கியங்களை நல்கியிருப்பதை உணரமுடி கின்றது.

19. இவ்விலக்கிய வகைகளின் தோற்றுவாய்களுக்கான பின்புலங்கள் பல்திறத்தனவாக அமைகின்றன. விரிந்த நிலையில் ஆயும் வண்ணம் அவற்றின் அகலநீளங்கள் அமைந்தன.

20. சிற்றிலக்கிய வகையெனக் கருதி ஓதாத இவர்களின் கூறுகள்சில பிற்காலத்து அருமைமிகு சிற்றிலக்கிய

வகையாய் மலர்ந்துள்ளமை இவ்வடியாரின் சதுரப் பாட்டை விளக்கவல்லன.

21. பன்னிரு திருமுறைகள் பல்வேறு கோணங்களில் சிற்றிலக்கிய மரபுகளைப் பேணியும், புதியதாய் எழுப்பியும், பிற்காலத்தார்க்குக் கருவியாய் அமைந்தும் படிப்பாருக்கு இறையருள் போல் இனிமை சேர்க்கின்றன. அப்பாடல்களை 'நாம் கலந்து பாடுங்கால்' தமிழின் பெருமையையும் இறையின் அருமையையும் ஒருசேரப் பெறலாம்!

பண்ணியசெந் தமிழறியேன் கவியேன் மாட்டேன்
எண்ணோடு பண்ணிறைந்த கலைக ளாய
தன்னையுந்தன் திறத்தறியாப் பொறியி லேனைத்
தன்திறமும் அறிவித்து நெறியுங் காட்டி
அன்னையயும் அத்தனையும் போல அன்பாய்
அடைந்தேனைத் தொடர்ந்தென்னை ஆளாக்
கொண்ட
தென்எறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன்
நானே.

(அப்பர் - திருமுறை: 6: திரு எறும்பியூர்-திருத்தாண்டகம்)

## துணை நின்ற நூல்கள்


1. அருணாசலம். மு., தமிழிலக்கிய வரலாறு பதினோரம் நூற்றாண்டு, காந்தி வித்தியாலயம் மாயூரம் (தஞ்சை ஜில்லா) 1971.

2. ______ தமிழிலக்கிய வரலாறு பத்தாம் நூற்றாண்டு, காந்தி வித்தியாலயம் மாயூரம் (தஞ்சை ஜில்லா) 1972.

3. அழகப்பன். வெ. சு., பதினொராந் திருமுறைத்திறன், கண்ணம்மை பதிப்பகம் காரைக்குடி-1 1987 (முதற்பதிப்பு)

4. அறிவுடைநம்பி. ம. சா., திருந ாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள், மதுரை-11

5. அறிவுநம்பி. அ., தமிழர் மறந்த தமிழர் மரபுகள், சபாநாயகம் அச்சகம் சிதம்பரம்-1 1991 (முதற் பதிப்பு).

6. ______ தமிழரின் வழிப்பாட்டுச் சிந்தனைகள். சபாநாயகம் பிரிண்டர்ஸ் சிதம்பரம்-1 1990 (முதற்பதிப்பு)

7. இரத்தின சபாபதி. வை., திருமுறைப் பெருமை, தொகுப்பியல் துறை தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் டிசம்பர்-1991

8. இராமநாதபிள்ளை. ப., இராமசாமி. அ. பதிப்பாசிரியர்கள் திருத்தொண்டர்மாக்கதை, கழக வெளியீடு 1970

9. இளங்குமரன். இரா., இலக்கியவகை அகராதி, மணிவாசகர் பதிப்பகம் சிதம்பரம் 1985 (முதற் பதிப்பு)

10. இளவரசு. சோம., பரணி இலக்கியம், மணிவாசகர் பதிப்பகம் சிதம்பரம் 1978 (முதற் பதிப்பு)

11. கலியபெருமாள். பி., அந்தாதி இலக்கியங்கள், மணிவாசகர் நூலகம் சிதம்பரம் 1967 (முதற் பதிப்பு)

12. கோபாலய்யர். டி. வி., பதிப்பாசிரியர் ஞானசம்பந்தர் தேவாரம், பிரெஞ்சிந்திய பண்பாட்டுக் கழக வெளியீடு 1984 (முதற்பதிப்பு)

13. ______ தேவாரம் அப்பரும் சுந்தரரும், பி.இ.ப. கழக வெளியீடு 1985 (முதற்பதிப்பு)

14. சஞ்சீவி. நா., தொகுப்பாசிரியர் தெய்வத் தமிழ, (இரண்டாம் பொதுநிலைப்பத்து கருத்தரங்கக் கட்டுரைகள்) சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு 1975 (முதற்பதிப்பு)

15. சண்முகம் பிள்ளை. மு., சிற்றிலக்கிய வகைகள், மணிவாசகர் நூலகம் 1982 (முதற்பதிப்பு)

16. சித்தலிங்கய்யா. தி.பி., மெய்யுணர்வு மலர்கள், ஜெயா வெளியீடு 39, இரண்டாவது தெரு, எல்லப்பா நகர் காஞ்சிபுரம் – 631 501 முதற்பதிப்பு – ஜூன் 1993

17. சுப்பிரமணியன். ச. வே., தமிழ் இலக்கிய வகையும் வடிவும், தமிழ்ப்பதிப்பகம் பெருங்குடி, சென்னை 1984 (முதற்பதிப்பு)

18. சுப்பிரமணியம். கே., பதிப்பாசிரியர் பதினோராந் திருமுறை, திருப்பனந்தாள் ஸ்ரீ கார்மட வெளியீடு 1972 (இரண்டாம் பதிப்பு)

19. செயராமன். நா. வீ., சிற்றிலக்கிய அகராதி, பாரி நிலையம் சென்னை 1983 (முதற்பதிப்பு)

20. ______ சதக இலக்கியம், மணிவாசகர் நூலகம் சிதம்பரம் 1978 (மூன்றாம் பதிப்பு)

21. துரைசாமி. சு., சைவ இலக்கிய வரலாறு (கி. பி. 7 முதல் 10-ம் நூ.வரை), அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1958 (முதற்பதிப்பு)

22. நாராயண வேலுப்பிள்ளை., திருவாசகமும் திருவாய் மொழியும், அரசு பதிப்பகம் சென்னை 1985 (முதற் பதிப்பு)

23. முத்துராசன், கு , சைவசமய பிள்ளைத்தமிழ் நூல்கள் - ஒரு திறனாய்வு வசந்தசெல்வி பதிப்பகம் தர்மபுரி 1988 (முதற்பதிப்பு)

24. முத்துச்சண்முகன், நிர்மலா மோகன், சிற்றிலக்கியங் களின் தோற்றமும் வகையும், முத்துப் பதிப்பகம் மதுரை 1979 (முதற்பதிப்பு)

25. வரதராசன். மு., தமிழ் இலக்கிய வரலாறு சாகித்திய அகாதெமி வெளியீடு

26. வரதராஜன். சி., திருவாசகம், விரிவுரை பழனிப்பா பிரதர்ஸ் சென்னை 1987 (முதற்பதிப்பு)

27. வெள்ளைவாரணன். க., பன்னிரு திருமுறை வரலாறு (முதல் ஏழு திருமுறைகள்), அண்ணாமலைப் பல்கலைக்கழகம் 1973

28. ______ பன்னிரு திருமுறை வரலாறு இரண்டாம் பகுதி (8-12) திருமுறைகள், அண்ணாமலைப் பல்கலைக்கழகம் சிதம்பரம் 1980

29. ______ ஒன்பதாந்திருமுறை திருவிசைப்பா திருப் பல்லாண்டு விரிவுரையுடன், கழக வெளியீடு சென்னை

30. ______ கழகப் புலவர்குழு, மூவர் தேவார திரட்டு, கழக வெளியீடு சென்னை 1986

31. ______ கழகத் தமிழ் அகராதி, கழக வெளியீடு சென்னை 1989 (6-ஆம் பதிப்பு)

32 வேலுப்பிள்ளை, ஆ., தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பாரி புத்தகப்பண்ணை திருவல்லிக்கேணி, சென்னை செப்டம்பர் - 1959

**இதழ்கள்**

சாம்பசிவனார். ச., தமிழ் மாருதம் (பொதி. 3) டிசம்பர்-93

**ஆய்வுக் கோவை**

இருபதாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை (தொகுதி-4) இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலை நகர் 1988 (சூன்)

**மலர்**

வேங்கடாசலம் செட்டியார் அவர்களின் 60-ஆம் ஆண்டு நிறைவு விழா மலர் டிசம்பர்-1966.

—❀—

